தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை—51

# இந்தியப் பொருளாதாரம்

## இரண்டாம் பகுதி

## (INDIAN ECONOMICS)

ஆசிரியர்கள்
ஜி. பி. ஜாதர் & கே. ஜி. ஜாதர்

தமிழாக்கம்
எம். லூர்துநாதன் எம்.ஏ.,
விரிவுரையாளர்
சிக்கைய நாயக்கர் மஹாஜனக் கல்லூரி,
ஈரோடு.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition — April, 1964.
B. T. P. No. 51

# INDIAN ECONOMICS—Part II

G. B. Jathar & K. G. Jathar

*Translation*:
M. Lourdunathan



PRICE Rs. 4-25.

This translation of INDIAN ECONOMICS by G. B. Jathar and K. G. Jathar is published by arrangement with the Oxford University Press.

*Printed by*
Muthukumaran Press,
14-A, Kuppier Street,
MADRAS-1.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்.)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர் களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண் டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்தி கரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகை யிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான இந்தியப் பொருளாதாரம்-II என்ற இந் நூல், தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 51ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 86 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# முன்னுரை

நம் நாடு சுதந்தரம் பெற்றுப் பத்தாண்டுகள் கழிந்தன. இக் காலத்தில் விளக்கவொண்ணு மாறுதல்கள் பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ளன. இவ்வாறு கடந்த பத்தாண்டுகளை ஆவேசம் மிக்க காலம் எனக் கூற லாம். தேசீய ஏற்றத் தாழ்வுகளைச் சீராக்க முயல்வதில் ஏற்படும் அவதிகளிலிருந்து வெளிப்படும் நடைமுறைப் பொருளாதார அமைப்பை, இந் நூலில் சித்திரித்துக் காட்டி யுள்ளோம். இன்று நம்நாட்டின் பொருளாதாரத் துறை யில் உள்ள எல்லாப் பகுதிகளையும் சற்றேறக்குறைய 600 பக்கங்களில் இப் புத்தகம் எடுத்துக் கூறியுள்ளது. இது பல்கலைக் கழக மாணவர்களுக்கெனச் சிறப்பாக எழுதப்பட்ட போதிலும் அரசியல்வாதிகளும், பொது நோக்குடையவர் களும், இதரரும் இதனைப் படித்துப் பயன்பெறலாம்.

பேராசிரியர் ஓ. எச். கே. ஸ்பேட் என்ற புவியியல் பேரறிஞர் விநோதமாகக் கீழ்வருமாறு கூறியுள்ளார்: 'உலகில், நினைக்கும் பிராணிகளில் இந்தியா சம்பந்தமான விவரங்களைப்பற்றி எழுதுபவர்களை ஒரு தனி வரிசையில் வைக்கலாம். ஏதோ சில உற்சாகமூட்டும் தகவல்கள் நீங்கலாகப் பொதுப்படையில் அவர்கள் அரசினர் குழுக்கள், தீர்வை விகித விசாரணைகள், விவரச் சுவடிகள் இவை போன்றவற்றை நுனிப்புல் மேய்வதுபோன்று மேலெழுந்த வாரியாகப் பாராமல், மேலும்மேலும் ஆராய்வார்கள். மூலத்தகவல்கள் எவ்வளவு சிறந்திருப்பினும் அவற்றிலுள்ள சத்தும் சுவையும் வரவரக் குன்றிவிடுகின்றன.'[1] இம்முறை யில் நம்மீது சாட்டப்பட்டுள்ள கடுமையல்லாத குற்றத்தை நாம் ஒப்புக்கொண்டு, நினைக்கும் பிராணிகள் வரிசையில் சேர்க்கப்படுவதற்கும் இசைகின்றோம். சென்ற சில ஆண்டு களாக அரசியலாரின் தகவல்களும், புள்ளி விவரங்களும்,

[1] இந்தியாவும் பாகிஸ்தானும் - ஜெனரல் அண்டு ரீஜினல் ஜ்யாக்ரபி, 1954.

ஏனைய அரசாங்கத் தொடர்புடைய குழுவினரின் தகவல் களும் பெருவாரியாக வந்து குவிகின்றன. இவை அனைத் தையும் நாம் எடுத்துக்கொள்ள இயலவில்லையெனினும் தவிர்க்க வியலாத முக்கியப் பகுதிகளைமட்டிலும் இவண் காட்டியுள்ளோம்.

இதனுசிரியர்கள், தார்வார் அகில இந்திய ரேடியோவில் பணியாற்றும் திரு. எஸ். பி. கெர், பி.காம்., அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளார்கள். அவர் இப் புத்தகத்தில் 17, 18, 20, 22ஆம் அதிகாரங்களை உருவாக்க உதவி யுள்ளார். அதிகாரங்கள் 17-ம் 18-ம் அவர் எழுதிய அமைப்பிலேயே வெளியிடப்பட்டுள்ளன.

ஜி. பி. ஜாதர்,

பூனு, 1957.

கே. ஜி. ஜாதர்

பொருளடக்கம்

## இரண்டாம் பாகம்

# 22. நிதியும் வரிவிதிப்பும்

1. **மத்திய, மாநில அரசாங்கங்களுக்கிடையே நிதித் தொடர்புகளின் தோற்றம்: நான்கு காலவரைகள்:** இந்திய நிதி அமைப்பு, எல்லா அதிகாரங்களும் மத்திய அரசாங்கத்தின் கைகளில் ஒருங்கே குவிக்கப்பட்ட ஓர் அமைப்பாக இல்லாது, இணைப்பரசியலுக்கு இணங்கப் படிப்படியாக உருப்பெற்றுள்ளது. 1952ஆம் வருடத்திய நிதிக்குழு தனது அறிக்கையில் இத் தோற்றத்தின் காலத்தை நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளது[1]. (i) 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் அமலுக்கு வருமுன்னிருந்த 60 வருடங்கள். (ii) 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் அமலிலிருந்த காலமான, 1921ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து 1937ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31ஆம் தேதி வரை. (iii) 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் அமலிலிருந்த காலம்; அதாவது 1937ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து, 1950ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டம் அமலாக்கப்பட்ட காலம் வரை. (iv) இந்திய அரசியல் சட்டத்திற்குப்பின் வரும் காலம்.

2. **முதற் காலம்: நிதிமாற்றமும் 'பிரிக்கப்பட்ட தலைப்புகளும்' (1860—1921):** 1871 ஆம் ஆண்டிற்குமுன் மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களின் வருமானம், செலவு ஆகியவைமீது முழு அதிகாரம் கொண்டிருந்தது. நாட்டின் வருமானம் முழுவதும் முதலில் மத்திய அரசாங்கத்தின் கணக்கில் சேர்க்கப்பட்டது. ஆரம்ப காலத்தில் மாநிலங்கள் தங்கள் செலவை மேற்கொள்ள நிர்ணயிக்கப்பட்ட பொருளுதவி அளிக்கப்பட்டது. இதன் விளைவாக மத்திய நிதி

[1] Report of the Finance Commission, 1952, ch. II.

நிலைமையில் நிலையின்மையும், மாநில அரசாங்கங்களில் பொறுப்பற்ற செலவும், மத்திய மாநில அரசாங்கங்களிடையே நட்புக் குறைவும் உண்டாயின. சர் ஜான் ஸ்டாச்சி கூற்றுப்படி, 'அரசாங்க வருமானத்தின் பங்கீடு சச்சரவு உண்டாக்கக்கூடிய நிலைக்குத் தாழ்ந்துவிட்டது. அதில் மூர்க்கத்தனமாகச் செயலாற்றுவோருக்குப் பகுத்தறிவுக்கு ஒவ்வாத விதத்தில் பலன் கிடைத்தது. மாநிலப் பொருளாதாரம் மாநிலங்களுக்கு எவ்வித நன்மையையும் பயக்காததால், வீண் செலவைக் குறைப்பதற்கான தூண்டுதல் மிகக்குறைந்த அளவாக ஆக்கப்பட்டது; மாநிலத்தின் வருமானம், மாநிலத்தின் முன்னேற்றத்திற்கு வழிகோலவில்லையாதலால், வருமானத்தைப் பெருக்கும் முயற்சியும் மிகக் கீழான நிலைக்குக் கொண்டுவரப்பட்டது.' இந்த அமைப்பானது 'பயனற்ற ஒருமைப்பாட்டையும், செருக்கு மிகுந்த நாகரிகத்தையும்' கொண்டதாகக் குறிக்கப்பட்டது. இது ஒரு கண்டத்தை ஒத்த அளவையும், பல்வேறு பிராந்திய வேற்றுமைகளையும் கொண்ட ஒரு நாட்டிற்கு முற்றிலும் உகந்தது ஆகாது. 1871ஆம் ஆண்டு மேயோ பிரபு (Lord Mayo), மாநிலத் தீர்வுகளைப் புகுத்தி இக் குறைபாடுகளை ஓரளவு அகற்ற முயன்றூர். இந்த அமைப் பின்கீழ், பிராந்தியச் சார்புள்ள சில செலவினங்கள் மாநிலங்களிடம் ஒப்படைக்கப்பட்டன. உதாரணமாகக் காவல் துறை, கல்வித் துறை, சாலைகள், மராமத்துத் துறை, பதிவுத்துறை, மருத்துவத் துறை, சிறைச்சாலைகள் முதலியன. இத் துறைகளின் நிர்வாகத்திற்காக துறைகளின் வருமானத்தைத் தவிர, மாநிலங்களுக்கு ஆண்டுதோறும் நிர்ணயிக்கப்பட்ட மொத்தத் தொகை நிதியுதவியாகக் கொடுக்கப்பட்டது. பற்றுக்குறை இருக்குமாயின், பிராந்திய வரிகள் மூலம் அது சரிக்கட்டப்பட்டது. எனினும், இந்த மாற்றம் மாநிலங்களின் வருமானத் தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை; மாநிலங்களின் பொருளாதார நிர்வாகத்திற்கு அது ஊக்கமும் அளிக்கவில்லை. 1877ஆம் ஆண்டு லிட்டன் பிரபுவின் (Lord Lytton) அதிகாரத்தைப் பன்முகப்படுத்தும் இன்னெரு முயற்சியும் எடுத்துக்கொள்ளப்பட்டது; மீதமிருந்த மாநிலங்களைச் சார்ந்த செலவினங்களும் மாநிலங்களுக்கு மாற்றப்பட்டன. உதாரணமாக நிலவருமானம், ஆயத் தீர்வை, முத்திரைத் தீர்வை, பொது நிர்வாகம், சட்டம், நீதி நிர்வாகம் முதலியன. அந்தந்தத் துறைகளின் வருமானம், பழைய மொத்த நிதியுதவித் தொகை முதலியவற்றைத் தவிர, சில வருமான இனங்களும், உதாரணமாக, ஆயத்தீர்வை, முத்திரைத் தீர்வை, சட்டம், நீதி நிர்வாகம் முதலியன மாநிலங்களுக்கு மாற்றப்பட்டன. எனினும், இந்த ஏற்பாட்டினுல் மாநிலங்கள் ஆண்டுதோறும் வழக்கமாகப் பெறும் மொத்தத் தொகையான நிதியுதவியை விலக்க முடியவில்லை. பங்கீட்டின்போது தங்களுக்கு எவ்வளவு அதிகமான பங்குபெற முடியுமோ அதைப் பெற ஏற்படும்

சண்டையும் நீடித்தது. 1879ஆம் ஆண்டு, நில வருமானத்தில் அஸ்ஸாமிற்கு ஒரு பங்கு கொடுக்கப்பட்டது. இந்தப் பங்கு 'பிரிக்கப் பட்ட வருமானக் கொள்கை, அல்லது 'பிரிக்கப்பட்ட வருமான இனங்கள்' என அழைக்கப்பட்டது. இக் கொள்கை 1882-ல் எல்லா மாநிலங்களுக்கும் பரப்பப்பட்டது. நிர்ணயிக்கப்பட்ட மொத்த நிதி யுதவித் தொகைகள் ஒழிக்கப்பட்டன. வருமானப் பங்கீடு ஓரள விற்குத் திருத்தி அமைக்கப்பட்டது. அதன் விளைவு பின்வரும் மூன்று விதப் பாகுபாடுகளாகும்: (i) பேரரசு நிலைக்குரிய இனங்கள்: வாணிபத் துறைகளின் இலாபங்கள், கஞ்சா, உப்பு முதலிய இடம் பற்றி இல்லாத நிலையாக உள்ள வருமான வகைகள்; (ii) மாநில இனங்கள்: பொதுத்துறைகளும் மாநிலப் பணிகளும்; (iii) பிரிக்கப் பட்ட இனங்கள்: தீர்வை, மதிப்பீடு செய்யப்பட்ட வகைகள், முத்திரைத் தீர்வை, காடுகள், பதிவுத் துறை முதலியன.

நிர்ணயிக்கப்பட்ட பண உரிமை மாற்றத்துடன், நில வரு மானத்தில் ஒரு குறிப்பிட்ட சதவீதமும் மாநிலங்களுக்குத் தங்கள் பற்றுக்குறையைச் சரிக்கட்ட மாற்றப்பட்டது. இந் நிலைமை ஒவ் வோர் ஐந்து வருட காலத்திலும் சரிபார்க்கப்பட்டு இந்தக் கோட் பாடுகளின் வழியில் 1887, 1892, 1897ஆம் ஆண்டுகளில் புதிய தீர்வுகள் செய்யப்பட்டன. நிலையின்மையை அகற்றவும், தொடர்ச் சியை உறுதிப்படுத்தவும் அவைகள் 1904ஆம் ஆண்டு பாதி நிலை யானவைகளாக அறிவிக்கப்பட்டன. 1912ஆம் ஆண்டு அவைகள் நிலையானவைகளாக அறிவிக்கப்பட்டபொழுது கீழ்க்கண்ட பங்கீடு தீர்மானிக்கப்பட்டது: வருமானப் பகுதியில் ஒரு குறிப்பிட்ட மாநிலத்திற்கு அளிக்கப்படமுடியாத வருமானங்களை மத்திய அர சாங்கம் தனது உபயோகத்திற்காக வைத்துக்கொண்டது. இவைகள் பேரரசு நிலைக்குரிய வருமானங்கள் என்று அழைக்கப்பட்டன. உதாரணமாகக் கஞ்சா, இருப்புப்பாதைகள், சுங்க வரிகள், உப்பு வரி, நாணயச் சாலை, நாணயமாற்று, அஞ்சல், தந்தித் துறைகள் முதலிய வற்றின் வருமானங்கள், இராணுவ வருமானங்கள், சமஸ்தானங்கள் கட்டிய கப்பங்கள் முதலியன. மீதியிருந்தவற்றில் சில முழுதும் மாநிலங்களுக்கே உரியனவாய் இருந்தன. உதாரணமாகக் காட்டுத் துறை, ஆயத் தீர்வை (பம்பாயிலும் வங்காளத்திலும்), பதிவுத் துறை, மற்றும் மாநிலத் துறைகளின் வருமானம், உதாரணமாகக் கல்வி. சட்டம், நீதி நிர்வாகம் முதலியன. கடைசியாக நில வருமானம், வருமான வரி, ஆயத் தீர்வை (பம்பாய், வங்காள மாநிலங்களைத் தவிர), நீர்ப்பாசனம், முத்திரைத் தீர்வை முதலியவை அடங்கிய குறிக்கப்பட்ட வருமான இனங்களின் வகை ஒன்று இருந்தது. இவைகளின் வருமானங்கள் மத்திய, மாநில அரசாங்கங்களிடையே கூறப்பட்ட விகிதங்களில் அநேகமாகச் சமமாகப் பிரிக்கப்பட்டன.

ஆனால், ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனியாகத் தீர்மானிக்கப்பட்டது. செலவினத்திலும் சற்றேறக்குறைய இதேபோன்றதோர் ஏற்பாடு இருந்தது. பஞ்சங்களினால் ஏற்படும் செலவினங்களைப் பங்கீடு செய்யச் சிறப்பானதோர் ஏற்பாடும் இருந்தது. இந்த அமைப்பின் இன்னொரு முக்கிய, சிறப்பான அம்சம் என்னவென்றால், மாநிலங்கள் பிரிக்கப்பட்ட இனங்களிலிருந்து வரும் வருமானம் மூலம் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாதபொழுது அவை பண அளிப்பால் நிறைவு செய்யப்பட்டன. இப் பண அளிப்புத்தொடர்ந்து அளிக்கப்படுவன, தொடர்ந்து அளிக்கப்படாதன என இருவகைப்படும்.

**3. இரண்டாவது காலம் (1921—1932): (i) வருமானப் பிறப்பிடங்களைப் பிரித்தல்:** நிதித் தன்னாட்சி உரிமையை நிறுவும் நோக்கத்தின் முதற்படியாகப் பிரித்த இனங்கள் ஒழிக்கப்பட்டு, 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் விளைவாக மத்திய, மாநில வருமான இனங்கள் முழுமையாகப் பிரிக்கப்பட்டன. அவ்வாறு பிரிக்கப்பட்ட இனங்களுள் வருமான வரி, பொது (அல்லது வாணிப) முத்திரைத் தீர்வை முதலியன மத்திய அரசாங்கத்திற்கும், ஆயத் தீர்வை, நீதித் துறை, முத்திரைத் தீர்வை, நில வருமானம், நீர்ப்பாசன வருமானம் முதலியன மாநில அரசாங்கங்களுக்கும் கொடுக்கப்பட்டன. இது மத்திய அரசாங்கத்திற்கு 993 இலட்ச ரூபாய்கள் பற்றுக்குறையை விளைவித்தது. ஆகவே, இது மாநில அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்திற்குப் பங்கு அளித்து உதவவேண்டுமென்ற ஒரு புதுக் கருத்துக்கு வழி வகுத்தது. **(ii) மெஸ்டன் (Meston) தீர்ப்பு:** 1920 ஆம் ஆண்டு மெஸ்டன் பிரபுவின் தலைமையில் மாநிலங்களின் பங்கு உதவியைப்பற்றி ஆலோசனை கூற ஒரு குழு அமைக்கப்பட்டது. இக்குழுவின் பரிந்துரைகள் மெஸ்டன் தீர்ப்பு என வழங்கப்படுகின்றன. இத் தீர்ப்பில் அக்குழு நிதி, நிர்வாகக் காரணங்களுக்காகப் பொது முத்திரைகள் மாநிலங்களுக்கு மாற்றப்படவேண்டும் எனக் கூறியது. அக்குழு மேலும் கூறியதாவது: (அ) துவக்க உதவிப் பங்கு, திட்டமான உதவிப் பங்கு ஆகிய இருவகையான பங்குகள் அடங்கிய திட்டத்தை மேற்கொள்ள வேண்டும். 1921-2ஆம் ஆண்டுகளில் துவக்க உதவிப் பங்கானது, பிரிக்கப்பட்ட இனங்கள் ஒழிக்கப்பட்டதன் விளைவாக மாநிலங்களுக்குக் கிடைத்திருக்கும் அதிகப்படியான செலவு செய்யும் திறனை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கவேண்டும். திட்டமான உதவிப் பங்கு (ஏழு வருடங்களில் அடைய வேண்டியது), மக்கள் தொகை, வருமானவரி வரவுகள், உப்பு, துணி வகைகளின் நுகர்வு, விவசாயம், தொழிற் செல்வம் முதலியவற்றைக் கொண்டு தீர்மானிக்கப்பட்டு மாநிலத்தின் திறனை அடிப்படையாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

(ஆ) வருமான வரி வரவில் வளர்ச்சி காணப்படுமாகில், அவ் வளர்ச்சி எந்த அளவில் அந்தந்த மாநிலங்களின் வருமான மதிப்பீடுகளில் அதிகமாகக் (பெருகி) காணப்படுகிறதோ, அந்த மாநிலங்களுக்கு அதில் ஒரு பங்கு அளிக்கலாம்.

இப் பரிந்துரைகள் சில மாற்றங்களுடன் 1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ் வரும் உரிமை மாற்று விதிகளில் சேர்க்கப்பட்டன. 1920-21ஆம் வருடங்களில் மதிப்பிடப்பட்ட வரவிற்குமேல் எந்த ஆண்டிலாவது வருமானம் இருக்குமானல், ஒரு ரூபாய்க்கு 3 பைசா மாநிலங்களுக்குச் சேரவேண்டுமென 15ஆவது உரிமை மாற்று விதி கூறிற்று. சில சமயங்களில் சில தொழில் அலகுகள் நிறுவப்பட்டிருப்பது ஒரு மாநிலத்திலும், அவைகள் வருமான வரிக்காக மதிப்பிடப்படுவது இன்னெரு மாநிலத்திலும் இருக்குமாகையால், இதை மனத்தில்கொண்டு சில சிறப்புச் சீரமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. இது வருமான வரி ஒரு சமநிலைச் சாதனமாக உபயோகப்படுத்தப்படுவதைக் குறித்தது.

(iii) **உதவிப் பங்குகள் நீக்கப்படுதல்:** 15ஆவது உரிமை மாற்று விதி செயலாற்றியபொழுது, மாநிலங்களுக்கு இடையே சமமில்லாத விளைவுகளைப் பயந்தது. மெஸ்டன் குழு எதிர்பார்த்ததற்கு மாருக, வரிசையாகப் பல ஆண்டுகளுக்கு மாநிலங்கள் கடுமையான பற்ருக்குறையையே அடைந்தன. இச் சூழ்நிலையில் உதவிப் பங்கு அளிப்பதானது பெருஞ் சுமையாகக் கருதப்பட்டது. ஆகவே, அவைகள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குக் குறைக்கப்பட்டன; 1927-8ஆம் ஆண்டுகளில் நிறுத்திவைக்கப்பட்டன; 1928-9ஆம் ஆண்டுகளில் ஒழிக்கப்பட்டன. மெஸ்டன் குழுவின் தீர்வு கீழ்க்கண்ட இரு காரணங்களுக்காகக் குறைகூறப்பட்டது. முதற்கண், மாநிலங்களின் தேவைகள் வெகு விரைவாக விரிவடைந்து செல்லுகையில், அவைகளுக்கு அளிக்கப்பட்ட வள ஆதாரங்கள் நெகிழ்ச்சியற்றும், தேக்கமுற்றும் இருந்தன; இரண்டாவது, இத் தீர்வு சில மாநிலங்களுக்குச் சாதகமாகவும், மேலும் சிலவற்றிற்கு ஊறு விளைவிப்பதாகவும் இருந்தது; இது பெரும்பாலான மாநிலங்களை அதிருப்திக்கே உள்ளாக்கியது. சில மாநிலங்கள் துவக்க உதவிப் பங்கையும், இன்னும் சில திட்டமான உதவிப் பங்கையும் வெறுத்தன. அக் காலத்தில் நில வருமானம் மிக முக்கியமானதொரு வருவாய்த் தோற்றுவாயாக இருந்ததால், விவசாயத்தைப் பெரும்பாலும் மேற்கொண்ட மாநிலங்கள், அவ் வருமானத்தை முழுவதும் தாங்களே அடைவதன்மூலம் இலாபம் அடைந்தன; ஆனல்,பம்பாய், வங்காளம் போன்ற மாநிலங்கள் வருமான வரி போன்ற மத்திய அரசாங்கத் தலைப்பின் கீழ்வரும் வருவாயை இழந்ததுமன்றித் தங்கள் நிலப்பரப்பில் வெற்றியுடன்

நடத்தப்படும் வியாபாரத்தின் நற்பயன்களை அடைவதினின்றும் விலக்கப்பட்டுத் துன்புற்றன. ஆகவே, அவைகள் இத் திட்டத்தின் அடிப்படையையே எதிர்த்தன.

**4. 1935ஆம் வருடத்தின் இந்திய அரசாங்கச் சட்டம்:** 1919ஆம் ஆண்டுச் சட்டத்தால் ஏற்பட்ட அமைப்பு 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தினுல் மாற்றப்பட்டது. விவசாயத்தின் மூலமன்றி, மற்ற வகைகளில் கிடைக்கும் வருமானத்தின் மீதான வருமான வரி மத்திய அரசாங்கத்தால் வசூலிக்கப்பட்டு, மொத்த ஆதாயத்தில் ஒரு குறிப்பிட்ட சதவீதம் மாநிலங்களுக்கு இடையே பிரித்து அளிக்கப்பட்டது. மேலும், அச் சட்டத்தின் 140ஆவது பிரிவின்படி உப்பு வரி, மத்திய அரசாங்கம் விதித்து வசூல் செய்யும் ஆயத் தீர்வை, ஏற்றுமதித் தீர்வைகள் முதலியன, மத்திய சட்டசபை விரும்புமாயின், அச் சட்டத்தின் கோட்பாடுகளுக்கு இணங்க, முழுவதுமோ அல்லது ஒரு பகுதியோ மாநிலங்களுக்கும் சமஸ்தானங்களுக்கும் ஒதுக்கப்படலாம். சணல் அல்லது சணலால் செய்யப்பட்ட பொருள்களால் கிடைக்கும் ஏற்றுமதித் தீர்வையின் மொத்த ஆதாயம், சணல் உற்பத்தி செய்யும் மாநிலங்கள் அல்லது கூட்டாட்சி மாநிலங்களிடையே, தாங்கள் உற்பத்தி செய்யும் சணலின் விகிதத்திற்கு இணங்கப் பிரித்துக்கொள்ளப்படலாம்.

**5. மூன்றும் காலம் (1937-1950) நிமியர் (Niemeyer) விசாரணை:** 1936ஆம் ஆண்டு சர் ஆட்டோ நிமியர் (Sir Otto Niemeyer) அச்சட்டத்தின் 138, 140-லிருந்து 142 வரை உள்ள பிரிவுகளின் கீழ் வரும், மத்திய மாநில அரசாங்கங்களுக்கு இடையே அமைந்த நிதித் தொடர்புகளைப்பற்றி விசாரணை செய்யக் கேட்டுக் கொள்ளப்பட்டார். இவ்விசாரணையின் நோக்கம் ஒரு பிற்சேர்க்கைக் குறிப்பால் மேலும் விரிவாக்கப்பட்டது. வருமான வரியின் மொத்த ஆதாயத்தில் 50 சதவீதம், கீழ்வரும் நிரந்தர சதவீதங்களில் மாநிலங்களுக்கு மாற்றப்பட வேண்டும் என சர் ஆட்டோ பரிந்துரைத்தார். சென்னை 15; பம்பாய் 20; வங்காளம் 20; யுனைடெட் மாநிலங்கள் 15; பஞ்சாப் 8; பீகார் 10; மத்திய மாநிலங்கள் 5; அஸ்ஸாம் 2; வடமேற்கு எல்லை மாநிலம் 1; ஒரிஸ்ஸா 2; சிந்து 2. மேலும், மாநிலங்களின் பங்குகளிலிருந்து முதல் ஐந்து வருடங்களுக்கு ஒவ்வொரு வருடமும் ஒரு குறிப்பிட்ட தொகையைப் பிடித்துக் கொள்ள வேண்டும். இத்தொகையானது வருமான வரியில் மத்திய அரசாங்கத்தின் பங்கு, இருப்புப்பாதைகளின் உதவிப் பங்கு ஆகிய இரண்டிலும் துண்டுவிழும் 13 கோடி ரூபாய்களுக்குச் சமமாக இருக்க வேண்டும்; இவ்வாறு பிடிக்கப்பட்ட தொகை ஐந்து வருட கால அளவில் மாநிலங்களுக்கு ஒப்படைக்கப்பட வேண்டும்.

சர் ஆட்டோ நிமியர் (Sir Otto Niemeyer) சணல் விளைச்சல் செய்யும் மாநிலங்கள், சணல் ஏற்றுமதித் தீர்வையின் மொத்த ஆதாயத்தில் பெறும்பங்கை, $12\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து, $62\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்த்தப் பரிந்துரைத்தார். கீழ்வரும் வருடாந்தர நிதியுதவிகளும் மாநிலங்களுக்குப் பரிந்துரைக்கப்பட்டன. யுனைடெட் மாநிலங்களுக்கு ஐந்து வருட நிரந்தர காலத்திற்கு 25 இலட்ச ரூபாய்கள் ; அஸ்ஸாமிற்கு 30 இலட்ச ரூபாய்கள் ; வடமேற்கு எல்லை மாநிலத்திற்கு ஐந்து ஆண்டுகள் இறுதியில் மறு ஆராய்ச்சி மேற்கொள்ளப்படும் என்ற நிபந்தனையின்பேரில் 100 இலட்ச ரூபாய்கள் : ஒரிஸ்ஸாவிற்கு 40 இலட்ச ரூபாய்கள் தவிர, முதல் ஆண்டில் அதிகப்படியாக 7 இலட்ச ரூபாய்களும், அடுத்து வரும் நான்கு ஆண்டுகளில் ஒவ்வோர் ஆண்டிலும் அதிகப்படியாக 3 இலட்ச ரூபாய்களும், சிந்து மாநிலத்திற்கு 105 இலட்ச ரூபாய்கள் வீதம் 10 வருடங்களுக்கு, முதல் வருடத்தில் 5 இலட்ச ரூபாய் அதிகப்படியும், அதன் பின் வளர்வீதத்தில் குறைந்துகொண்டே வந்து, 45 ஆண்டுக் காலத்தில் நிதியுதவி அற்றுவிடும். வங்காளம், பீகார், அஸ்ஸாம், வடமேற்கு எல்லை மாகாணம், ஒரிஸ்ஸா முதலிய மாநிலங்கள், 1936ஆம் ஆண்டிற்குமுன் மத்திய அரசாங்கத்திடமிருந்து வாங்கித் திருப்பி அளிக்காத கடன்களை நீக்கும்படியும், மத்திய மாநிலங்கள் திருப்பி அளிக்காத கடன்களைக் குறைக்கும்படியும், பொதுத் திட்டத்தின் ஒரு பகுதியாக சர் ஆட்டோ பரிந்துரைத்தார். இப் பரிந்துரைகள் இந்திய அரசாங்கத்தின் (வருமானப் பகிர்வு) 1936ஆவது ஆண்டு உத்தரவில் சேர்த்துக் கொள்ளப்பட்டன. 1940ஆம் ஆண்டு ஏற்பட்ட ஒரு மாற்றத்துடன், அவைகள் 1947ஆம் ஆண்டு நாடு பிரிக்கப்படும் வரை செயலில் இருந்தன. போர் நடந்துகொண்டிருந்த ஆண்டுகளில், 1940-41 முதல் 1945-46 வரை, வருமான வரியில் மாநிலங்களுக்குச் சேரவேண்டிய பங்கில் நிரந்தரமாக மத்திய அரசாங்கம் 4·5 கோடி ரூபாய்களைத் தனக்கு வைத்துக்கொண்டது. அடுத்து வரும் நான்கு ஆண்டுகளில் ஒவ்வோர் ஆண்டிலும் மத்திய அரசாங்கத்தினால் பிடித்து வைத்துக்கொள்ளப்பட்ட தொகை முன்னைய ஆண்டைவிட 75 இலட்ச ரூபாய்கள் குறைக்கப்பட்டு, 1950-51ஆம் ஆண்டில் மாநிலங்களுக்குரிய முழுத் தொகையும் மீண்டும் அளிக்கப்பட்டது.

வருமான வரி வருமானத்தைப் பிரிப்பது பற்றிய நிமியர் தீர்ப்பை மாநிலங்கள் திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளவில்லை. இவ் வரியின் மொத்த வருமானத்தில் 25 சதவீதம் பம்பாய் மாநிலத்தின் நிலப்பகுதியில் திரட்டப்பட்டதால், அம் மாநிலம் தன் பங்கு இன்னும் பெரிதாக்கப்படவேண்டுமெனக் கேட்டது. மேலும், அம் மாநிலம் தொழில் துறையில் ஈடுபட்டிருக்கும் தனது மக்களுக்கு அதிகச்

செலவு செய்து வாழ்க்கை வசதிகள் அளிக்கவேண்டியதாயிருந்தது. சென்னை மாநிலம் மக்கள்தொகை அடிப்படையில் தனக்கு இன்னும் பெரிய பங்கு கேட்டது. மத்திய அரசாங்கத்திற்கு வருமான வரி, மாநகராட்சி வரிகள் மூலம் கிடைத்த வருமானம், மாநிலங்களுக்கான பங்கைவிட மிக அதிகமாக இருந்தது. 1939ஆம் ஆண்டிலிருந்து 1949ஆம் ஆண்டுவரை, வருமான வரி, நகராட்சி வரிகளின் வரவில் சராசரியாக மத்திய அரசாங்கத்தின் வரவு 85 சதவீதத்திற்கும் அதிகமாக இருந்தது. மாநிலங்களின் பங்கோ 15 சதவீதத்திற்கும் கீழாக இருந்தது.[1] இந்த ஏற்றத்தாழ்வு ஓரளவிற்கு நியாயமானதே. ஏனெனில், போர் நடந்துகொண்டிருந்த ஆண்டுகளில் பாதுகாப்பிற்கான மத்திய அரசாங்கத்தின் செலவு மிக அதிகரித்தது. நிதி உபரிக்குக் காரணம் முன்னேற்றத்திற்கான செலவு தள்ளிப்போடப்பட்டதும், கல்வி, சுகாதாரம் போன்ற சமூகப் பணிகளுக்காகச் செலவிடப்பட்ட தொகை கட்டுப்படுத்தப்பட்டதுமே ஆகும். ஆகவே, சாதாரண காலத்தில் நேர்மையற்றதாக இருக்கவேண்டிய நிலையை, இப்பொழுது இயல்பு கடந்த காலம் என்ற காரணத்தைக் காட்டி மத்திய அரசாங்கம் வருமான வரி ஆதாயத்தில் மிக அதிகமான பங்கைத் தனதாக்கிக்கொண்டது என வாதாடுவது பகுத்தறிவுக்கு ஒத்ததாகும்.

6. **நான்காம் காலம் (பிரிவினைக்குப் பின்):** 1947ஆம் வருடம் ஆகஸ்டு மாதம் நாட்டுப் பிரிவினை, நிமியர் தீர்ப்பை மாற்றங்கள் செய்து அமைக்கவேண்டிய அவசியத்தை ஏற்படுத்திற்று. 1950ஆம் வருடம் துவக்கப்பட்ட புதிய அரசாங்கச் சட்டத்தின்கீழ், இக் காரியத்தை மறு ஆய்வு செய்ய ஒரு நிதிக் குழுவை அமைக்க வேண்டியிருந்தது. ஆனால், உடனடியாக அக் குழுவை அமைக்க முடியாமல் இருந்ததால், ஜனாதிபதியின் உத்தரவினால் வருமான வரியைப் பகிர்ந்து அளிப்பதையும், மாநிலங்களுக்கு நிதியுதவித் தொகைகளை அளிப்பதையும், ஒழுங்குபடுத்தத் தற்காலிகமாக ஏற்பாடுகள் செய்யப்பட்டன. துண்டாடப்பட்ட வங்காளம், பஞ்சாப் மாநிலங்களின் பங்குகள், அவைகளின் மக்கள்தொகை குறைந்துள்ள வீதத்தில் குறைக்கப்பட்டன. இவ்விதம் மீதம் செய்யப்பட்ட வீதங்களும், சிந்து, வடமேற்கு எல்லை மாநிலங்களின் வீதங்களும் மறுபடியும் பகிர்ந்து அளிக்கப்படுவதற்காக ஒன்றுதிரட்டப்பட்டன. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதியிலிருந்து 1950ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31ஆம் தேதிவரை அமலிலிருந்த நிர்ணயிக்கப்பட்ட மாநிலங்களின் வீதப் பங்குகள் கீழ்வருமாறு: பம்பாய் 21; சென்னை 18; மேற்கு வங்காளம் 12; உத்தரப் பிரதேசம் 19; மத்தியப் பிரதேசம் 6;

[1] Indian Economic Journal, Conference Number, Dec. 1953, 'The Income Tax as a Balancing Factor in Indian Federal Finance' by D. Bright Singh.

கிழக்குப் பஞ்சாப் 5; பீகார் 13; ஒரிஸ்ஸா 3; அஸ்ஸாம் 3. சணல் வரியைப் பொறுத்தவரை சணல் விளையும் நிலப்பகுதி, பாக்கிஸ்தானுக்குச் சேர்ந்துவிட்டபடியால், மாநிலங்களின் பங்கு 62½ சதவீதத்திலிருந்து 20 சதவீதத்திற்குக் குறைக்கப்பட்டது; ஆனால், மாநிலங்களுக்கு இடையே பங்கைப் பிரித்து அளிக்கும் அடிப்படையில் எவ்வித மாற்றமும் செய்யப்படவில்லை. இந்த ஏற்பாடுகள், பாதிக்கப்பட்ட சில மாநிலங்களுக்குக் கணிசமான அளவு அதிருப்தியைக் கொடுத்தன. ஆகவே, அரசாங்கம் திரு. C. D. தேஷ்முக்கை (Sri. C. D. Deshmukh) இக்காரியத்தை விசாரணை செய்யவும, கீழ்க்கண்ட இரு காரியங்களைப் பற்றித் தீர்மானிக்கவும் நியமித்தது: (i) வங்காளம், பஞ்சாப், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களின் பகுதிகள் தற்பொழுது பாக்கிஸ்தானுடன் சேர்ந்துவிட்டபடியால், அவைகளிடமிருந்து வர வேண்டிய பங்கைப் பற்றித் தீர்மானித்தல். (ii) A பிரிவு மாநிலங்களுக்கு அற்றுப்போன வீதங்களையும், சிந்து, வடமேற்கு எல்லை மாநிலங்களுக்கு முன்னால் கொடுக்கப்பட்ட வீதங்களையும் மறுபடியும் அளித்தல். 1950ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி செயலுக்கு வந்த தேஷ்முக் தீர்வின்படி வருமான வரியின் வீதப்பங்குகள் கீழ் வருமாறு: சென்னை 17·5; பம்பாய் 21; மேற்கு வங்காளம் 13·5; உத்தரப் பிரதேசம் 18; கிழக்குப் பஞ்சாப் 5·5; பீகார் 12·5; மத்தியப் பிரதேசம் 6; அஸ்ஸாம் 3; ஒரிஸ்ஸா 3. இத் தீர்வின்கீழ், சணல் ஏற்றுமதித் தீர்வையின் பங்குக்குப் பதிலாக அளிக்கப்பட்ட நிதியுதவிகள் பின்வருமாறு: மேற்கு வங்காளம் 105 இலட்ச ரூபாய்கள்; அஸ்ஸாம் 40 இலட்ச ரூபாய்கள்; பீகார் 35 இலட்ச ரூபாய்கள்; ஒரிஸ்ஸா 5 இலட்ச ரூபாய்கள். இவ்வீதங்களை மதிப்பீடு செய்வதில் பின்பற்றப்பட்ட திட்டம் என்னவெனில், இப்பொழுது பாக்கிஸ்தானில் இருக்கும் மாநிலங்களின் பகுதிகள் சர் ஆட்டோ நிமியர் காலத்தில் தனித்து இயங்கும் மாநிலங்களாக இருந்திருக்குங்கால், அவர் என்ன வீதங்களை அளித்திருப்பாரோ அவையே ஆகும்.

7. **1952ஆம் வருடத்திய நிதிக்குழு:**[1] நிதிக்குழுவின் நியமனம் வரவிருந்ததால், தேஷ்முக் தீர்வு தற்காலிகமானதாய் இருந்தது. நீதிக்குழு கீழ்க்கண்ட காரியங்களைப்பற்றி விசாரணை செய்ய வேண்டும்: (i) வரிகளின் மொத்த ஆதாயத்தை அவைகளிடையே பிரித்து அளிப்பது கட்டாயமா அல்லது விருப்பத்தைப் பொறுத்ததா என்பதும், மாநிலங்களுக்கான ஆதாயத்தின் பங்குகளை அளிப்பதும்;

[1] அரசியல் சட்டத்தின் 280 (1) பிரிவுப்படி இச் சட்டம் துவக்கிய பின் வரும இரண்டு வருடங்களுக்குள்ளும, அதனபின் ஒவ்வொர் ஐந்தாண்டுக் கால முடிவிலும் அல்லது தேவையானால் அதற்கு முன்னும் ஜனாதிபதி ஒரு நிதிக் குழுவை அமைக்கவேண்டும்; அக்குழுவிற்கு ஒரு தலைவரையும, நான்கு அங்கத்தினர்களையும அவர் நியமிப்பார். இரண்டாவது நிதிக்குழு இப்பொழுது அறிவிக்கப்பட்டிருக்கிறது (2, ஏப்ரல், 1956).

(ii) இந்தியாவின் ஒன்றுசேர்க்கப்பட்ட நிதியிலிருந்து மாநிலங்களின் வருவாயில் அளிக்கப்படும் நிதியுதவியைப்பற்றிய கோட்பாடுகள்; (iii) சிறந்த நிதிநிலையை மனத்தில் கொண்டு ஜனாதிபதியினால் கேட்கப்பட்ட ஆலோசனைகள். 1951ஆம் வருடம் நவம்பர் மாதம் 22ஆம் தேதி ஜனாதிபதியின் உத்தரவினால் திரு. K. C. நியோகி (Sri. K. C. Neogy) தலைமையில் அமைக்கப்பட்ட நிதிக்குழு தனது அறிக்கையை 1952ஆம் வருடம் டிசம்பர் மாதத்தில் சமர்ப்பித்தது. அது கீழ்க்கண்ட பரிந்துரைகளை வழங்கியது: (i) வருமான வரியின் மொத்த ஆதாயத்தில், மாநிலங்களின் பங்கை 50 சதவீதத்திலிருந்து 55 சதவீதத்திற்கு அதிகரித்தல். (ii) புகையிலை, தீப்பெட்டி, காய்கறி உற்பத்தி இவைகளின்மீது மத்திய அரசாங்கம் விதிக்கும் ஆயத்தீர்வையின் நிகர ஆதாயத்தில், 40 சதவீதம் மாநிலங்களிடையே, மக்கள் தொகை அடிப்படையில் அளிக்கப்படல் வேண்டும். (iii) அஸ்ஸாம், பீகார், ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம் முதலிய மாநிலங்களுக்குச் சணல், சணல் சம்பந்தமான பொருள்களின்மீதான ஏற்றுமதி வரியின் பங்கிற்குப் பதிலாக நிதியுதவிகளை அதிகரிக்கவேண்டும். (iv) தேவையான மாநிலங்களுக்கு அதிகமான நிதியுதவிகளும், குறைந்த முன்னேற்றமடைந்த மாநிலங்களுக்கு ஆரம்பக் கல்வி வசதிகளை அதிகரிக்கச் சிறப்பு நிதியுதவிகளும் அளிக்கப்படவேண்டும்.

8. **பங்கீட்டு அளிப்பின் அடிப்படை:** வருமான வரியின் பங்கீடு கீழ்க்கண்ட பல்வேறு அடிப்படைத் தத்துவங்களைச் சார்ந்திருக்கலாம்: (i) பல்வேறு மாநிலங்களில் வசூலிக்கப்படும் வருமான வரியின் தொகை; (ii) வேறுபட்ட மாநிலங்களில் வசிக்கும் தனி நபர்களிடமிருந்து, அவர்களது வருமானத்தின்பேரில் வசூலிக்கப்படும் (அவ் வருமானம் எங்கு சம்பாதிக்கப்பட்டிருந்தாலும் சரி) வருமான வரியின் தொகை; (iii) பல்வேறு மாகாணங்களில் வருவாயின் மூலத் தோற்றத்தை வைத்துக்கொண்டு மாறுதல் செய்யப்பட்டு வசூலிக்கப்பட்ட வருமான வரி; (iv) ஒவ்வொரு மாநிலத்திலும் ஒப்புமை சார்ந்த தொழிலாளர்களின் தொகை; (v) ஒப்புமை சார்ந்த தலா வருமானம்; (vi) பல்வேறு மாநிலங்களின் அடிப்படைக் காரணங்களைச் சார்ந்த தேவைகள்; உதாரணமாகத் தனது நிலப்பகுதியில் மக்கள் தொகை சிதறியுள்ள நிலை, பொருளாதாரப் பிற்போக்கு, அல்லது ஒரு மாநிலத்தின் தலைகீழ் விகித ஒப்புமை சார்ந்த தலா வருமானம்.[1]

சுருங்கச் சொல்லின், இக் காரணிகள் மூன்று வகையாகக் கூறப்படலாம்: (i) உதவிப் பங்கு; (ii) மக்கள் தொகை; (iii) தேவைகள்; இவைகளைக் கொண்டு வருமான வரியைப் பிரித்து அளிக்கலாம்.

[1] *நிதிக்குழுவின் அறிக்கை, 1952, பக்கம் 73.*

நிமியர் தீர்ப்பில் பகிர்ந்து அளிப்பதன் அடிப்படைத் தத்துவம் வெளியிடப்படவே இல்லை. ஆனல், இரு காரணிகள், அதாவது மக்கள் தொகையும், வசிக்கும் இடமும் எடுத்துக்கொள்ளப்பட்டதாகப் பெரும்பாலும் நம்புகிருர்கள். ஆனல், இந்த அடிப்படையில் பங்கீடு செய்வது நியாயமற்றது என்பது 1945-6ஆம் வருடத்தின் கீழ்க் காணும் அட்டவணையிலிருந்து[1] தெரிகிறது.

மாநிலங்களின் தேவைகள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட வில்லை என்பது வெளிப்படை. நாட்டுப் பிரிவினைக்குப்பின் வந்த

| மாநிலம் | தலா வரவில் வருமானவரி வரவு | | |
|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. |
| சென்னை ... ... | 0 | 15 | 11 |
| வங்காளம் ... ... | 2 | 12 | 1 |
| யுனைடெட் மாநிலங்கள் ... ... | 0 | 15 | 3 |
| பஞ்சாப் ... ... | 0 | 12 | 6 |
| மத்திய மாநிலங்களும், பீராரும் ... | 0 | 13 | 8 |
| அஸ்ஸாம் | 0 | 9 | 0 |
| வடமேற்கு எல்லை மாநிலம் | 0 | 15 | 2 |
| ஒரிஸ்ஸா ... ... | 0 | 10 | 6 |
| சிந்து ... ... | 1 | 4 | 3 |
| பீகார் ... ... | 0 | 12 | 8 |

1947ஆம் வருடத்திய சிறப்புத் தீர்வும், தேஷ்முக் தீர்வும் நிமியர் தீர்வின் தற்காலிக மாற்றங்களே. அகதிகளினல் ஏற்பட்ட பொறுப்பும், பிரிவினைச் செலவுகளும் சில மாநிலங்களைப் பாதித்ததையும், அவைகளின் தேவைகளை அது கவனத்தில் இருத்திக்கொண்டாலும், அடிப்படையில் அது நிமியர் தீர்ப்பைப் போன்றதே. ஏற்கெனவே கூறப்பட்டபடி 1952ஆம் ஆண்டு நிதிக்குழு, 1952-3

[1] Indian Economic Journal, Conference Number, Dec. 1953, p. 145.

முதல் 1956–7 வரை உள்ள காலத்திற்கு, மாநிலங்களின் பங்குக்காகப் பிரிக்கப்படக் கூடிய வருமான வரியின் பகுதி 55 சதவீதம் எனத் தீர்மானித்தது. தனி மாநிலங்களின் சதவீதங்கள் கீழ்க் கண்டவாறு தீர்மானிக்கப்பட்டன. அஸ்ஸாம் 2·25 சதவீதம்; பீகார் 9·75 சதவீதம்; பம்பாய் 17·50 சதவீதம்; ஹைதராபாத் 4·50 சதவீதம்; மத்திய பாரதம் 1·75 சதவீதம்; மத்தியப் பிரதேசம் 5·25 சதவீதம்; சென்னை 15·25 சதவீதம்; மைசூர் 2·25 சதவீதம்; ஒரிஸ்ஸா 3·50 சதவீதம்; பெப்சு 0·75 சதவீதம்; பஞ்சாப் 3·25 சதவீதம்; இராஜஸ்தானம் 3·50 சதவீதம்; சௌராஷ்டிரம் 1·00 சதவீதம்; திருவாங்கூர் - கொச்சி 2·50 சதவீதம்; உத்தரப் பிரதேசம் 15·75 சதவீதம்; மேற்கு வங்காளம் 11·25 சதவீதம். இந்தச் சதவீதங்கள் கீழ்க்கண்ட அடிப்படைகளின்மேல் அமைக்கப்பட்டிருக்கின்றன : (i) 80 சதவீதம் மக்கள் தொகை (ii) 20 சதவீதம் மாநிலங்களில் வசூலாகும் வருமான வரி. மொத்த வருமான வரி வசூலில் நான்கில் மூன்று பாகங்கள் பம்பாயிலும், மேற்கு வங்காளத்திலும், அவற்றிலும் முக்கியமாக நாட்டின் வியாபாரத் தலங்களாக விளங்கும் பம்பாய், கல்கத்தா துறைமுகங்களிலும் வசூலிக்கப்படுகின்றன. நாட்டின் பல்வேறு பாகங்களில் விரிந்து பரவியிருக்கும் பலதரப்பட்ட வருவாய் தோற்றுவிக்கும் காரணிகளால் இவ் வசூல்கள் ஏற்படுகின்றன. ஆகவே, ஒவ்வொரு பகுதியிலிருந்தும் கிடைக்கும் பங்குத் தொகையை நிச்சயமாக அறிவதும், அதை வருமான வரிப் பங்கீட்டிற்கு அடிப்படையாக ஆக்குவதும் மிகக் கடினமான காரியம்.

ஒரு மாநிலத்தின் மக்கள் தொகை, அம் மாநிலத்தின் தேவைகளைப் பற்றிய ஒரு பரந்த அளவுகோலாக இருக்கிறது என அக்குழு கருதியது. அக்குழுவின் கருத்துப்படி, பொருளாதாரப் பிற்போக்கு நிதித் தட்டுப்பாடு முதலிய வேறு அடிப்படைத் தத்துவங்கள் நிதியுதவிகளைத் தீர்மானிப்பதற்குத்தான் பொருத்தமானவை. தொழிலாளர்களின் எண்ணிக்கை, உதவிப் பங்கு அல்லது தேவைகளை முழுதும் சுட்டிக்காட்ட முடியாது. நாட்டின் தலா வருமானத்தைப் பற்றிய எண் இலக்கங்கள் ஒவ்வொரு மாநிலத்திற்கும் தனியே கிடைக்காததால், அதை வருமானவரிப் பங்கீட்டிற்கு அடிப்படையாக வைத்துக்கொள்ள முடியாது.

**9. மத்திய அரசாங்கத்தின் ஆயத்தீர்வையைப் பங்கிட்டு அளித்தல் :** மத்திய அரசாங்கத்தினால் விதிக்கப்படும் ஆயத் தீர்வைகளின் வருமானம் முன்பு மாநிலங்களிடம் பங்கிடப்பட்டது. மாநிலங்கள், போதை உண்டாக்கும் சாராய வகைகள், மருந்துகள் முதலியவற்றின்மேல் வரி விதிக்க முடியும்; மத்திய அரசாங்கம்,

உப்பு, பெட்ரோல், காற்றழுத்தத்தால் வேலை செய்யும் ரப்பர் சுற்றுக்கள், குழாய்கள் முதலியவற்றின்மேல் ஆயத்தீர்வை விதித்தது. தீப்பெட்டி, சர்க்கரை, புகையிலை, காய்கறிப் பொருள்கள் இவற்றின் மீதான ஆயத்தீர்வைகளை முன்னைய அரசர்களின் மாநிலங்களுடன் பகிர்ந்துகொள்ள ஏற்பாடுகள் இருந்தன. இந்த அரசர்களின் மாநிலங்கள் இந்தியாவுடன் இணைக்கப்பட்டபொழுது, இந்த ஏற்பாடுகள் நிறுத்தப்பட்டன. 1952ஆம் ஆண்டு நிதிக்குழு மத்திய அரசாங்கத்தின் ஆயத்தீர்வைகளைப் பங்கிடுவதுபற்றி யோசனை செய்தது. புகையிலை, தீப்பெட்டி, காய்கறிப் பொருள்கள் முதலியன மிகச் சாதாரணமாக விரிவாக நுகரப்படுவதாலும், பங்கிடுவதற்கு ஏற்ப நல்ல தொகையையும் நிர்ந்தர வருமானத்தையும் அளிப்பதாலும், அவைகள் தெரிந்தெடுக்கப்பட்டன. நிகர ஆதாயத்தில், 40 சத வீதமான மாநிலங்களின் பங்கு கீழ்க்கண்ட விதமாகப் பிரித்தளிக்கப்பட்டது[1]:

| A பிரிவு மாநிலங்கள் | சதவீதம் | B பிரிவு மாநிலங்கள் | சதவீதம் |
|---|---|---|---|
| அஸ்ஸாம் | 2·61 | ஹைதராபாத் | 5·39 |
| பீகார் | 11·60 | மத்திய பாரதம் | 2·29 |
| பம்பாய் | 10·37 | மைசூர் | 2·62 |
| சென்னை | 16·44 | பெப்சு | 1·00 |
| மத்தியப் பிரதேசம் | 6·13 | இராஜஸ்தான் | 4·41 |
| ஒரிஸ்ஸா | 4·22 | சௌராஷ்டிரம் | 1·91 |
| பஞ்சாப் | 3·66 | திருவாங்கூர் | 2·68 |
| உத்தரப் பிரதேசம் | 18·23 | | |
| மேற்கு வங்காளம் | 7·16 | | |

1943-4ஆம்ஆண்டில் புகையிலையின்மேல் ஆயத்தீர்வை விதிக்கப்பட்டபொழுது, மத்திய, மாநில அரசாங்கங்கள் இரண்டும் வரிவிதிப்பதைத் தவிர்க்க மத்திய அரசாங்கம் விரும்பியது. ஆகவே, மாநிலங்கள்

[1] இந்த அட்டவணையிலும், கீழ்வரும் இரு பத்திகளிலும் கொடுக்கப்பட்டுள்ள எண் இலக்குகள் 1956ஆம் ஆண்டின் மாநிலங்களின் மறு - அமைப்புச் சட்டம் வருவதற்கு முன்னைய 1953—6 ஆண்டுகளின் காலவரையைச் சார்ந்தது.

அதன்மேல் வரி விதிக்கும் உரிமையைத் துறந்தன. அதற்குப் பதிலாக முன்னமே தீர்மானிக்கப்பட்ட சரியீட்டுத்தொகையை மத்திய அரசாங்கம் கொடுக்கும். மத்திய அரசாங்கத்தின் ஆயத்தீர்வையில் மாநிலங்களுக்குப் பங்கு கொடுக்கப்பட்டதால், இவ் வருடாந்தரச் சரியீட்டுத் தொகை—பம்பாய்க்கு 54 இலட்ச ரூபாய்கள், சென்னைக்கு 56 இலட்ச ரூபாய்கள், மத்தியப் பிரதேசத்திற்கு 15 இலட்ச ரூபாய்கள்—நிறுத்தப்பட்டது. திருவாங்கூர், கொச்சி, சௌராஷ்டிரம் முதலியன வருமானத் துண்டு நிதியுதவிகளை (revenue gap grants) மத்திய அரசாங்கத்தின் வரிகளின் பங்கிற்குப் பதிலாகத் தொடர்ந்து பெற்றன. ஏனெனில், முன்னையது பின்னையதைவிட அதிகமாயிருந்தது.

நிதிக்குழு, அரசியல் சட்டத்தின் 273ஆவது பிரிவின்படி கீழ்க்கண்ட நான்கு மாநிலங்களுக்குச் சணல், சணலால் செய்யப்பட்ட பொருள்கள் ஆகியவற்றின்மீதான ஆயத்தீர்வையில் பங்களிப்பதற்குப் பதிலாக நிதியுதவித் தொகைகளைக் கொடுத்தது. அஸ்ஸாம் 75 இலட்ச ரூபாய்கள்; பீகார் 75 இலட்ச ரூபாய்கள்; ஒரிஸ்ஸா 15 இலட்ச ரூபாய்கள்; மேற்கு வங்காளம் 250 இலட்ச ரூபாய்கள்[1].

10. பொது நிதியுதவிகள் : நிதியுதவிகள் அளிக்கும் அமைப்பானது நெடுநாளைய சரித்திரச் சம்பவமாகும். ஆனால், இது பற்றிய சட்ட பூர்வமான ஏற்பாடு 1935ஆம் ஆண்டு அரசாங்கச் சட்டத்துடன் வந்தது. சர் ஆட்டோ நிமியர் பரிந்துரைத்த நிதியுதவிகள் நிபந்தனைகள் அற்றவை. இந்திய அரசாங்கச் சட்டத்தின் 142ஆவது பிரிவின்கீழ், பஞ்சாபிற்கு 1947—8ஆம் வருடம் 100 இலட்ச ரூபாய்களும், அதன்பின் வந்த இரண்டு ஆண்டுகளில் ஒவ்வோர் ஆண்டிலும் 150 இலட்ச ரூபாய்களும், 1950—51ஆம் ஆண்டில் 75 இலட்ச ரூபாய்களும் நிதியுதவிகளாகக் கொடுக்கப்பட்டன.

இவ்வாறுன, பொதுவான அல்லது நிபந்தனையற்ற நிதியுதவிகளைத் தவிர, மற்றவையும் இருந்தன. முக்கியமாகக் குறிப்பிட்ட இனமும் இருந்தது. 1942ஆம் ஆண்டிலிருந்து 1946ஆம் ஆண்டு வரை மத்திய அரசாங்கம் வங்காளத்திற்கு மொத்த நிதியுதவியாக 18 கோடி ரூபாய்கள் கொடுத்தது. அதில் ஒரு பகுதி பஞ்ச நிவாரண வேலைகளால் ஏற்படும் செலவுகளைச் செய்யவும், அதன்பின் வரும் மறுசீரமைப்பு வேலைகளுக்காகவும் கொடுக்கப்பட்டது. 1944—5ஆம் ஆண்டுகளிலிருந்து மாநிலங்கள் 'அதிக உணவு உற்பத்தி செய்யும்' திட்டங்களின்கீழ்த் தகுந்த அளவில் உதவிபெற்று வருகின்றன. 1947ஆம் ஆண்டு, ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முதல் 1952ஆம் ஆண்டு, மார்ச் மாதம் 31ஆம் தேதி முடிய கொடுக்கப்பட்ட உதவித்

[1] *நிதிக்குழுவின் அறிக்கை, 1952, பக்கம் 106.*

தொகைகளைக் கூட்டினால், 13·71 கோடி ரூபாய் வரும். மற்ற முக்கியமான நிதியுதவி வகைகளாவன : (i) 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முதல் 1950ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதிவரை அளிக்கப்பட்ட 38·32 கோடி ரூபாய்கள்; இவை போருக்குப்பின் முன்னேற்றத்திற்காக அளிக்கப்பட்டவை ஆகும். (ii) சௌராஷ்டிரம், மத்திய பாரதம், இராஜஸ்தானம், பெப்சு முதலிய மாநிலங்கள் மிகவும் பின்தங்கியவையாக இருந்ததால், குறிப்பிட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்காக அளிக்கப்பட்ட சிறப்பு முன்னேற்ற நிதியுதவி (1951—2, 1952—3 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் கொடுக்கப்பட்ட தொகை சுமார் 3 கோடி ரூபாய்கள்). (iii) சமூக நல முன்னேற்றத்திற்கான திட்டங்களுக்கு அளிக்கப்பட்ட நிதியுதவிகள்.

11. நிதியுதவிகளின் அடிப்படைகள் : மத்திய அரசாங்கம் ஒவ்வொரு வருடமும் சில மாநிலங்களுக்குக் குறிப்பிட்ட திட்டங்களை நிறைவேற்றுவதற்காக நிதியுதவிகளைக் கொடுக்கவேண்டியது அவசியமாயிற்று. 1952ஆம் ஆண்டு நிதிக்குழு இது சம்பந்தமாகச் சில கோட்பாடுகளை விதித்திருக்கிறது. (i) வரவு செலவுத் திட்டத்தின் தேவைகள் : சில மாற்றங்கள் செய்யப்படவேண்டியிருந்தன. உதாரணமாக மாநிலங்களின் தேவைகளை மதிப்பிடத் தயாரிக்கப்படும் ஒரு பொது நிலை வரவு செலவுத் திட்டத்தில் இயல்பு கடந்த செலவுகளை விலக்குதல். ஒவ்வொரு மாநிலத்திலும் வசூல் செய்யக்கூடிய அதிகபட்ச வரி வருமானத்தையும், செலவைச் சிக்கனம் செய்யக்கூடிய நிலைகளையும் மதிப்பிட்டு வரவு-செலவுத் திட்டத்தின் தேவைகளைத் தீர்மானிப்பதில் மாற்றங்கள் செய்தல். (ii) ஒவ்வொரு மாநிலத்திலும் சமூகப் பணி நிலை ஒரு நல்ல அளவு ஆகும்; ஏனெனில், நிதியுதவிகள் அளிப்பதன் நோக்கமே பல்வேறு மாநிலங்களின் தரத்தைச் சமமாக்குவதுதான். (iii) பிரிவினையின் காரணத்தாலோ, பெரு வெள்ளம் போன்ற இடுக்கண் காரணமாகவோ நேரிடும் கடமைகளையும், சுமைகளையும் சமாளிக்க நிதியுதவிகள் கொடுக்கப்படும். (iv) நாட்டின் நன்மைக்காக மேற்கொள்ளப்படும் நலம் பயக்கும் முக்கியமானதொரு பணியை ஊக்குவிக்க நிதியுதவிகள் கொடுக்கப்படலாம்.

இக் கொள்கைகளுக்கு இணங்க நிதிக்குழு, அரசியல் சட்டத்தின் 275 (1) பிரிவின்கீழ், கீழ்வரும் ஏழு மாநிலங்களுக்குக் கீழ்க்கண்டவாறு நிதியுதவிகள் வழங்கப்பட வேண்டுமெனப் பரிந்துரைத்தது : அஸ்ஸாம் 100 இலட்ச ரூபாய்கள் ; மைசூர் 40 இலட்ச ரூபாய்கள் ; ஒரிஸ்ஸா 75 இலட்ச ரூபாய்கள் ; பஞ்சாப் 125 இலட்ச ரூபாய்கள்; சௌராஷ்டிரம் 40 இலட்ச ரூபாய்கள் ; திருவாங்கூர்—கொச்சி

45 இலட்ச ரூபாய்கள் ; மேற்கு வங்காளம் 80 இலட்ச ரூபாய்கள். மேலும், அது எட்டு மாநிலங்களுக்கு ஆரம்பக் கல்வி வசதிகளை அதிகரிப்பதற்குச் சிறப்பு நிதியுதவி அளிக்குமாறு பரிந்துரைத்தது. அவை கீழ்க்கண்ட அட்டவணையில்[1] காட்டப்பட்டுள்ளன. (இந்த நிதியுதவிகள் பள்ளி செல்லும் வயதிலுள்ள குழந்தைகளில், பள்ளி செல்லாக் குழந்தைகளின் எண்ணிக்கை வீதத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.)

| மாநிலம் | 1953—4 | 1954—5 | 1955—6 | 1956—7 |
|---|---|---|---|---|
| பீகார் | 41 | 55 | 69 | 83 |
| மத்தியப் பிரதேசம் | 25 | 33 | 42 | 50 |
| ஹைதராபாத் | 20 | 27 | 33 | 40 |
| இராஜஸ்தான் | 20 | 26 | 33 | 40 |
| ஒரிஸ்ஸா | 16 | 22 | 27 | 32 |
| பஞ்சாப் | 14 | 19 | 23 | 28 |
| மத்திய பாரதம் | 9 | 12 | 15 | 18 |
| பெப்சு | 5 | 6 | 8 | 9 |
| | 150 | 200 | 250 | 300 |

இப்பொழுதெல்லாம் வரி வருமானத்தில், நிதியுதவிகளாகவும், பங்குகளாகவும், மாநிலங்களுக்கு மாற்றப்படும் மொத்தத் தொகை, ஒரு பொது நிலையான வருடத்தில், 1949—50-லிருந்து 1951—2 வரையிான மூன்று ஆண்டுகளில் மாற்றப்பட்ட 15 கோடி ரூபாய்களுக்கும் மேலாக 21 கோடி ரூபாய்களாகும்.

√ **12. மத்திய அரசாங்கத்தின் வருவாயில் மாநிலங்களின் பங்கு :** மத்திய அரசாங்கம், அரசியல் சட்டத்தின் ஏற்பாட்டின்படி

[1] Reserve Bank of India, Report on Currency and Finance, 1952-3. p. 61. எண்கள் ரூபாய்களை இலட்சங்களில் குறிப்பிடுகின்றன.

A, B பிரிவு மாநிலங்களுக்கு[1] 1951—2 முதல் 1954—5 வரை கொடுத்த தொகைகள் கீழே தரப்பட்டிருக்கின்றன :[2]

| | 1951-2 | 1952-3 | 1953-4 | 1954-5 |
|---|---|---|---|---|
| வரி வருமானத்தின் பங்கு | | | | |
| வருமான வரி | 52·86 | 56·82 | 54·48 | 55·98 |
| ஆயத்தீர்வை | — | 16·42 | 16·49 | 16·29 |
| நிதியுதவிகளும், ஆதரவு உதவிகளும் | 33·34 | 36·66 | 47·10 | 87·38 |
| கடன்கள் | 75·71 | 111·79 | 160·20 | 214·41 |
| | 161·91 | 221·69 | 278·27 | 374·06 |

13. B பகுதி மாநிலங்களுடன் நிதித் தொடர்புகள் : அரசர்களின் மாநிலங்களின் இணைப்பினால் தோன்றிய பல புதிய பிரச்சினைகளின் காரணமாக இந்திய அரசாங்கம் சர் வீ. டி. கிருஷ்ணமாச்சாரியின் (V. T. Krishnamachari) தலைமையில் ஒரு நிபுணர் குழுவை அமைத்தது. மாநிலங்களின் நிதி விசாரணைக் குழு என்று அழைக்கப்பட்ட இக் குழு கீழ்க்கண்ட கருத்தைக் கூறியது : திறமை மிகுந்த நிர்வாகம் வேண்டுமாயின் மத்திய அரசாங்கத்திற்கும் B பிரிவு மாநிலங்களுக்கும் உள்ள தொடர்பு, மத்திய அரசாங்கத்திற்கும், 4 பிரிவு மாநிலங்களுக்கும் உள்ளதைப் போலவே இருக்க

[1] மாநிலங்களின் மறு அமைப்புச் சட்டம் 1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதி செயல்படும் வரை மூன்று வகை மாநிலங்கள் இருந்தன. (i) A பகுதி மாநிலங்கள் என்பவை பழைய பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்த மாநிலங்கள் (ii) B பகுதி மாநிலங்கள் என்பவை இந்தியாவுடன் அதே முறையிலோ கூட்டு மாநிலங்களாகவோ இணைக்கப்பட்ட முன்னாள் அரசர்களின் மாநிலங்கள். (iii) C பகுதி மாநிலங்கள் என்பவை டெல்லி, ஆஜ்மீர், ஹிமாசலப் பிரதேசம், போபால் ஆகியவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளாகும். C பகுதி மாநிலங்கள் மத்திய அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் இருந்தன. அதே சமயத்தில் மாநிலங்கள் அரசியல் சட்டத்தின் கீழ் எல்லா உரிமைகளையும் கடமைகளையும் பெற்றிருந்தன ; அவைகள் ஐக்கிய இந்தியாவில் ஒன்றுக்கப்பட்ட ஒற்றுமையான கூட்டாட்சியை அமைத்திருக்கின்றன.

[2] Report on Currency and Finance, 1952-3, 53-4 and the Explanatory Memorandum on the Budget, 1954-5. ரூபாய்கள் கோடிக் கணக்கில்.

வேண்டும்; மத்திய அரசாங்க வருமானங்களான வருமான வரி, மாநகராட்சி வரி, சுங்க வரி, ஆயத் தீர்வை, தபால், தந்தி, தொலை பேசி வரிகள், அபின் (விளைச்சல், உற்பத்தி, ஏற்றுமதிக்கு விற்பனை செய்தல்), நாணய மாற்றுக்கள், இருப்பினத்தின் முதல் மதிப்பின் மீது வரி, கூட்டு முதல் கழகங்களின் (Companies) முதலின் மேல் வரி, உப்பு வரி முதலியவற்றின்மேல் மத்திய அரசாங்கம் பொறுப்பும் கட்டுப்பாடும் மேற்கொள்ள வேண்டும். அக்குழு, வருமான வரியை எல்லா மாநிலங்களிலும் புகுத்தவும், அவைகளின் விகிதங்கள் இந்தியாவின் மற்றப் பாகங்களில் இருக்கும் விகிதங் களுக்கு சமமாக்கப்படவேண்டும் என்றும், மூன்று நிலங்களில் மேற் கொள்ளப்படலாம் என்றும், உள் நாட்டுச் சுங்க வரிகளை நீக்க வேண்டும் என்றும் பரிந்துரைத்தது. சுங்க வரிகளை நீக்குவதால் ஏற்படும் இழப்பை வியாபார வரி, மற்றும் மாநில வரிகளை வசூலிப் பதன் முலம் சரிக்கட்டவேண்டும். ஆனால், மாநிலங்களின் இருப்புப் பாதைகளை மத்திய அரசாங்கம் எடுத்துக்கொண்டதற்கு சரியீட்டுத் தொகை அளிக்கப்படமாட்டாது. மொத்தத்தில் ஏற்படும் நஷ்டத்தை மட்டும் அரசாங்கம் வருவாய்க் கணக்கின் மூலம் துவக்கத்திலிருக்கும் ஐந்து வருடங்களுக்கு ஈடு செய்யும்; அதன்பின் உதவிப் பங்கானது 11ஆம் வருடம் வரை குறைந்து செல்லும் அளவில் தொடரும்.

1950ஆம் வருடம் ஏப்ரல் மாதம் முதல் தேதி இணைப்பு முற்றுப்பெற்று செயலாக்கப்பட்டது. மத்திய அரசாங்கம் தனக்குட் பட்ட அதிகாரங்களையும் பணித்துறைகளையும் எடுத்துக்கொண்டது. மத்திய அரசாங்க வருமானத்தின் பங்குகளை இழந்ததற்கான சரி யீட்டுத் தொகையைத் தவிர, மாநிலங்கள் இனி மத்திய அரசாங்க வருமானத்தின் பிரிக்கப்படக்கூடிய வருவாயிலிருந்து தங்கள் வழக்கமான பங்குகளையும் பெறும். இணைப்பின் காரணமாகக் கிடைத்த உபரித் தொகையை மாநிலங்களே வைத்துக்கொள்ள அனுமதிக்கபட்டது; இத் தொகை மன்னர்களுக்கு வழங்கப்படும் மான்யங்களுக்கு உபயோகமாகும். அதேபோல் மத்திய அரசாங் கத்தின் வருவாயில் துண்டு விழுவதைச் சரி செய்ய மாநிலங்களுக்கு அளிக்கப்படும் நிதியுதவித் தொகைகளும் இந்தப் பிரித்து அளிக்கக் கூடிய வருவாயிலிருந்து சரிப்படுத்தப்படவேண்டும். உதாரண மாக, மைசூர், ஹைதராபாத், திருவாங்கூர், கொச்சி, சௌராஷ்ட்ரம் முதலிய மாநிலங்கள் தங்கள் வருமான வரியின் பங்குகளைப் பெற முடியவில்லை. ஏனெனில், அவைகளில் விழும் துண்டைச் சரிசெய்ய அளிக்கப்பட்ட நிதியுதவிகள், வருமான வரியின் பங்குகளைவிட அதிக மாயிருந்தன. ஆனால், மத்திய பாரதம், இராஜஸ்தான், பெப்சு முதலிய மாநிலங்கள் வருமான வரியின் பங்கைப்பெற தகுதியா யிருந்தன.

14. இந்தியாவின் பொது நிதியை ஒன்றுக்குதல்: நாம் ஏற்கெனவே பார்த்தபடி போருக்கு முன்னுல் இருந்த நிலையில் மத்திய அரசாங்கத்திற்குச் சில நெகிழ்ச்சி உள்ள வருவாய் மூலங்கள் இருந்தன. உதாரணமாகச் சுங்க வரி, ஆயத் தீர்வை, வருமான வரி முதலியன. ஆனுல், மாநிலங்களுக்காக முக்கிய மூலங்களான நில வருமானம், போதைப் பானங்கள்மீது வரி முதலியன ஒப்புமையில் நெகிழ்ச்சியற்றவை. இந்த ஏற்பாட்டின்கீழ் மாநிலங்கள் அதிருப்தியுற்றன. ஏனெனில், அவைகள் நாட்டின் முன்னேற்றத்திற்கான பல துறைகளில், உதாரணமாகக் கல்வி, பொதுநலச் சுகாதாரம் முதலியவற்றில் வளர்ந்துகொண்டே போகும் செலவுகளை ஏற்க வேண்டியிருந்தது. இந் நிலைமை இப்பொழுது பெரும்பாலும் சரியாக்கப்பட்டுவிட்டது. இப்பொழுது அவைகளுக்கு நல்ல வருமானத்தைத் தரக்கூடிய விற்பனை வரியும், ஒப்புமையில் நெகிழ்ச்சியுள்ள மற்ற வரிகளும் இருக்கின்றன. இதன்றி, அவைகளுக்கு மத்திய அரசாங்கத்துடன் வருமான வரி, ஆயத் தீர்வை இவைகளின் மொத்த ஆதாயத்தில் பங்கும், மத்திய அரசாங்கம் அளிக்கும் போதுமான அளவுள்ள பொதுவான, குறிக்கப்பட்ட காரியங்களுக்கான நிதியுதவிகளும் இருக்கின்றன. இந்த அளவில் மாநிலங்களின் நிதியைப் பொறுத்தமட்டில், மத்திய, மாநில அரசாங்கங்களின் வருமானங்கள் கலந்து ஒன்ருகி, மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் இடையே இருந்த பழைய பகைமை பெரும்பாலும் மறைந்துவிட்டது. உண்மையைக் கூறவேண்டுமானுல் இப்பொழுது முன்னைவிட மாநில அரசாங்கங்களுக்கு மத்திய அரசாங்கத்தின் வருமானத்தின்மீது அதிக அக்கறை இருக்கிறது. இந்த அளவிற்கு இந்திய நிதி நிலையை ஒன்ருக்குவதற்கான நடைமுறை முயற்சிகள் ஒழுங்காக அமைந்திருக்கின்றன.[1]

மாநிலங்களுக்கிடையேயும், மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் இடையேயும் நிலவிய வரிக் கொள்கைகளும், வரி நிர்வாகமும் ஒருதரப்படுத்தப்பட 1953ஆம் ஆண்டு வரி விசாரணைக் குழு (Taxation Enquiry Committee) ஓர் அகில இந்திய வரி மன்றம் (All India Taxation Council) ஒன்றை அமைக்குமாறு பரிந்துரைத்தது.

மாநில வருமானத்தின் முக்கிய மூலங்கள், பொருள்கள் மேலும், நுகர்ச்சியின் மேலும் விதிக்கப்படும் வரிகளும், வருமான வரி, ஆயத் தீர்வை இவைகளிலிருந்து கிடைக்கும் பங்குகளுமே ஆகும். நில வருமானம் முக்கியமற்றது என ஒதுக்கிவிடக்கூடிய வகையில் இல்லாவிட்டாலும், அதன் ஒப்புமை முக்கியத்துவம் ஒரே சீராகக் குறைந்து

[1] Taxation Enquiry Commission Report, Vol. I, ch. ii, p. 33.

கொண்டே செல்லுகிறது. இரண்டாவது உலகப் பெரும் போருக்கு முன் அது மிகப் பெரியதொரு வருமானத்தின் மூலமாக இருந்தது; அது வரி வருமானத்தில் 45 சதவிகிதமாயும், ஒன்பது பெரிய மாநிலங்களின் மொத்த வருமானத்தில் 33 சத வீதமாயும் இருந்தது. இப்பொழுது மாநில அரசாங்கங்களுக்கு ஒரு முக்கியமான நெகிழ்ச்சியுள்ள வருமானத்தின் மூலமாக விளங்கும் பொது விற்பனைவரியின் வளர்ச்சி மிகப் பெரியதொரு முன்னேற்றமாகும். தற்பொழுது மாநிலங்களின் நிதியமைப்பைப் பன்முகப்படுத்தும் நோக்கம் வளர்ந்து வருகின்றது. 'பல்வேறு வரிகளும் தீர்வைகளும்' என்ற தலைப்பின்கீழ் அதிகமாகிக்கொண்டே வரும் வருமானம் இதைக் காட்டுகிறது. இவ்வினம் மோட்டார் வண்டிகள் வரி, பொழுதுபோக்கு வரி, புகையிலை வரிகள் முதலிய பன்னிரண்டு இனங்களை உள்ளடக்கி இருக்கிறது. மது விலக்கின் காரணமாக மாநில ஆயத் தீர்வை முக்கியத்துவத்தில் குறைந்துவிட்டது; 1954ஆம் வருடம் A பிரிவு மாநிலங்களின் மொத்த வருமானத்தில் இது 10 சதவீதம் இருந்தது; ஆனால், முப்பது வருடங்களுக்குமுன் இது 25 சதவீதம் இருந்தது (குறைந்த முன்னேற்ற மடைந்த மாநிலங்களில் விற்பனை வரி வளர்ச்சி அடையாததால், இது இன்னும் 25 சதவீத வருமானத்தை அளிக்கிறது). நீர்ப்பாசனம் ஒரு வருமான மூலமாக உத்தரப் பிரதேசம், பஞ்சாப் போன்ற பெரிய மாநிலங்களிலேயே ஓரளவிற்கு முக்கியத்துவம் அடைந்திருக்கிறது. மாநிலங்களால் நடத்தப்படும் தொழில் முயற்சிகளைப் பொறுத்தமட்டில் மைசூரும், திருவாங்கூர் - கொச்சியுமே இலாபம் காண்பிக்க முடிகிறது. மத்திய அரசாங்கத்தின் நிதியுதவிகள் இப்பொழுது மாநிலத்தின் மொத்த வருமானத்தின் உயர்ந்த வீதத்தைக் குறிக்கின்றன.

**15. மத்திய, மாநில அரசாங்கங்களின் வரி விதிக்கும் அதிகாரங்கள்:** இந்திய அரசியல் சட்டம், 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை நெருங்கிப் பின்பற்றி, மத்திய, மாநில அரசாங்கங்களிடையே வரி விதிப்பு அதிகாரங்களைப் பங்கிடுவதுபற்றிக் கூறுகிறது. அது பாதிக் கூட்டாட்சித் தன்மையதாய் இருந்தது. ஆகவே, பரந்த அதிகாரங்கள் மாநிலங்களுக்கும், மீதியுள்ள அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திற்கும் ஒப்படைக்கப்பட்டன.

மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்ட வரிகள்: விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தைத் தவிர மற்ற வருமானங்கள் மீதான வரி, மாநகராட்சி வரி, சுங்கவரி, ஆயத் தீர்வை (சாராயம், மயக்க மருந்துகளைத் தவிர), சொத்து, சொத்துரிமை (succession) வரி, விவசாயத்திற்கான நிலத்தைத் தவிரத் தனி

நபர்களுடையவும், கூட்டு முதல் கழகங்களுடையவும் இருப்பினத்தின் முதல் மதிப்பின்மீது வரி (விவசாய நிலத்தைத் தவிர), சில நிதிப்பத்திரங்களுக்கான முத்திரைத் தீர்வையின் விகிதங்கள், பங்கு மாற்றம், முன்னேக்கிய பேரங்கள் முதலிய நடவடிக்கைகள்மீதான முத்திரைத் தீர்வை அல்லாத மற்ற வரிகள்; பத்திரிகைகளை வாங்குவதிலும் விற்பதிலும், அதில் காணப்படும் விளம்பரங்களின் மேலான வரிகள், இருப்புப்பாதைக் கட்டணங்கள், வாடகை, இருப்புப்பாதைகள் மூலமும், கடலிலும் ஆகாயத்திலும் பிரயாணம் செய்யும் பிரயாணிகள், பொருள்கள்மீது முடிவில் விதிக்கப்படும் வரிகள், மாநில அல்லது பொதுத்துறைப் பட்டியலில் (Concurrent List) குறிப்பாகக் காணப்படாத வரிகள்.

மாநிலத்தின் ஆட்சிக்குட்பட்ட வரிகளாவன: நில வருமானம், பொருள்கள் வாங்குவது, விற்பது மீது வரி [1] (பத்திரிகைகளைத் தவிர), விவசாயத்தினுல் வரும் வருமானத்தின்மீது வரி, நிலம், கட்டடங்கள்மீது வரி, மரபுரிமை வரி, ஆயத்தீர்வை முதலியன; விவசாய நிலத்தின்மீதும், சாராயம் முதலிய மயக்க மருந்துகள் மீதும் ஆயத் தீர்வை, உள்நிலப்பரப்பிற்குள் (local area) வரும் பொருள்கள்மீது வரி, கனிப்பொருள்கள்மீது வரி (பாராளுமன்றம் விதிக்கும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு), மின்சார நுகர்ச்சிமீதும் விற்பனை மீதும் வரிகள், மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்படாத வாகனங்கள், விலங்குகள், படகுகள், முத்திரை ஆகியவைமீது வரிகள்; சாலைகள், உள்நாட்டு நீர்வழிப் பாதைகள் முதலியவற்றில் கொண்டு செல்லப்படும் பொருள்கள், பிரயாணிகள், போகப் பொருள்கள் (பொழுதுபோக்கு, பந்தயம் கட்டுதல், சூதாடுதல் முதலியன உள்பட) மீது வரிகள், தொழில்கள், வாணிபம், வாழ்க்கைத் தொழில்கள் (callings) வேலை முதலியவற்றின் மீது வரி, தலை எண்ணிக்கை மீது வரிகள், பத்திரிகைகளில் காணப்படும் விளம்பரங்கள் அல்லாத மற்றைய விளம்பரங்கள்மீது வரி.

✓ 16. **மத்திய, மாநில அரசாங்கங்களுக்கிடையே வருமானப் பங்கீடு:** மத்திய, மாநில அரசாங்கங்களுக்கிடையே சில வகைப்பட்ட வருமானங்களைப் பிரிப்பதுபற்றி அரசியல் சட்டம் அநேக ஏற்பாடுகளைக் கொண்டிருக்கிறது. இந்த ஏற்பாடுகள் அநேக வகைகளைச் சேர்ந்தன. (i) முதலில் மத்திய அரசாங்கத்தினுல் விதிக்கப்

[1] *கீழ்க்கண்ட பொருள்கள் மீது மாநிலங்கள் வரி விதிப்பதை அரசியல் சட்டத்தின் 280 ஆம் பிரிவு தடை செய்கிறது: (i) இறக்குமதிகள் (ii) சமூகத்தில் வாழ்க்கைக்கு அவசியமானவை எனப் பாராளுமன்றத்தால் தீர்மானிக்கப்பட்ட பொருள்களை விற்பனை செய்தல், மத்திய அரசாங்கத்தின் சொத்துகள், வருமானம் முதலியவை மாநில அரசாங்கத்தின் வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டவை. இதற்கு எதிர்மாருனதும் (vice versa) உண்மையே.*

ப்பட்டு, மாநில அரசாங்கத்தினுல் வசூலிக்கப்பட்டுக் கைப்பற்றப்படும் வரிகள் உள்ளன. யூனியன் அரசாங்கப் பட்டியலில் இடம்பெற்றுள்ள முத்திரைத் தீர்வை, சாராயம் கலக்கப்பட்ட மருந்து, ஒப்பனைக்குரிய பொருள்கள்மீது ஆயத்தீர்வை முதலியனவும் இவ் வகையைச் சார்ந்ததே. (ii) இரண்டாவது வகையாக மத்திய அரசாங்கத்தினுலேயே விதிக்கப்பட்டு வசூலிக்கப்படும் வரிகள் உள்ளன; ஆனுல், பாராளுமன்றத்தின் பங்கீட்டு விதிகளுக்கு ஏற்ப (பிரிவு 269) எந்த மாநிலங்களில் அவைகள் விதிக்கப்படுகின்றனவோ, அந்த மாநிலங்களுக்கே அவைகள் அளிக்கப்படுகின்றன. இவை கீழ்க்கண்ட வரிகள் போன்றவை: சொத்துரிமை வரி, சொத்துவரி (விவசாய நிலமல்லாத மற்றச் சொத்துக்கள்) இருப்புப்பாதைக் கட்டணம், வாடகைமீது இறுதியில் விதிக்கப்படும் வரி, பங்கு மாற்றங்கள், முன்னேக்கிய பேரங்கள்மீதான முத்திரைத் தீர்வையல்லாத மற்ற வரிகள், பத்திரிகைகள் விற்பது, வாங்குவது, அவற்றில் காணப்படும் விளம்பரங்கள்மீதான வரிகள். இவைகளில் இப்பொழுது 1953ஆம் ஆண்டின் சட்டத்தின்கீழ்ச் சொத்து வரிகள்மட்டும் விதிக்கப்படுகின்றன; மொத்த ஆதாயத்தைப் பங்கீடு செய்வதுபற்றிய கோட்பாடுகள் இன்னும் தீர்மானிக்கப்படவில்லை. (iii) மூன்ருவதாக, 270ஆவது பிரிவின்கீழ் மத்திய அரசாங்கத்தினுல் விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டு, ஆனுல், மத்திய அரசாங்கத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே ஒரு குறிப்பிட்ட முறையில் பிரிக்கப்படும் வருமானங்கள் மீதான வரியும் (விவசாய வருமானம் தவிர) முக்கியமாக உள்ளது. (iv) நான்காவதாக, மத்திய அரசாங்கத்தினுல் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு, ஆனுல், மத்திய, மாநில அரசாங்கங்களிடையே பிரிக்கப்படக்கூடிய வரிகள், உதாரணமாக, மத்திய அரசாங்கத்தின் ஆயத்தீர்வை, நிதிக் குழுவின் பரிந்துரைப்படி புகையிலை, தீப்பெட்டி, காய்கறி உற்பத்திப் பொருள்கள் மீதான ஆயத்தீர்வைகள் முதலியன. இப்பொழுது 40 சதவீதம் மாநிலங்களுக்கும், 60 சதவீதம் மத்திய அரசாங்கத்திற்குமாகப் பிரிக்கப்படுகின்றன. மாநிலங்களின் பங்குகள் மக்கள் தொகையின் அடிப்படையில் பிரித்தளிக்கப்படுகின்றன. மத்திய அரசாங்கம் தன்னுடைய நலனுக்காகவே மேல் வரிகளை விதிக்கலாம்; அவைகள் மத்திய அரசாங்கத்தினுல் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு, ஆனுல், 269, 270 பிரிவுகளின்படி மாநிலங்களுக்கு அளிக்கப்படுகின்றன; அல்லது பங்கிட்டுக் கொள்ளப்படுகின்றன. அரசியல் சட்டம் கடைசியானதொரு சமநிலைச் சாதனமாக (பிரிவு 275-ன் கீழ்) மாநிலங்களின் வருமானத்தின் நிதியுதவி ஏற்பாடுகளைச் செய்துள்ளது.

சமீப காலங்களில், பல்வேறு நிலப்பகுதிகளுக்கு இடையே உள்ள வருமான ஏற்றத் தாழ்வுகளைச் சரிசெய்ய நிதியுதவித்

தொகைகள் அதிகமாக உபயோகப்படுத்தப்படுகின்றன. இந்த நிதியுதவித் தொகைகளைக் கொடுப்பதானது நாடெங்கும் மேற்கொள்ளப்படும் சமூக நலப் பணிகள்மீது அரசாங்கக் கட்டுப்பாட்டை ஏற்படுத்துகின்றன. பொதுவான (நிபந்தனைகள் அற்ற), குறிப்பிட்ட (நிபந்தனைகளுக்குட்பட்ட) நிதியுதவிகள், மாநிலங்களுக்குக் கிடைக்கும் வரிகளின் பங்கு தவிர, மத்திய அரசாங்கம் மாநிலங்களுக்கு அளிக்கும் உதவியின் திட்டத்தில் ஒரு பாகமாகும்.

| | 1951-2 கணக்குகள் | 1952-3 கணக்குகள் | 1953-4 கணக்குகள் | 1954-5 கணக்குகள் | 1955-6 சரிபார்க்கப்பட்ட மதிப்பீடுகள் | 1956-7 வரவு செலவு திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|---|---|---|
| கடல் சுங்க வரிகள் | | | | | | |
| இறக்குமதி | 1,41,59 | 1,18,07 | 1,19,60 | 1,41,06 | 1,27,50 | 1,17,00 |
| ஏற்றுமதி (நிகரமாக) | 2,31,69 | 1,73,75 | 1,58,71 | 1,84,86 | 1,65,00 | 1,50,00 |
| மத்திய ஆயத் தீர்வைகள் | 85,78 | 83,03 | 94,98 | 1,08,22 | 1,40,00 | 1,45,45 |
| மாநகராட்சி வரி | 41,41 | 43,80 | 41,54 | 37,33 | 39,84 | 41,84 |
| வருமானத்தின் மீதான மாநகராட்சி வரியைத் தவிர மற்ற வரிகள் | 1,46,19 | 1,41,43 | 1,22,43 | 1,22,26 | 1,33,86 | 1,38,16 |

இப்பொழுது நாம் மத்திய அரசாங்க வருமானத்தின் முக்கிய மூலங்களைப்பற்றி நன்கு ஆராய்வோம்: இதற்கு மேலே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை ஒரு பீடிகையாகும்.[1]

**17. சுங்க வரிகள் (ஏற்றுமதி, இறக்குமதி): (i) இறக்குமதி வரிகள்:** வழக்கமாக விதிக்கப்படும் சுங்க வரி 25 சதவீதமாகும்;

[1] Eastern Economist, Budget Number, 2 March, 1956, pp. 337-8
எண்கள் ரூபாய்களை இலட்சத்தில் குறிப்பிடுகின்றன.

ஆனல், போகப் பொருள்கள்மீது அதிகமாக—100 சதவீதம் வரை கூட—வரி விதிக்கப்படும். கனிப்பொருள், எண்ணெய் வகைகள் (மோட்டார் எண்ணெயைத் தவிர), துணி உற்பத்தியில் உபயோக மாகும் இயந்திரங்கள், கச்சாப் படச்சுருள் முதலியவைகளுக்குக் குறைந்த வீதத்தில் வரி விதிக்கப்படுகின்றன. மத்திய அரசாங்கத் தின் வருமானத்தில் இன்னும் சுங்க வரிதான் தனிப்பட்ட முறையில் மிகப் பெரிய வருமானத்தைக் கொடுக்கும் வரியாகும். மொத்தச் சுங்க வரியில் இறக்குமதி வரி மூன்றில் இரண்டு பாகங்களைக் கொடுக்கிறது. மத்திய அரசாங்கத்தின் வருமானத்தில் அது 30 சதவீதத்தை அளிக் கிறது. இறக்குமதி வரியின் பெரும் பங்கு வருமான வரி மூலமாகத் தான் கிடைக்கிறது. காப்பு வரிகளின் மூலம் கிடைக்கும் தொகை மிகக் குறைவு. கீழ் வரும் அட்டவணை, கடந்த சில ஆண்டுகளாக இறக்குமதி வரியின் மூலம் கிடைத்த வருமானத்தைக் குறிக்கிறது.[1]

| 1953 - 4 | 1954 - 5 | 1955 - 6 | 1956 - 7 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|
| 119·60 | 141·06 | 127·50 | 117·00 |

1914ஆம் ஆண்டு வரை இந்தியாவின் சுங்க வரி அமைப்பானது தடையிலா வாணிபத்தின் அடிப்படையில், இறக்குமதிகளின்மீது மிகச் சாதாரணமான வருமான வரிகளைக் கொண்டிருந்தது. ஆனல், முதல் உலகப் பெரும் போருக்குப்பின் ஏற்பட்ட நிதித் தட்டுப்பாடு சுங்க வரிகளில் விரிவான மாற்றங்களை ஏற்படுத்தியது. இயந்தி ரங்கள், சேமிக்கப்பட்ட பொருள்கள், போகப் பொருள்கள் முதலியன மீது முதன்முதலாக வரி விதிக்கப்பட்டது; பல பொருள்கள் மீதிருந்த வரிகள் உயர்த்தப்பட்டன. 1930-லிருந்து 39 வரை கடுமை யான பொருளாதார மந்தமும், நிதிக் குறைவும் இறக்குமதி வரிகள் மேலும் அதிகரிப்பதற்குக் காரணமாயிருந்தன. 1932ஆம் ஆண்டு ஒட்டாவா (Ottawa) ஒப்பந்தமும், 1939 ஆம் ஆண்டு இந்தியா-பிரிட்டிஷ் வர்த்தக ஒப்பந்தமும், 'பேரரசுச் சலுகை'க் கோட்பாட் டைக் கொண்டுவந்தன. இதன் மூலம் யுனைடெட் கிங்டம் (United Kingdom அதிகப் பயனைப் பெற்றுலும், ஐரோப்பாவின் எல்லா இறக்குமதிகளுக்குமே சலுகை காட்டப்பட்டது. இரண்டாவது உலகப் பெரும் போரின்பொழுது, அப்பொழுது இருந்த இறக்குமதி

[1] Report on Currency and Finance, 1955-6, p. 186. எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

வரிகளின் மேல் 20 சதவீதம் மேல்வரி விதிக்கப்பட்டது. 1948-9, 1949-50 ஆம் வருடங்களில் மோட்டார் வாகனங்கள், துணைக்கருவிகள் மீதான இறக்குமதி வரிகள் அதிகமாக்கப்பட்டன ; ஆனால், யுனைடெட் கிங்டத்திற்கு $7\frac{1}{2}$ சதவீதம் சலுகை காட்டப்பட்டது. 1954-5 ஆம் வருடத்தில் இச்சலுகை நீக்கப்பட்டது. 1946-7 ஆம் ஆண்டு பாக்கு இறக்குமதியின் மீதான வரி (மேல்வரி இல்லாமல்) ஒரு பவுண்டிற்கு $5\frac{1}{2}$ அணுவாகத் திட்டமாக்கப்பட்டது காமன்வெல்த் நாடுகளுக்கு அதில் 6 பைசாச் சலுகை அளிக்கப்பட்டது. 1954-5ஆம் ஆண்டு இவ்வரி $6\frac{1}{2}$ அணுவாக உயர்த்தப்பட்டதன் மூலம் 3 கோடி ரூபாய்கள் அதிக வருமானம் கிடைக்குமெனத் திட்டமிடப்பட்டது.

1954-5 ஆம் ஆண்டில் பிளாஸ்டிக், ரப்பர், மின்சாரம் பாயாமல் பாதுகாக்கப்பட்ட கம்பிகள், மின்சார விசிறிகள், மின்கம்பிகளின் காப்புக் குழாய்கள் (conduits) முதலியவற்றின் மீதான வரிகள் அதிகமாக்கப்பட்டன ; கச்சாப் பருத்தி, சிலவகை எஃகு, எஃகு தகடுகள், இருப்புப் பாதைகள் முதலியவற்றின் மீது இருந்த வரிகள் அகற்றப்பட்டன.

சுங்க வரிகள் நிறையப் பொருள்கள் மேல் விதிக்கப்படுவதும் அல்லாமல், அவ்வரிகளின் தரமும் நிலைபாடும் தொடர்ந்து சரி பார்க்கப்படுகின்றன. ஆகவே, அவைகளில் அநேக மாற்றங்கள் வருடாந்தர நிதி மசோதாவரை காத்திருக்காமல், நிதி ஆண்டின் நடுவிலேயே செய்யப்படுகின்றன.

(ii) ஏற்றுமதித் தீர்வைகள் : கீழ்வரும் அட்டவணை சமீப ஆண்டுகளில் ஏற்றுமதித் தீர்வைகள் மூலம் கிடைத்த வருமானத்தைக் காட்டுகிறது :[1]

| 1952 - 3 கணக்குகள் | 1953 - 4 கணக்குகள் | 1954 - 5 கணக்குகள் | 1955 - 6 சரிபார்க்கப்பட்ட மதிப்பீடு | 1956 - 7 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு |
|---|---|---|---|---|
| 55·97 | 38·53 | 41·37 | 37·00 | 31·70 |

சணல், தேயிலை இவைகளின்மீது விதிக்கப்படும் ஏற்றுமதித் தீர்வைகளே மிக முக்கியமானவைகளாகும். கீழ்ச் சொல்லப்படுவது

[1] Report on Currency and Finance, 1955-6, p. 186. எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

ஏற்றுமதித் தீர்வைகள் தோன்றிய விதத்தின் சுருக்கம ம். 1860 ஆம் ஆண்டுவரை எல்லா ஏற்றுமதிகள் மேலும் ெ மான விகிதத்தில் 3 சத வீதமாக இருந்தது. 1860 ஆம் ஆ டு முதல் 1880 ஆம் ஆண்டு வரை ஏற்றுமதித் தீர்வைகள் நீக் ப்பட வேண்டும் என்ற கொள்கை தீவிரமாகப் பின்பற்றப்பட , அதன் விளைவாக 1880 ஆம் ஆண்டு அரிசி ஒன்றின்மீது —டும் ஏற்றுமதித் தீர்வை இருந்தது. 1903 ஆம் ஆண்டு தேயி மேல் ஏற்றுமதித் தீர்வை விதிக்கப்பட்டது. 1916-17 ஆம் ண்டிற்குப் பின் ஏற்றுமதித் தீர்வைகள் விதிக்கப்பட்ட பொரு களாவன : சணல், பதனிடப்படாத தோல் முதலியன. இர டாவது உலகப் போருக்கு முன்பிருந்த காலத்தில் ஏற்றுமதித் தீ வைகளின் முக்கிய அம்சங்களாவன : மிக உயர்ந்த ஏற்றுமதித் தீர்வை, ஒருமைப்பாடு அற்ற, முறிவுற்ற நிலை, தடையிலா வாணிபத்தின் கட்டுப்பாடு, போகப் பொருள் இறக்குமதியின் மீது சிறப்பு வரிகள், கடைசியாகப் புதிய ஏற்றுமதித் தீர்வைகள். சமீப ஆண்டுகளில் பணவீக்கத்தைக் குறைக்கவும், ஏற்றுமதிப் பொருள்களின் உள் நாட்டு, வெளிநாட்டு விலைகளில் மிகுந்த ஏற்றத் தாழ்வுகள் இருக்குமானால், அதிலிருந்து கிடைக்கும் இலாபத்தை நாட்டின் நிதிச்சாலை (exchequer) பெறவும், ஏற்றுமதித் தீர்வைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன. இந்திய அரசாங்கம், இத்தீர்வைகளின் விளைவுகளைத் தொடர்ச்சியாகச் சரிபார்த்துக்கொண்டே இருக்கிறது ; தேவைப்படும்பொழுது உலகச் சந்தையில் இந்தியாவின் நிலையை உறுதியாக்க மாற்றங்கள் செய்யப்படுகின்றன.

18. **மத்திய அரசாங்கத்தின் ஆயத்தீர்வைகள்:** உப்பு வரியைத் தவிர, மத்திய அரசாங்கம் 1894 ஆம் ஆண்டு விதித்த முதல் ஆயத்தீர்வை 20 நூலிழைத் தரத்திற்கு மேற்பட்ட பருத்தி நூல் மேலாகும். 1896 ஆம் ஆண்டு இது ஆலைத்துணிமேல் விதிக்கப்பட்ட ஆயத்தீர்வையாக மாறியது. லங்காஷயர், இந்தியச் சந்தையில் இந்திய உற்பத்திக்குப் போட்டியாகத் தனது பிடியை நழுவவிடாமல் இருப்பதற்காக இவ்வித மாற்றங்களைச் செய்யத் தூண்டியது. நாட்டின் நலனுக்கு ஊறு விளைவிக்கும் இக்கொள்கைக்கு எதிராக மக்கள் கருத்து உருவாகி, காலப்போக்கில் வலுப்பெற்று, 1926 ஆம் ஆண்டு இந்த வரி நீக்கப்படுமாறு செய்தது. இப்பொழுது இருக்கும் ஆயத் தீர்வைகளுள் மோட்டார் எண்ணெயின் மேலும் (1917), மண்ணெண்ணெயின்மேலும் (1922) விதிக்கப்பட்ட தீர்வைகளே மிகப் பழமையானவை. 1934 ஆம் ஆண்டு ரப்பர் சுற்றுக்கள் (tyres) மேலும், 1943ஆம் ஆண்டு காய்கறி உற்பத்திப் பொருள்கள்மேலும் ஆயத்தீர்வைகள் விதிக்கப்பட்டன. இதைவிட முக்கியமானது என்னவென்றால், இதுவரை திடமாக அமைக்கப்பட்ட தொழில்களின் உற்பத்தியின்மீதுதான் ஆயத்தீர்வை விதிக்கப்

படவேண்டும் என்ற விதியிலிருந்து விலகி, புகையிலைமீது ஆயத் தீர்வை விதிக்கப்பட்டது. அதற்குப்பின் வந்த ஆண்டுகளில் புகையிலை மீதான தீர்வைகளின் விகிதங்களிலும், செயல் எல்லைகளிலும் பல மாற்றங்கள் செய்யப்பட்டு, அதன் விளைவாக வருமானம் மிக விரைவாகப் பெருகியது. 1944-5 ஆம் வருடம் பாக்கு, காப்பி, தேயிலை முதலியன ஆயச் சுங்கத் தீர்வைகளின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. 1949 ஆம் ஆண்டு ஆயச் சுங்கத்தீர்வைகள் விரிவாக்கப்பட்டது முக்கியமானதொரு முன்னேற்றமாகும். 1954 ஆம் ஆண்டு, ஆர்ட் பட்டு. சிமென்டு, சோப், காலணி முதலியவைகள்மீது தீர்வைகள் விதிக்கப்பட்டன. சுங்கத் தீர்வைகளின் மூலம் கிடைக்கும் வருமானம் ஒப்புமையில் நிலையற்றிருந்தது. மேலும், வாணிபக் கொள்கையின் ஏற்றத் தாழ்வுகள், நாணய மாற்றுக் கிடைக்கும் அளவு ஆகியவைகள் அதைப் பாதிக்கும். ஆகவே, இதன்பின் உள்நாட்டுத் தொழில்கள் உற்பத்தி செய்யும் நுகர்வோர் பொருள்களின்மீது ஆயத்தீர்வை விதிப்பதானது அவசியமானது. மேலும், 1954-5 ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்ட உரையில், 'கடந்த காலத்தில், காப்புக் கொள்கையின் விளைவாகவும், நுகர்வோர் அதிகமாகக் கொடுத்த தீர்வைகளாலும் விரிவடைந்த தொழில்கள் இப்பொழுது முதிர்ச்சியுற்ற நிலையில் நாட்டின் வருமானத்திற்கு நல்ல பங்கு அளிக்க வேண்டுவது பொருத்தமே' என்று நிதியமைச்சர் கூறினர். ஆயத் தீர்வைகளால் மத்திய அரசாங்கத்திற்குக் கிடைத்த வருமானம் தொடர்ச்சியாக அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது. 1938-9-ல் 8·66 கோடி ரூபாய்கள்; 1948-9-ல் 50·63 கோடி ரூபாய்கள்; 1955-6-ல் சரிபார்க்கப்பட்ட மதிப்பீட்டின்படி 140 கோடி ரூபாய்கள்.

பொருள்கள்மீது விதிக்கப்படும் வரிகளும், வாழ்க்கைக்குத் தேவையான பொருள்கள்மீதான வரிகளும் இப்பொழுது அரசிறை வருமான அமைப்பில் முக்கியமான அங்கம் வகிக்கின்றன. இவைகள் மொத்த வருமானத்தில் 45 சதவீதமே யாகும்.

19. **வருமான வரி**: வருமான வரி இன்றைய உருவில் முதன் முதலாக 1860 ஆம் வருடம் விதிக்கப்பட்டு, விவசாய வருமானம் உள்பட எல்லா வருமானங்கள்மேலும் சுமத்தப்பட்டது.[1] அவ்வப்போது நிதித் தேவைகளுக்கு இணங்க வரிவீத அமைப்பில் மாற்றங்கள் செய்யப்பட்டன. முக்கியமான மாற்றங்கள் பக்கம் 28-ல் சுருக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன :

[1] *எனினும், 1886 ஆம் ஆண்டு முதல் வருமான வரிச் சட்டங்கள் விவசாய வருமானத்தை அவைகளின் எல்லையிலிருந்து ஒதுக்கிவிட்டன. 1935 ஆம் ஆண்டு அரசாங்கச் சட்டப்படி விவசாய வருமானத்தை வரிக்குள்ளாக்குவது மாநிலங்களின் உரிமையாகிவிட்டது. அநேக A, B பிரிவு மாநிலங்கள் அதன்பின் விவசாய வருமான வரியைப் புகுத்தி இருக்கின்றன.*

**1903** : வரியில்லா வருமான எல்லை ரூ. 500-லிருந்து ரூ. 2,000-க்கு அதிகரிக்கப்பட்டது.

**1916** : சாதாரண வருமான வரியில் வளர்வீத முறை புகுத்தப்பட்டது (எட்டுவகையான வருமானங்களுக்கு ஏற்ப எட்டுவகையான பல்வேறு வரிவீதங்கள் ஏற்படுத்தப்பட்டன).

**1917–20** : வருமான வரிக்கு மேலாக ஒரு மேல்வரி (super tax) விதிக்கப்பட்டது ; அதாவது, போரின்பொழுது கிடைத்த அதிக இலாபத்தின்மீது வரி விதிக்கப்பட்டு, போர் முடிந்தவுடன் நீக்கப்பட்டது.

**1921-31** : சாதாரண வருமான வரியிலும், மேல்வரியிலும் வளர்வீத அளவுகள் சரிபார்க்கப்பட்டு உயர்த்தப்பட்டன; வரியில்லா வருமான எல்லை ரூ. 1,000 ஆகக் குறைக்கப்பட்டது.

**1933-36** : குறைந்த வருமானங்களின்மீதான வருமான வரிவீதங்கள் குறைக்கப்பட்டன. வரியில்லா வருமான எல்லை ரூ. 2,000 ஆக அதிகரிக்கப்பட்டது.

1936 ஆம் ஆண்டு வாச்சா (Vacha) குழுவின் அறிக்கைக்குப்பின் பொருளாதார சமூக நோக்குகளில் அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்த அளவையாகிய பிரிக்கப்படாத இந்துக் குடும்பம் இந்த வரியின் செயலுரமிக்க எல்லைக்குள் கொண்டுவரப்பட்டது.

1939 ஆம் ஆண்டு படிமுறைக்குப் (step system) பதிலாகத் துண்டுமுறை (slab system) புகுத்தப்பட்டது.[1] அந்த ஆண்டு முதல், வரியில்லா வருமானத் துண்டாக ரூ. 1,500 ஏற்படுத்தப்பட்ட பொழுதும், அதன்பின் வந்த துண்டுகளுக்கு வளர் வீதத்தில் வரி விதிக்கப்பட்டபொழுதும் அது மேலும் சீராக்கப்பட்டது. 1940 ஆம் ஆண்டு மார்ச் மாதம் எல்லா இயல்பு கடந்த இலாபங்கள்மீதும் 50 சதவீத வரி விதிக்கப்பட்டபொழுது அதிக இலாப வரி புகுத்தப்பட்டது. 1939ஆம் ஆண்டு வருமானவரிக்கு விதிக்கப்பட்ட மேல்வரி நீக்கப்பட்டது. ஆனால், 1940 ஆம் ஆண்டு மீண்டும் விதிக்கப்பட்டது. 1943 ஆம் ஆண்டு 16 ஆம் உத்தரவின்படி அதிக இலாப வரியில் ஐந்தில் ஒரு பாகம் அரசாங்கத்திடம் சேமிப்புச் செய்யப்பட வேண்டுமெனச் சட்டம்

[1] 'படி முறை', 'துண்டு முறை' இரண்டிலுமே குறைந்த வருமானத்திலிருந்து அதிக வருமானத்திற்குச் செல்லும்பொழுது வரி வீதங்கள் வளர் வீதத்தில் செல்லுகின்றன. ஆனல், முந்தியதில், ஒவ்வொரு ரூபாய்க்கு ஒரே வீதத்தில் வரி விதிக்கப்படுகின்றது; பிந்தியதில் வரி விதிக்கப்பட்ட ஒவ்வொரு துண்டும் வெவ்வேறு வீதத்தில் இருக்கிறது.

பிறந்தது. 1944 ஆம் ஆண்டு இது அறுபத்து நான்கில் பத்தொன்பது பாகங்களாக உயர்த்தப்பட்டது. முன்பணம் கொடுத்தலும், கட்டாயச் சேமிப்பும் பணவீக்கத்தைக் குறைக்கும் சாதனங்களாகக் கருதப்பட்டன. 1945-6 ஆம் ஆண்டு உழைத்துச் சம்பாதித்த வருவாய்க்கும், உழைக்காமல் சம்பாதித்த வருவாய்க்கும் உள்ள வேற்றுமை புகுத்தப்பட்டது. போர்க் காலத்தில் வரி வீதங்கள் வளர் வீதத்தில் அதிகரிக்கப்பட்டன.

1946-7 ஆம் ஆண்டு தொழில் முன்னேற்றத்தை ஊக்குவிக்க நிறையச் சலுகைகள் கொடுக்கப்பட்டன. அதிக இலாப வரி நீக்கப்பட்டது. அதற்குப் பதிலாக வியாபார இலாப வரி 1947-8-ல் புகுத்தப்பட்டது [மொத்த இலாபங்கள் இலாப ஈவுகளுக்கும் (dividends) காப்பு நிதிகளுக்கும் ஒதுக்கப்படுவதற்கு முன் விதிக்கப்பட்ட ஒரு நிலையான வீதம்]. 1947-8 ஆம்ஆண்டு முதலீட்டு ஆதாய வரி புகுத்தப்பட்டது. ஆனல், அது மக்களிடத்தில் செல்வாக்கு அற்றதாகவும், பயனற்றதாகவும் இருந்ததால், 1949-50 ஆம் ஆண்டு நீக்கப்பட்டது. 1950-1 ஆம் ஆண்டு வியாபார இலாப வரி நீக்கப்பட்டது. மிக உயர்ந்த வருமான வரி ரூபாய்க்கு 5 அணுவிலிருந்து 4 அணுவாகக் குறைக்கப்பட்டது. பிரிக்கப்படாத குடும்பத்திற்கு வரியற்ற வருமான எல்லே ரூ. 6,000 எனக் கொள்ளப்பட்டது. மேல்வரியைப் பொறுத்தமட்டில் உழைத்து ஈட்டிய வருவாய்க்கும், உழைக்காமல் ஈட்டிய வருவாய்க்கும் வேறுபாடு இல்லே. மேல்வரிக்கும் திறமைச் செல்வ வரிக்கும் அதிகபட்ச வரிகள் குறைக்கப்பட்டன. தற்பொழுது (1956) தனி நபர்கள், பிரிக்கப்படாத இந்துக் குடும்பங்கள், பதிவு செய்யப்படாத நிறுவனங்கள், மற்றக் கம்பெனிகள் முதலியவற்றிற்கு வருமான வரி வீதங்கள்: திருமணமான தனி நபர்களும், பிரிக்கப்படாத இந்துக் குடும்பங்களும் ஆண்டின் மொத்த வருவாயில் முதல் ரூ. 2,000 வரை வரியில்லே. மொத்த வருமானத்தில் அடுத்த ரூ. 3,000-க்கு ரூபாயில் 9 பைசா; மொத்த வருமானத்தில் அடுத்த ரூ. 2,500-க்கு ரூபாயில் 1 அணுவும், 9 பைசாவும்; மொத்த வருமானத்தில் அடுத்த ரூ. 2,500-க்கு ரூபாயில் இரண்டு அணு 3 பைசாக்கள்; மொத்த வருமானத்தில் அடுத்த ரூ. 5,000-க்கு ரூபாயில் மூன்று அணுவும் மூன்று பைசாவும்; மீதித்தொகை ரூபாயில் நான்கு அணு; குறிக்கப்பட்ட வீதங்களில் $\frac{1}{20}$ பங்கு மேல்வரியும் விதிக்கப்படலாம். ரூ. 20,000-க்கு மேற்பட்ட ஆண்டு வருமானங்களுக்குக் குறிப்பிட்ட வீதங்களில் மேல்வரியும் விதிக்கப்படலாம். உழைத்து ஈட்டிய வருமானத்திற்கு, மொத்த வருமானத்தில் $\frac{1}{5}$ பாகம் விலக்கு அளிக்கப்படும். வாணிபச் சங்கங்கள் (கம்பெனிகள்): கம்பெனிகளேப்பற்றிய வருமான வரி விகிதம் ரூபாய்க்கு நான்கு அணுவாகும்; மேலும், மொத்த வருமானத்தில் ஒரு ரூபாய்க்கு நான்கு அணுவில் $\frac{1}{20}$ பங்கு மேல்வரியாக

விதிக்கப்படும். மொத்த வருமானம் ரூ. 25,000-க்கு மேல் செல்லு மானால், மேல் வரியும், மேல்வரி மேல் தண்டமும் குறிப்பிட்ட வீதங் களில் விதிக்கப்படுகின்றன.

வருமான இலாப வரிகள் (i) மாநகராட்சி வரி (ii) வருமானங்கள் மீதான மாநகராட்சி அல்லாத மற்ற வரிகள் என வகைப்படுத்தப்படு கின்றன. இவைகளில் ஒவ்வொரு வகையும் சாதாரண வசூல்கள், மேல்வரி, அமித இலாப வரி, வியாபார இலாப வரி முதலியனவாகப் பிரிக்கப்படுகின்றன. இவ் வேறுபாடு முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில், மாநகராட்சி வரி முழுவதும் மத்திய அரசாங்கத்திற்குச் சேருகிறது; மற்ற வருமானங்கள் மாநிலங்களுடன் பங்கிட்டுக் கொள்ளப்படுகின்றன. வருமான வரி கூட்டரசு நிதியத்தில் மத்திய, மாநில அரசாங்கங்களின் தேவைகளுக்கு ஏற்றபடி வருமானம் கிடைப்பதை ஒழுங்குபடுத்தும் சமநிலைச் சாதனமாக அமைந் துள்ளது.

**20. வருமானத்தின் மற்ற மூலங்கள்:** மற்ற வருமான மூலங்களைத் தவிர அபின், செலாவணி-நாணயச்சாலை, தபால்-தந்தி, சொத்துவரி முதலியனவும் மத்திய அரசாங்கத்திற்கு உள்ளன. இவைகளில் சில வரிகள் வியாபார இலாபத்தன்மை உடையனவாய் இருக்கின்றன. உதாரணமாக அபினிலிருந்து கிடைக்கும் வரு மானம் விற்பனைச் சர்வாதீனத்தின் இலாபமாகக் கருதப்படலாம். ஏனெனில், மத்திய அரசாங்கத்திற்கு அதை உற்பத்தி செய்யவும் விற்பனை செய்யவும் முழு உரிமை உண்டு. கசகசாச் செடி வளர்க்க அரசாங்க அனுமதி வேண்டும். அவ்வாறு அனுமதி பெற்றவர் முழு உற்பத்தியையும் அரசாங்கத்திற்கே விற்க வேண்டும். அரசாங்கத் தொழிற்சாலைகளில் அபின் உற்பத்தி செய்யப்படுகிறது. சென்ற சில வருடங்களில் இந்தக் காரியத்தில் மத்திய அரசாங்கத்தின் வருமானத்தில் நிகர இழப்புத்தான் இருந்தது. அபின் உள்நாட்டு நுகர்ச்சிக்காக மாநிலங்களுக்கு விற்கப்படுகின்றது. மருத்துவ உபயோகத்திற்காக வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதியாகிறது. உள் நாட்டில் அபின் உபயோகத்தை முழுதும் தடுக்கும் நோக்கத்துடன் அதன் அளிப்பை வளர் வீதத்தில் குறைத்துக்கொண்டே வருகி றார்கள். 1949-லிருந்து பத்து ஆண்டுகளில் இது நிறைவேறும். இருப் புப்பாதை போக்குவரத்தின் வருமானத்தைப்பற்றி ஏற்கெனவே கூறப்பட்டிருக்கிறது (அத்தியாயம் XVI - பார்க்கவும்). மத்திய வருமானத்திற்குத் தபால்-தந்தி இலாகா ஓர் ஆண்டிற்கு 1½ கோடி ரூபாய்கள் கொடுக்கின்றது.

**21. சொத்து வரி:** சொத்து வரி 1953 ஆம் ஆண்டு நிறை வேற்றப்பட்டு, 1953ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 15 ஆம்

நாள் செயலுக்கு (அமலுக்கு) வந்தது. இது ஒருவர் இறந்தபின் கைமாறும் சொத்துகளின் மதிப்பின்மேல் அச் சொத்து யாருக்குச் செல்லுகிறது என்பதைப் பாராது விதிக்கப்படும் மாற்றத்தின் வரியாகும். அவ்வாறு விதிக்கப்படும் சொத்து வரியின் விகிதத்தை நிர்ணயிக்க, ஒருவர் இறந்தபின் கைமாறும் அல்லது கைமாறவேண்டிய எல்லாச் சொத்துகளையும் (சில விதிவிலக்குகளைத் தவிர) ஒரே சொத்தாக ஒருமிக்க எடுத்துக்கொள்ள வேண்டும். சிலவகையான சொத்துகள், உதாரணமாக, அட்டவணையில் குறிக்கப்படாத மாநிலங்களின் விவசாய நிலங்கள் முதலியன இந்தத் தீர்வையிலிருந்து விலக்கப்பட்டிருந்தாலும், மொத்தச் சொத்தின் மதிப்பைப் பெற அவைகளையும் சேர்த்துக் கணக்கிடவேண்டும்.

வரி விதிக்கப்படக்கூடிய சொத்தின் மதிப்பைக் கணக்கிடும் பொழுது சிலவற்றைக் கழிக்கமுடியும். உதாரணமாக (i) ரூ. 1,000 வரை ஈமச் சடங்குச் செலவுகள்; (ii) உண்மையான கடன்கள் (செலுத்தப்படவேண்டிய வரிகள் உள்பட) சொத்தின் மேல் உள்ள வில்லங்கங்கள்; (iii) கைம்மைக்காகக் கொடுக்கப்படவேண்டிய கடன்கள் ரூ. 5,000-க்குமேல் செல்லாமல்; (iv) அயல் நாட்டிலிருக்கும் சொத்தை நிர்வகிக்கவோ அல்லது உரிமை செய்யவோ ஆகும் செலவுகள் (சொத்தின் மதிப்பில் 5 சதவீதத்திற்கு மேற்படா வண்ணம்). வரிசையாக வரும் ஒவ்வொரு துண்டிற்கும் வளர்வீதத்தில் செல்லும் வேறுபட்ட வீதங்களில் வரி விதிக்கப்படும். ஒரு பிரிக்கப்படாத இந்துக் குடும்பத்திற்கு முதல் துண்டான ரூ. 50,000-க்கு வரியில்லை. மற்ற நிலைகளில் முதல் துண்டான ரூ. 1,00,000-க்கு வரியில்லை. சில வகைச் சொத்துகளுக்கு வரியில்லை; உதாரணமாக, எவ்விதத் தடையுமின்றி அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறு கொடுக்கப்பட்ட சொத்து, பொது தர்மக் காரியமாயிருந்தால் ஆறு மாதங்களுக்குள்ளும், மற்ற அன்பளிப்புகளுக்கு இரண்டு வருடங்களுக்குள்ளும் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். சொத்தைப் பெறுவோர் உடனே அச்சொத்தின் முழு உரிமையையும் தனதாக்கிக் கொள்ளவேண்டும். சொத்தை அளிப்போர் உடன்படிக்கையாலோ அல்லது வேறு ஏற்பாடுகளாலோ அதில் எந்த நலனையும் தனக்கென வைத்துக்கொள்ளக்கூடாது. அதில் எவ்விதத் தடையோ மறைமுக ஏற்பாடோ இருக்கக்கூடாது. இந்த வரி விதிக்கப்படக்கூடிய மாநிலங்களுக்குள் இந்த வரியின் நிகர ஆதாயம் பிரித்தளிக்கப்பட வேண்டும். விவசாய நிலங்கள் மீதான சொத்துரிமை வரியும் மாநிலங்களின் சட்டசபைகளின் எல்லைகளுக்கு உட்பட்டவை.

இப்பொழுதிருக்கும் வரியில்லா எல்லைகளைக் குறைக்க முடியுமா என்பதையும், இறப்பிற்கு இரண்டு வருடங்களுக்குள் தானமாக-

அளிக்கப்பட்ட சொத்துக்களும், சொத்து வரியின் கீழ் வரும் என்று இருப்பதை, ஐந்து வருடங்களுக்குள் என ஆக்கப்படலாமா என்பதையும் ஆராயும்படி வரி விசாரணைக்குழு அரசாங்கத்திற்குப் பரிந்துரைத்தது.

**22. உப்பு வரி:** உப்பு வரியானது இந்திய நிதிமுறையின் ஒரு பகுதியாக 1882 ஆம் ஆண்டு முதல் 1947 ஆம் ஆண்டுவரை பல்வேறு நிலைகளில் மக்களின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாது பிரிட்டிஷாரால் விதிக்கப்பட்டிருந்தது என்றால், இது மக்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்றின்மேல் தேய்வு வீத முறையில் போடப்பட்ட வரியாகும். ஆனால், அதற்கு மாறாக பிரிட்டிஷ் அரசாங்கம் அதன் நிலைபாடு சுமையற்றது; மக்கள் இவ்வரியைச் செலுத்திப் பழகிவிட்டனர். இவ்வரியைக் கைவிடுதலானது அரசாங்க வருமானத்தைக் [1] குறைக்கும் என்ற காரணங்களைக் காட்டி அதைக் கைவிட மனமில்லாமல் இருந்தது. மேலும், கொள்கையளவில் அது ஒன்றுதான் சாதாரண மக்களைச் சென்று அடையும் வழி யென்றும் மக்கள் தங்கள் அரசியல் கடமைகளை உணரச் செய்ய அதுவே வழி யென்றும் கூறப்பட்டது.

ஆயினும், இவ்வரிக்கு எதிராக மக்களின் தொடர்ந்த எதிர்ப்பும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கற்சுவர் போன்ற விட்டுக் கொடுக்காத போக்கும் இதை ஒரு நல்ல அரசியல் பிரச்சினையாக மாற்றியது மன்றி, உப்புவரி அந்நிய ஆதிக்கத்தின் சின்னமாகக் கருதப்பட்டது. ஆகவே, சுதந்திர இந்தியாவின் முதல் செயல் இந்த உப்பு வரியை நீக்கியதுதான் என்பதில் வியப்பில்லை.

இப்பொழுது இவ்வரியின் அரசியல் முக்கியத்துவம் மறைந்து விடவே, அதன் பொருளாதாரப் பண்புகளை ஆராய்வோம். வரி விசாரணைக் குழுவின் கருத்துக்கிணங்க உப்புவரி மேலும் நீடிக்க அவசியமில்லை; ஏனெனில், சாதாரண மக்களால் நுகரப்படும் பல பொருங்களின்மீது ஏற்கெனவே வரி விதிக்கப்பட்டிருப்பதுமன்றி, இந்தப் புது வரிகளின் எல்லையும் வருமானமும் அதிகரிக்கப்படவும் வழி இருக்கிறது. மேலும், விற்பனை வரிகள் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கின்றன என்றால், அவைகளின் செயலாற்றும் எல்லைகள் அதிகமாக விரிவாக்கப்பட்டிருப்பதுமன்றி, அவைகளின் நிலைபாடு உப்பு வரியின் நிலைபாட்டைப்போலவே இருக்கின்றது. இவ்வகையான வாதம், இக்குழு இன்னொரு இடத்தில் கூறியிருக்கும்

கருத்துக்கு முரண்பட்டதாயிருக்கிறது. பல வகையான முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்ற நுகர்வோர் பொருள்கள்மீது மேலும் வரி விதிப்பது கூடுமானதும் விரும்பத்தக்கதும் ஆகும்.[1]

உப்பு வரியை மேலும் திணிப்பதால் ஏற்படக்கூடிய பெரிய எதிர்ப்பைப் பற்றிய பயம் அக் குழுவிற்கு மிக உண்டு என மிகைப்படுத்திக் கூறலாம். எந்தப் புது வரியையும்போல் உப்பு வரியும் முதலில் அதிருப்தியின் முணுமுணுப்பை ஏற்படுத்தும். ஆனால், குறுகிய காலத்தில் மக்கள் பழகிப்போய்விடுவார்கள்; ஏனெனில், ஏற்கெனவே ஒப்புக்கொண்டுள்ளபடி அதன் நிலைபாடு ஒப்புமையில் சுமையற்றது. எப்படியும் முன்பு மக்கள் உப்பு வரியை வெறுக்கும்படி போதிக்கப்பட்டிருந்தால், இப்பொழுது அதை விரும்பும்படி அல்லது அதைப் பொறுத்துக்கொள்ளும்படியாகவாவது போதிக்க முடியும். மக்களின் ஆதரவு பெற்ற அரசாங்கத்தின் பிரசாரத்தினால் இது முடியும். சுருக்கமாகக் கூறவேண்டுமானால், நாட்டின் முன்னேற்றத் திட்டங்களுக்காக வரிச்சுமையை அதிகரிப்பது அவசியமானால், உப்பு வரியை மறுபடியும் புகுத்தி, அதிக வருமானத்தை அடையும் வழிகளுள் அதையும் ஒன்றாகக் கொள்ளுவதை நிராகரிக்க எந்தக் காரணமும் இல்லை.[2]

23. **கால்டர் அறிக்கை** (Kaldor Report): திரு. நிக்கோலாஸ் கால்டர் (Mr. Nicholas Kaldor) என்ற புகழ்வாய்ந்த கேம்பிரிட்ஜ் பொருளாதார நிபுணர், இந்தியாவின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் வருமானத் தேவைகளுக்காக, இந்திய வரி அமைப்பைப் பற்றி விசாரணை செய்ய இந்தியப் புள்ளியியல் நிலையத்தால் (Indian Statistical Institute) இந்தியாவிற்கு வருமாறு அழைக்கப்பட்டார். அவர் தனி நபர், வியாபார வரிகளைப் பற்றி நுணுக்கமாக ஆராயத் தலைப்பட்டு, 1956 ஆம் ஆண்டு ஜனவரித் திங்களின் மத்தியிலிருந்து 1956 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் இறுதிவரை நடத்திய ஆராய்ச்சியின் பயனாகத் தயாரித்த தமது அறிக்கையை இந்திய அரசாங்கத்தின் நிதி அமைச்சரிடம் சமர்ப்பித்தார்.

[1] *வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள்மீது தேய்வீத நிலைபாடு உள்ள வரிகளைச் சுமத்துவது தவறாகும் என்ற கருத்து, இப்பொழுது கொள்கையளவில் இல்லாவிட்டாலும் செயலளவில் கைவிடப்பட்டதாகத் தோன்றுகிறது.*

[2] *1955 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 2 ஆம் நாள், நிதி அமைச்சர் திரு.* C.D. *தேஷ்முக்* (C.D. Deshmukh) *உப்பு வரியானது ஓர் 'இறந்த, உப்பிடப்பட்ட' பிரச்சினையாதலால் அது மீண்டும் புகுத்தப்படமாட்டாது எனக் கூறினார். ஆயினும், இது மாற்றப்பட முடியாத முன்னறிவிப்பு அல்ல. திரு. தேஷ்முக்கிற்குப் பின்வரும் தேவைகள் நிறைந்த கருத்துக் கட்டுப்பாடற்ற ஒரு அமைச்சருக்கு, அது இறந்து, உப்பிடப்பட்டு இருந்தாலும், தமது தேவைகளைப் பூர்த்தி செய்யக் கூடியதாய் இருக்கும்.*

திரு. கால்டர் அவர்கள் கருத்துப்படி இப்பொழுது இருக்கும் நேர்முக வரி அமைப்பு நேர்மையற்றதும் திறமையற்றதுமாகும். அது ஏன் நேர்மையற்றது என்ருல், இப்பொழுதிருக்கும் வரி விதிப்பின் அடிப்படை, அதாவது, சட்டத்திஞல் வரையறுக்கப்பட்ட 'வருமானம்' என்பது வரிதாங்கு வல்லமையை அளக்கும் கோலாக உபயோகப்படும்பொழுது குற்றங்கள் நிறைந்ததாயும், பாரபட்சம் உள்ளதாயும் அமைகிறது. அது ஏன் திறமையற்றது எனில், மிகப் பெரிய அளவில் வரி செலுத்தாமல் தப்பித்துக்கொள்ளுவதை அது சுலபமாக்குகிறது.[1] வரி தவிர்ப்பைச் (Tax Evasion) சமாளிக்க, அவர் நான்கு புது வரிகளைத் தெரிவித்தார்; அவையாவன: முதலீட்டு ஆதாய வரி, ஆண்டுதோறும் செல்வ வரி, சொந்தச் செலவு வரி (ஒரு வருடத்திற்கு ஒரு நபருக்கு ரூ. 10,000-க்கு மேல் ஆகும் செலவு), பொது அன்பளிப்பு வரி. இவைகள் வருமான வரியுடன் ஒரே விரிவான கணக்காக எடுத்துக்கொள்ளப்படும். இந்த ஏற்பாட்டிஞல் வரி தவிர்ப்பு நீக்கப்படும்; எவ்வாறெனில், ஒரு வரியில் மறைத்தோ குறைவாகவோ கொடுக்கப்படும் தொகை, மற்ற வரிகளில் அதிகமாகக் காண்பிக்கப்படல் வேண்டும். மேலும், ஒரு வரி செலுத்துபவரால், அதிக வரியிலிருந்து தப்பித்துக்கொள்ளக் கொடுக்கப்படும் தகவல்கள் உடனே மற்றவர்கள் வரிக்குரிய ஆதாயங்களை ஈட்டியிருப்பதைக் காட்டிவிடும். திரு. கால்டரின் கருத்துப்படி சொந்த வருமான வரிக்குக் குறைந்தபட்ச சதவீதம் 45-க்கு மேல் செல்லக்கூடாது (இப்பொழுது 92 சதவீதம் இருக்கிறது). திட்டங்களின் இலக்குகள் நிறைவேற்றப்பட வேண்டுமாகில், சாதாரண மக்கள்மீது வரிவிதிப்பு மூலமோ, பணவீக்கத்திஞல் உண்டாகும் விலையேற்றத்திஞலோ ஏற்படும் சுமையைக் குறைக்க, வாழ்க்கை வசதிகள் நிரம்பிய சிறுபான்மையோர் மேல் திறமையாகத் திட்டமிட்டுச் சில நேர்முக வரிகளைச் சுமத்தவேண்டியது அவசியமாகும் என அவர் குறிப்பிட்டார். இதைச் செய்யத் தவறிஞல், திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்படும் பெரிய செலவினங்கள் செல்வரின் செல்வத்தை அதிகமாக்குவதோடு, சாதாரண மக்களின் துன்பத்தையும் அதிகமாக்கும்.

வரி விசாரணைக் குழுவைப்போல் திரு. கால்டரும் நில வருமானத்தை அதிகமாக்குமாறு யோசனை கூறியுள்ளார். (தற்பொழுது அது விவசாயத்தின் நிகர உற்பத்தியில் ஒரு சதவீதமே ஆகும். இதை அதிகரிப்பது நெடுநாளையத் தேவையாகும்.) மேலும், தேவைப்பட்டால் பெரும்பாலான மக்களால் உபயோகிக்கப்படும் சில குறிப்

[1] ஒவ்வொரு வருடமும் வருமான வரியில் சுமார் 300 கோடி ரூபாய்கள் வரி செலுத்தப்படாமல் தப்பிவிடுகின்றன எனத் திரு கால்டர் நம்புகிருர். மத்திய வருமானக்குழுவின் (Central Board of Revenue) கருத்துப்படி இதில் பாதித் தொகை தப்பிவருகிறது.

பிட்ட பொருள்கள்மீது ஆயத்தீர்வை விதிக்கும்படி ஆலோசனை கூறுகிருர்.[1]

**24. மத்திய வருமானமும் செலவும் (வருமானக் கணக்கு):** வருமானக் கணக்கில் மத்திய அரசாங்கத்தின் முக்கியமான செலவு இனங்கள் 36-37-வது பக்கத்திலுள்ள அட்டவணையில் காட்டப்பட்டிருக்கிறது.[2]

மத்திய வருமானத்தில் ஏறக்குறைய சரிபாதி நாட்டின் பாதுகாப்பிற்குச் செலவாகிறது. மாநிலங்களைப் பொறுத்தவரை, மொத்தப் பொது மூலதனத்தில் 25-லிருந்து 29 சதவீதம் வரை பாதுகாப்பிற்குச் செலவிடப்படுகின்றது. பொது வரவு செலவுத் திட்டத்தில் ஏறக்குறைய முழுப் பாதுகாப்புச் செலவைவும், அதன் பெரும் பகுதியான, உண்மையில், மூலதனச் செலவும் அடங்கி இருக்கிறது என்பதை மனத்தில் இருத்திக்கொள்ளவேண்டும். இதேபோல் இராணுவத்தைச் சேராத அநேக பணிகள், உதாரணமாக, மாநில கவர்னர்களின் வீட்டிலுள்ள பணிகள், பாதுகாப்புச் செலவினங்களில் காணப்படுகின்றன. பழைய மாநில மன்னர்களின் இராணுவங்களை இணைப்பதிலும் நிர்வகிப்பதிலும் துவக்கத்தில் அதிகச் செலவு செய்யவேண்டியதாய் இருக்கிறது. மேலும், சுதந்திரத்திற்குப் பின் நாட்டின் அமைதி குலைந்த நிலை, காஷ்மீர் படையெடுப்பு, ஹைதராபாத்தில் போலீஸ் நடவடிக்கை முதலியவை நாட்டின் பாதுகாப்பிற்கு அதிகச் செலவைக் கொடுத்தன. இத்தகைய தற்செயலான நிகழ்ச்சிகளுக்காகச் செலவிடப்படுவது தாற்காலிகமானதே. இருந்தாலும், சுதந்திரத்திற்குப்பின் நாட்டின் படைகளுக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்புகளை நோக்கும்பொழுது தற்காப்பிற்காகச் செலவிடப்படும் தொகையின் பளு நமக்குத் தெரிந்தவரை எதிர்காலத்திலும் குறைவதாகத் தெரியவில்லை.

பொது நிர்வாகத்தின்மீதான செலவு, வரவு செலவுத் திட்டத்தில் முக்கியமாகக் காணப்படுகிறது. 1954-5 ஆம் வருடத்தில் மொத்தம் 467·09 கோடி ரூபாய்களில், பொது நிர்வாகத்திற்காக

[1] திரு. கால்டரின் அறிக்கை இப்பொழுது அரசாங்கத்தினுல் பரிசீலிக்கப்பட்டு வருகிறது; ஆனுல், மொத்தத்தில் அது அரசாங்கத்தினிடம் அவ்வளவாகச் சலுகை பெறவில்லை எனத் தெரிகிறது. திரு. கால்டரின் திட்டம் செயல்படும்பொழுது லஞ்ச ஊழலும், துன்புறுத்தலும் விளையும் என அரசாங்கம் அச்சங்கொள்கிறது. சொந்த வருமானத்திற்கு 45 சதவீத மேல் உச்சவரம்பு வருமானத்தை மிகப் பாதிக்குமாதலால், அது ஏற்றுக்கொள்ளும்படி இல்லை. எந்த அரசாங்கமாவது நில வரி மதிப்பீட்டைப் போதிய அளவில் அதிகரித்து மக்களின் வெறுப்பைத் தேடிக் கொள்ளுமா என்பது சந்தேகத்திற்குரியது.

[2] Journal of Industry and Trade, Supplement, March 1956, p. 28.

மத்திய அரசாங்கத்தின் வருமானமும்

(எண்கள் ரூபாய்களைக்

| வருமானம் | 1955-6 சரிபார்க்கப்பட்ட மதிப்பீடு | 1956-7 வரவு செலவுத்திட்ட மதிப்பீடு |
|---|---|---|
| சுங்க வரிகள் | 165·00 | 150·00 |
| மத்திய ஆயத்தீர்வைகள் | 140·00 | 145·45 (+25·00)[1] |
| மாநகராட்சி வரி | 39·84 | 41·84 (+6·50) |
| வருமானங்கள் மீது மாநகராட்சி வரியைத் தவிர மற்ற வரிகள் | 78·70 | 84·81 (+1·70) |
| சொத்து வரி | 0·13 | 0·18 |
| அபின் | 2·27 | 2·10 |
| வட்டி | 4·22 | 5·49 |
| பொதுத்துறை நிர்வாகம் | 14·21 | 11·06 |
| செலாவணியும் நாணயச்சாலையும் | 23 13 | 23.67 |
| பொதுத்துறை அலுவல்கள் | 2·38 | 2·39 |
| மற்ற வருவாய் மூலங்கள் | 23·35 | 19·39 |
| தபால் - தந்தி பொது வருமானத்திற்கு அளிக்கும் நிகரப் பங்கு | 2·27 | 0·65 (+0·95) |
| இருப்புப் பாதைகளின் பொது வருமானத்திற்கு அளிக்கும் நிகரப் பங்கு | 6·17 | 6·57 |
| | 501·67 | 493·60 (+34·15) |

[1] இணைக்குறிக்குள் கொடுக்கப்பட்டிருக்கும் எண்கள் 1956 ஆம் வருட வரவு செலவுத் திட்டத்தின் விளைவைக் காட்டுகிறது.

**செலவும் (வருமானக் கணக்கு)**

கோடியில் குறிக்கின்றன)

| செலவு | 1955-6 சரிபார்க்கப்பட்ட மதிப்பீடு | 1956-7 வரவு செலவுத்திட்ட மதிப்பீடு |
|---|---|---|
| வருமானத்தின் மீது நேரடித் தேவைகள் | 33·08 | 37·15 |
| நீர்ப்பாசனம் | 0·12 | 0·05 |
| கடன் பணிகள் | 37·85 | 35·50 |
| பொதுத்துறை நிர்வாகம் | 105·41 | 135·91 |
| செலாவணியும் நாணயச்சாலையும் | 3·51 | 3·76 |
| பொதுத்துறை அலுவல்களும் மற்றப் பொதுச் சீர்திருத்தங்களும் | 14·95 | 15·90 |
| மாநிலங்களுக்கு நிதியுதவிகள் முதலியன | 35·79 | 38·00 |
| பொதுநிலை கடந்த இனங்கள் | 13·36 | 14·70 |
| பாதுகாப்புப் பணிகள் (நிகரமாக) | 185·07 | 203 97 |
| மற்றவைகள் | 60·22 | 60·49 |
| | 489·37 உபரி (+)12·31 | 545·43 பற்றுக்குறை (—) 17·68 |

மதிப்பிட்ட செலவு 86.08 கோடி ரூபாய்கள் ஆகும். அது 1948-9 ஆம் ஆண்டு யூனியன் நடைமுறைச் செலவில் 7 சதவீதமாகவும், 1950-51-ல் 10 சதவீதமாகவும், 1951-2-ல் 14 சதவீதமாகவும், 1954-5-ல் 18 சதவீதமாகவும் (மதிப்பீடு) வளர்ந்துவிட்டது. இது ஓரளவிற்கு விலைகள் ஏற்றத்தினாலாகும். சுதந்திரத்திற்குப் பின் நிர்வாக அமைப்புகள் வெகுவாக விரிவடைந்துள்ளன; வாழ்க்கைச் செலவின் உயர்வால் பொதுத்துறை ஊழியர்களுக்கு அதிக அகவிலைப்படி கொடுக்க வேண்டியதாயிற்று; ஜனநாயக நிறுவனங்களை இயக்குவதில் அதிகச் செலவாயிற்று.[1] நகரங்களில் மக்கள் தொகையின் வளர்ச்சியும், நெருக்கமும், சட்டம், ஒழுங்கு, வீடு கட்டுதல், பொதுநல சுகாதாரம் போன்றவைகள் மேல் அதிகச் செலவை ஏற்படுத்தின.

விரிவாகிக்கொண்டே வரும் அரசாங்கத்தின் வேலைகளில் பல புது அமைச்சுகளை ஏற்படுத்தவேண்டியதாயிற்று; அரசாங்கப் பணிகள் விரிவடைந்தன. உதாரணமாகச் செய்தி ஒலிபரப்புத்துறை தொழிலாளர்கள்மேல் கட்டுப்பாடுகளை விதிக்க ஆகும் செலவுகள், இடமற்ற அகதிகளுக்குத் துயருதவியும் மறு சீரமைப்புக்கான செலவுகளும்.[2] இறக்குமதி செய்யப்படும் தானியங்களுக்கு அரசாங்க உதவிக் கொடை அமுலிலிருந்த காலமான 1947-8-லிருந்து 1953-4 வரை செலவான மொத்தத்தொகை ரூ. 89 கோடிகள்; மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட நிதியுதவிகள் உள்பட தாழ்த்தப்பட்ட குடிகள், தாழ்த்தப்பட்ட வகுப்புகள், பின்தங்கிய வகுப்பினர் ஆகியோரை முன்னேற்ற ஆன செலவுகள்; சமூகநல முன்னேற்றத் திட்டங்கள், தேசீய விஸ்தரிப்புப்பணிகள், சமூக நலம் முதலியவற்றிற்காக மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட நிதியுதவிகள் முதலியன; கல்வி, பொதுச் சுகாதாரம், சமூக நலம் முதலியவற்றின் முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தும் திட்டங்களுக்காகவும், குடிசைத் தொழில்களை ஊக்குவிக்கவும் ஆகும் செலவுகள். கீழ்வருபவை வருமான, வரவு செலவுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கும் சில முன்னேற்றத் திட்டங்களாகும். கிராமச் சிறுபான்மைக் கைத்தொழில்களுக்கு அளிக்கப்பட்ட நிதியுதவிகள்; ஒலி பரப்புத் துறையின் முன்னேற்றம்; இந்தியச் சுரங்கங்களின் செய்தி அலுவலகத்தின் (Indian Bureau of Mines) முன்னேற்றம்; இந்திய விவசாய ஆராய்ச்சிக் கூடத்தின் (Indian Agricultural Research Institute) திட்டங்களுக்காக ஆகும்

[1] இது மாநிலங்களுக்கும் பொருந்தும்.

[2] *1954 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 31 ஆம் தேதி வரை மத்திய அரசாங்கம் கடனைக் கொடுத்த ரூ. 40 கோடியும், மாநிலங்களுக்கு நிதியுதவியாக அளித்த ரூ. 85 கோடியும் போக, இச் செலவினத்தின்கீழ் ரூ. 161 கோடி செலவழித்திருக்கிறது.* (Taxation Enquiry Report, Vol. I, p. 38).

செலவு; சணல் முன்னேற்றம்; வெட்டுக்கிளி கட்டுப்பாடும், செடிகளைப் பாதுகாத்தலும்; விவசாயப் பொருள் விற்பனைக்கான திட்டங்கள் முதலியன; மருத்துவப் பணிகளும் பொதுச் சுகாதாரமும்; டில்லியில் அகில இந்திய மருத்துவக் கூடத்தை (All India Medical Institute) ஏற்படுத்தல்; இடம் பெயர்ந்து செல்லக் கூடிய சுகாதாரப் பணிகள் பி. ஸி. ஜி. (B. C. G.) திட்டம்; நாடெங்கும் மலேரியாவைக் கட்டுப் படுத்தும் திட்டம்; மக்கள் சமூக நல முன்னேற்றத் திட்டத்தின் பொதுச் சுகாதார ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்கும் நிலையங்களை ஏற்படுத்துதல்; பலநோக்கு தேசீய மாதிரி மதிப்பீடு (Survey); அந்தமான் - நிக்கோபார் தீவுகளுக்கு முதல் வருட முன்னேற்றத் திட்டமும் குடியேற்றமும். 1954-5 ஆம் வருட வருமான வரவு செலவுத் திட்டத்தில் முன்னேற்றத் திட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகை ரூ. 58·5 கோடிகளாகும்.

செலவு எண்கள் வரவு செலவுத் திட்டத்தில் கொடுக்கப் பட்டிருக்கும் முறையானது, பல காரியங்களுக்கிடையே பொதுச் செலவைப் பிரித்து அளிக்கும் முறையை ஆராய்வதைக் கடின மாக்குகிறது. 1954-5 ஆம் ஆண்டுப் பொது வரவு செலவுத் திட்டச் செலவானது உதாரணமாக 109 தலைப்புகளின்கீழ்ப் பிரிக்கப் பட்டிருந்தது. (1950-51 ஆம் ஆண்டு ஒப்புமையில் 93 தலைப்பு களின்கீழ்ப் பிரிக்கப்பட்டு இருந்தது); அவைகள் பொருத்தமற்ற நிதியுதவித் தொகைகள் அடிப்படையின்மேல் அமைக்கபபட் டிருந்தன. வரவு செலவுத் திட்டத்தின் ஒவ்வொரு பகுதியிலும் சில இனங்கள் மொத்தமாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. நடை முறைக் கணக்கின் வரவு செலவைக் கணிக்க அவ்வெண்களை நிகர எண்களாகக் குறைப்பது சுலபமல்ல. சுதந்திரத்திற்கு முன்பு இருந்த காலத்திற்கும், சுதந்திரத்திற்குப் பின்பு இருக்கும் காலத்திற்கும் உள்ள தொடர்பற்ற நிலை, எதிர்பாராமல் வந்திருக்கும் பல விதச் செலவுகளால் நன்கு காட்டப்பட்டுள்ளது. உதாரணமாக (i) பாகிஸ்தானிலிருந்து இந்திய யூனியனின் நிர்வாகத்தைப் பிரிப்பது (ii) பழைய மன்னர்களின் ஆட்சியை நமது நிர்வாகத்துடன் சேர்த்துக் கொள்வது. (iii) அகதிகளுக்கும் இடம் பெயர்ந்தோருக்கும் மறுவாழ்வுத் திட்டம் ஆகிய செலவுகள். இயல்பு கடந்த இத்தகைய செலவுகள் தாற்காலிகமாகக் காணப்பட்டாலும் வரவு செலவுத் திட்டத்தில் முடிவு சொல்லமுடியாத, கணக்கிடவியலாத காலத்திற்கு இது காணப்படும்; மேலும், செலவுத் திட்டத்தின் உண்மைத் தோற்றத்தை இது வேறுபடுத்திக் காட்டும்.

**25. மத்திய வருமானங்களும் செலவும் (மூலதனக் கணக்கு):** மூலதனக் கணக்கின் வருமானமும், முதலின்

மத்திய அரசாங்க வரவுகளும் பிரித்துக்.

(எண்கள் ரூபாய்களைக்

| வரவுகள் | 1955-6 சரிபார்க்கப் பட்ட மதிப்பீடு | 1956-7 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு |
|---|---|---|
| புதுக் கடன்கள் | 113·41 | 140·10 |
| மாநிலங்களுக்குள் கடன் தீர்ப்பு | 0·92 | — |
| கஜானு உண்டியல்கள் (நிகரமாக) | 240·00 | 356·21[1] |
| வைப்பு வரவுகள் (நிகரமாக) | — | — |
| சேமிப்புப் பத்திரங்கள் (நிகரமாக) | 4·25 | 5·00 |
| சிறு சேமிப்புகள் | 60·55 | 64·95 |
| இதர சேமிக்கப்படாத நிதி (நிகரமாக) | 17·97 | 19·23 |
| இருப்புப்பாதைத் தொகைகள் (நிகரமாக) | —0·89 | 5·99 |
| மற்றக் காப்பு நிதிகள் (நிகரமாக) | 0·34 | 0·68 |
| கடனைத் தவிர்க்க, குறைக்கக் கைப் பற்றியது | 5·00 | 5·00 |
| அதிக இலாப வரி, வருமான வரி வைப்புகள் (நிகரமாக) | —1·45 | —0·95 |
| மாநிலங்களால் திருப்பி அளிக்கப்பட்ட கடன்கள் | 26·61 | 27·26 |
| சிறப்பு முன்னேற்ற நிதி[2] | 48·28 | 46·24 |
| தற்செயல் நிகழ்வு நிதி | — | — |
| மற்ற இனங்கள் (நிகரமாக) | 41·22 | 35·91 |
| மொத்த வரவுகள் | 556·21 | 704·26 |
| உபரி (+) அல்லது பற்ருக்குறை (—) | +5·52 | +18·63[1] |

[1] சலுகைகளுக்காக மாற்றப்பட்டவை.

[2] வரவுகள் (i) (அ) அமெரிக்கக் கோதுமைக் கடன் (ஆ) கொழும்புத் திட்டத்தில் கிடைத்த கோதுமை ஆகியவற்றின் விற்பனைத் தொகை (ii) (அ) கொழும்புத் திட்டத்தின் மற்ற உதவிகள் (ஆ) இந்தோ-அமெரிக்கத் தொழில், கூட்டுறவு ஒப்பந்தம், மற்ற உதவிகள்.

கொடுத்தலும் (மூலதனக் கணக்கு)
கோடியில் குறிப்பிடுகின்றன)

| பிரித்துக் கொடுத்தல் | 1955-6 சரிபார்க்கப் பட்ட மதிப்பீடு | 1956-7 வரவு செலவுத் திட்ட மதிப்பீடு |
|---|---|---|
| மூலதனச் செலவு, முன்னேற்றம் தவிர மற்றவை, பாதுகாப்பு | 20·40 | 26·30 |
| ஓய்வுதவியின் மதிப்பு மாற்றப்பட்டுக் கொடுத்தல் | —9·06 | —9·01 |
| அரசாங்க வியாபாரத் திட்டங்கள் | —11·03 | —9·51 |
| செலாவணி, நாணயச்சாலை, நோட்டு அடிக்கும் அச்சகம் | 8·98 | 1·21 |
| மற்றவை[3] | 0·97 | 26·27 |
| முன்னேற்றம் தவிர மற்றவையின் மொத்தம் | 10·26 | 54·28 |
| முன்னேற்றத்திற்காக இருப்புப் பாதைகள் | 72·08 | 113·43 |
| தபால் - தந்தி | 10·73 | 9·75 |
| ஆகாயப் பயணம் | 4·91 | 3·37 |
| நீர்ப்பாசனமும் பலநோக்கு ஆற்றுத் திட்டங்களும் | 3·16 | 2·55 |
| பொதுத்துறைப் பணிகள் | 29·19 | 28·30 |
| தொழில் முன்னேற்றம் | 15·8[illegible] | 79·60 |
| மற்றவை[4] | 23·52 | 25·46 |
| முன்னேற்றத்திற்காக மொத்தம் | 159.47 | 262·46 |
| மொத்த மூலதனச் செலவு | 169·73 | 316·74 |
| நிரந்தரக் கடன்களின் செயல் முடிவு | 73·12 | 4·56 |
| மாநிலங்களுக்குள் கடன் தீர்ப்பு | 0·68 | 0·06 |
| மாநிலங்களுக்கு முன் பணம் | 254·29 | 278·06 |
| சிறப்பு முன்னேற்ற நிதியிலிருந்து | 7·44 | 5·00 |
| மற்றக் கடன்களும் முன் பணமும் (நிகரமாக) | 45·43 | 81·21 |
| மொத்தச் செலவுகள் | 550·69 | 685·63 |

3 தற்செயல் நிகழ்வு நிதி அமெரிக்கக் கோதுமை விற்பனைத் தொகை மாற்றம் இடம் பெயர்ந்தோருக்கு அளிக்கப்பட்ட உதவி உள்பட.

4 துறைமுகங்கள், முன்னேற்றத்திற்காக மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட நிதி உதவிகள் முதலியன.

சொத்துக்கள்மீதான செலவுப் பகிர்ந்தளிப்பும் 40-41 ஆம் பக்கங்களிலுள்ள அட்டவணையில் காட்டப்பட்டிருக்கின்றது.[1]

மூலதன வரவு செலவுத் திட்டத்தின் வருமானப் பக்கத்தில் மத்திய அரசாங்கத்தால் வாங்கப்பட்ட எல்லாக் கடன்களும், வியாபாரத் துறைகளான தபால் - தந்தி, இருப்புப்பாதைகள் முதலியவற்றின் சேமநிதியும் அயல் நாடுகளிலிருந்து வாங்கிய கடன்கள் [முக்கியமாக யு. கே. (U. K.) யிலிருந்து] கொழும்புத் திட்டத்தின்கீழ் இந்தியாவுக்கு அளிக்கப்பட்ட கடன்கள், அமெரிக்காவின் கோதுமைக் கடன் முதலியனவும் இருக்கின்றன. செலவுப் பக்கத்தில் கீழ்க்காணும் மூலதனச் செலவுகள் உள்ளன: (i) தொழில் முன்னேற்றம்; (ii) பொதுத்துறைப் பணிகள்; (iii) நீர்ப்பாசனம், மின்சாரம் முதலியவற்றிற்கான செலவுகள், ஆறுகளைப்பற்றிய பலநோக்குத் திட்டங்களின் செலவுகள், மாநிலங்களின் பங்குகள், கடன்களாகக் கழித்துக்கொள்ளப்பட்டாலும், மத்திய அரசாங்கத்தாலேயே முழுதும் மேற்கொள்ளப்படுகின்றன. மற்றச் செலவுகள்: (i) கடன்களைத் திருப்பிக் கொடுத்தல்; (ii) மத்திய அரசங்கத்திடம் இருக்கும் சேமிப்பைத் திருப்பிப் பெறுதல்; (iii) மாநிலங்களுக்குக் கடன்கள். மத்திய அரசாங்கம், முக்கியமாக மாநில அரசாங்கங்களுக்கும், அரசாங்க வர்த்தகத் துறைகளுக்கும், அரசாங்க ஆலைகளுக்கும் கடன்களும் முன் பணமும் கொடுக்கிறது.

26. **இருப்புப்பாதை நிதி:** 1925ஆம் ஆண்டு பொது நிதியிலிருந்து இருப்புப்பாதைநிதி தனியாகப் பிரிக்கப்பட்டதிலிருந்து இருப்புப்பாதை வரவு செலவுத் திட்டம் தனியாகப் பாராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்கப்படுகிறது. அவ்வாறு பிரிக்கப்பட்டபொழுது ஏற்பட்ட வழக்கத்தின்படி ஒவ்வொரு வருடமும் இருப்புப்பாதைகள் பொது நிதிக்கு நிதித் தொகைகள் அளிக்கவேண்டும்.[2] 1924-5-லிருந்து 1929–30 வரையான மொத்த நிதி அளிப்பு ரூ. 42 கோடியாகும். அதே காலவரையில் இருப்புப்பாதைகள் வெற்றிகரமாக ரூ. 41½ கோடி தேய்மானத் தொகையாகச் சேர்த்து வைத்திருக்கின்றன. 1931-2-லிருந்து 1936-7 வரையான காலம் இருப்புப் பாதைகளுக்கு ஒரு சாதகமற்ற காலமாக இருந்தது. அவைகள் பொது வருமானத்திற்கு அளிக்கவேண்டிய பங்குத் தொகைகளில் ரூ. 30·74 கோடி அளிக்கத் தவறிக் கடன்பட்டிருந்தது

[1] Reserve Bank of India, Report on Currency and Finance, 1955-6, p. 188.

[2] இருப்புப்பாதைகளைப் பற்றிய வழக்கு முறைமைகளுக்கு அத்தியாயம் 16, பிரிவுகள் 15, 16 பார்க்க.

மட்டுமன்றி, தேய்மானத் தொகையிலிருந்து ரூ. 31·34 கோடி உபயோகப்படுத்தியும்' இருந்தன. இவ்வாறு ஒருங்குசேர்ந்த கடனைத் திருப்பிக் கொடுப்பதில் மூன்று வருடங்களுக்குக் காலம் தாழ்த்தலாமென முதலில் 1935-6-ல் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. பின் அது 1942 ஆம் ஆண்டுவரை நீடிக்கப்பட்டது. இது வட்டிகளைக் கொடுத்தபின் கிடைக்கும் உபரியிலிருந்து தனது பங்கை மீண்டும் அளிக்க இருப்புப் பாதைகளுக்கு உதவியது. 1936—7 ஆம் ஆண்டு வியாபாரம் மீண்டும் நலம் பெற்றதாலும், செலவுகள குறைக்கப் பட்டதாலும், படைக் கருவிகள் மீண்டும் திரட்டப்பட்டதாலும் இருப்புப் பாதைகளின் நிலை முன்னேற்றமடைந்தது. 1936—7 ஆம் ஆண்டு ரூ. 1·25 கோடி உபரித்தொகை, தேய்மானத் தொகையிலிந்து எடுத்த கடனைத் திருப்பித்தர உதவியது. 1937—8 ஆம் ஆண்டு ரூ. 2·75 கோடி உபரித்தொகை பொது வருமானத்தில் சேர்க்கப் பட்டது; 1938—9 ஆம் ஆண்டு உபரித்தொகை 1·37 கோடியாகவும், 1939—40 ஆம் ஆண்டு உபரித்தொகை 4·33 கோடியாகவும் இருந்தது. உலகப் போர் தொடங்கியதிலிருந்து நிலைமை தொடர்ந்து முன்னேறியது; 1945—6ஆம் ஆண்டு கிடைத்த ரூ. 38·20 கோடியில் ரூ. 32 கோடி பொது வருமானத்திற்கு அளிக்கப்பட்டது. மீதித் தொகை இருப்புப்பாதைக் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டது; இருப்புப்பாதைக் காப்பு நிதியின் மொத்தம் ரூ. 38·13 கோடியாகும்.

1946 ஆம் ஆண்டு ரூ. 12 கோடிகள் துவக்க மூலதனத்துடன் மக்களுக்கும் இருப்புப்பாதை ஊழியர்களுக்கும் வசதிகள் அளிப் பதற்காக ஒரு மேம்பாடு நிதி துவக்கப்பட்டது. 1946—7 ஆம் ஆண்டு இருப்புப்பாதைகளிலிருந்து பொது வருமானம் ரூ. 5·61 கோடி பெற்றது. இது எவ்வாறு எனில், சிறப்பு ஒப்பந்தப்படி செயல்படு முதலீட்டில் 1 சதவீதம் பொது வருமானத்திற்குக் கொடுக்கப்படல் வேண்டும்; இதில் முக்கியப் பாதைகளின் இழப்பைக் கழித்து, மேம்பாட்டு நிதிக்கு ரூ. 3 கோடி கொடுத்தது போக மீதியிருப்பதில் பாதியைக் கட்டிக்கொள்ளவேண்டும். பிரிவினைக்குப் பின் இருப்புப்பாதைகள் தேய்மான ஈடு நிதியில் ரூ. 93·22 கோடியும் காப்பு நிதியில் ரூ. 7·98 கோடியும், மேம்பாட்டு நிதியில் ரூ. 11·71 கோடியும் வைத்திருந்தன. பக்கம் 44-ல் வரும் அட்டவணை 1947-8 முதல் 1955—6 வரை[1] இருப்புப்பாதைகளின் நிதி நிலையைக் காட்டுகிறது.

[1] நிகர வருமான எண்கள், பொது வருமானப் பங்குத்தொகை அளிப்புகளைக் கழித்துக் காட்டவில்லை. (Eastern Economist, Budget Number, 2 March, 1956, p. 373, for figures upto 1950-51 ; Reserve Bank of India, Reports on Currency and Finance, for figures from 1951-2 to 1955-6.)

| வருடம் | மொத்த வருமானம் | செலவு கள் | நிகர வருமானம் |
|---|---|---|---|
| 1947 - 8 | 17·760 | 159·00 | 17·70 |
| 1948 - 9 | 225·70 | 178·00 | 47·70 |
| 1949 - 50 | 250·60 | 201·50 | 49·20 |
| 1950 - 51 | 262·60 | 212·70 | 49·90 |
| 1951 - 52 | 292·16 | 229·41 | 61·75 |
| 1952 - 53 | 270·87 | 223·69 | 47·18 |
| 1953 - 54 | 274·60 | 237·68 | 36·92 |
| 1954 - 55 | 282·70 | 241·34 | 41·53 |
| 1955 - 56 | 292·55 | 249·34 | 43·21 |

கீழ்வரும் அட்டவணையில் பொது வருமானத்திற்கும் மற்ற நிதிகளுக்கும் அளிக்கப்படும் பங்குத் தொகைகள் காணப்படுகின்றன :[1]

| வருடம் | தேய்மானம் | முன்னேற்ற நிதி | வருமானக் காப்பு நிதி | பொது வருமானத்திற்குப் பிரிக்கப்பட்டது |
|---|---|---|---|---|
| 1948 – 9 | 11·29 | — | — | 7·34 |
| 1949 - 50 | 11·58 | — | — | 7·00 |
| 1950 - 51 | 30·00 | 10·00 | 5·05 | 32·51 |
| 1951 - 52 | 30·00 | 10·00 | 18·34 | 33·35 |
| 1952 - 53 | 30·00 | 12·00 | 1·19 | 33·99 |
| 1953 - 54 | 30·00 | 2·56 | — | 34·36 |
| 1954 – 55 | 30·00 | 9·10 | — | 34·96 |
| 1955 - 56 | 45·00 | 2·44 | 7·14 | 36·16 |
| சரிபார்க்கப் பட்ட மதிப்பீடு | | | | |

[1] எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன (Reports on Currency and Finance, 1950-51 to 1955-6).

| | 1955-6 RE | 1956-7 BE | | 1955-6 RE | 1956-7 BE |
|---|---|---|---|---|---|
| செயல்படு முதலீடு | 973·66 | 1,087·09 | தேய்மானம் | 45·00 | 45.00 |
| மொத்த வரவுகள் | 314·18 | 345·05 | போடப் பட்ட பாதை களுக்குப் பணங் கொடுத்தல் | 0·25 | 0·20 |
| பிரயாணிகள் | 108·50 | 111·40 | | | |
| மற்றப் பிரயா ணங்கள் | 20·50 | 21·80 | | | |
| பொருள்கள் | 180·00 | 205·50 | இதர செலவுகள் | 9.04 | 13·09 |
| மற்ற வருமா னங்கள் | 5·10 | 6·30 | திறந்த பாதைப் பணிகள் | 6·99 | 10•82 |
| இதர வகைகள் | 0·08 | 0·05 | | | |
| மொத்தச் செலவுகள் | 268·44 | 282·39 | மற்றவை | 2·05 | 2·27 |
| நிர்வாகம் | 31·89 | 34·51 | நிகர வருமானம் | 45·74 | 62·66 |
| பழுது பார்க்க, தொடர்ந்து செயலாற்ற | 79·81 | 82·72 | பொது வருமானங் களுக்குப் பிரிக்கப் பட்டது | 36·16 | 39·67 |
| செயலாற்றும் ஊழியர் | 49·81 | 52·87 | | | |
| செயலாற்றல் (எரி பொருள்) | 23·89 | 24·96 | உபரி | 9·58 | 22·99 |
| செயலாற்றல் (மற்றவை) | 9·34 | 9·31 | முன்னேற்ற நிதிக்காக எடுக்கப் பட்டது | 2·44 | 22·99 |
| மற்றவை | 15·13 | 14·67 | | | |
| தொழிலாளர் நலம் | 5·28 | 5·63 | வருமானக் காப்பு நிதி | 7·14 | — |
| உறுதியின்மை | 1·00 | –0·56 | | | |

1947 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் ரூ. 678 கோடியாக இருந்த செயல்படு முதலீடு, 1955-6 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்ட மதிப்பீட்டின்படி ரூ. 961·07 கோடியாக உயர்ந்திருக்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு 1951-லிருந்து 1956 ஆம் வருடம் வரை இருப்புப்பாதைகளின் உதவிப் பங்கு ரூ. 111 கோடியாகும்.[1]

நல்ல மாதிரியாக அமைந்துள்ள ஒரு இருப்புப்பாதை வரவு செலவுத் திட்டம், முக்கிய வருமான செலவினங்களுடன் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.[2]

**27. இரு உலகப் பெரும் போர்களுக்கிடையே இந்திய நிதி நிலை:** பொதுவாகப் பேசுங்கால் முதல் உலகப் பெரும்போர் ஆரம்பித்ததற்குப் பின் (1914-18) மத்திய வரவு செலவுத் திட்டத்தில் வருமானத்தைவிடச் செலவு அதிகமாக இருக்கும் போக்கையே காண்கிறோம். மொத்தப் பற்றுக்குறைகள் 1920-21 ஆம் ஆண்டு ரூ. 26 கோடியிலிருந்து, 1934-5 ஆம் ஆண்டு ரூ. 36 இலட்சம் வரை பலவிதமாக இருந்திருக்கின்றன. போரும் வர்த்தக மந்தமும் இவ்விதச் செலவு அதிகத்திற்கும், வருமானக் குறைவிற்கும் பெரிதும் காரணமாக இருந்திருக்கின்றன. 1929-30 ஆம் ஆண்டு தொடங்கிய மந்தம் சில வருடங்களுக்கு ஆதிக்கம் செலுத்தும் காரணக் கூறாக இருந்தது. 1930-31, 1931-2 ஆம் ஆண்டுகளின் வரவு செலவுத் திட்டங்கள் முறையே ரூ. 11·58 கோடி, ரூ. 11·75 கோடி பற்றுக்குறையைக் காட்டியது; ஆகவே, அரசாங்கம், வேலைக் குறைப்பு, சம்பளக் குறைப்பு (10 சதவீதம்), மிக அதிகமான வரி விதிப்பு முதலிய உறுதியான நடவடிக்கைகளை எடுக்கவேண்டியதாயிற்று. அதன் விளைவாக 1930-31 முதல் 1932-3 முடிய ரூ. 42 கோடி அரசாங்கத்திற்குக் கிடைத்தது. பின் வந்த வருடத்தில் இந்நிலை மாறியதைப் போல் தோன்றுகிறது. ஏனெனில், 1932-3, 1933-4, 1934-5, 1935-6 ஆண்டுகளின் வரவு செலவுத் திட்டங்கள் சிறிய உபரியைக் காண்பிக்கின்றன. இந்தக் கால வரையில் சில வரி நீக்கங்கள் செய்ய முடிந்தது. 1933-4 ஆம் ஆண்டில் ரூ. 1000-1499-க்கான வரி போதிய அளவில் (4 பைசாவிலிருந்து 2 பைசா வரை) குறைக்கப்பட்டது. பதனிடப்படாத தோல் மீதான ஏற்றுமதித் தீர்வை அகற்றப்பட்டது; வெள்ளியின்மீதான தீர்வை குறைக்கப்பட்டது. பொதுவாக வர்த்தகம் நலம் பெற்றதால், வருமான வரி குறைக்கப்பட்டாலும்,

[1] Eastern Economist, Budget Number, 2 March, 1956, p. 337.

[2] Report on Currency and Finance 1955-6, p. 194. எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிக்கின்றன.

1935-6 ஆம் ஆண்டு ரூ. 2·29 கோடி உபரி இருந்தது. அதன் பின் வந்த நான்கு வருடங்களின் நிலை கீழே தரப்பட்டுள்ளது:

| | வருமானம் | செலவு | உபரி அல்லது பற்றுக்குறை |
|---|---|---|---|
| 1936 - 7 | 119·21 | 121·00 | — 1·79 |
| 1937 - 8 | 122·48 | 122·48 | — |
| 1938 - 9 | 121·07 | 121·71 | — 0·63 |
| 1939 - 40 | 123·97 | 123·97 | — |

**28. 1939-க்குப் பிற்பட்ட காலம்:** 1940ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் வரை இந்திய நிதித் துறை இரண்டாம் உலகப் போரின் தாக்குதலை உணரவில்லை. வர்த்தகப் பின்னிறக்கத்தின்போது தயாரிக்கப்பட்ட 1939-40 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டம் ரூ. 50 இலட்சம் பற்றுக்குறையை எதிர்பார்த்தது; ஆனால், அது கச்சாப் பருத்தியின்மீதான இறக்குமதித் தீர்வையை 6 பைசாவிலிருந்து 1 அணுவாக உயர்த்தப்பட்டதன்மூலம் சரிக்கட்டப்பட்டது. 1939 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் 1940 ஆம் ஆண்டு மார்ச் மாதம் முடிய உள்ள காலம் மிகச் செழிப்பானதொரு காலமாகும். அந்த ஆண்டு ரூ. 777 இலட்சம் உபரியுடன் முடிந்தது. அதிகச் சுங்கத் தீர்வைகள், இருப்புப்பாதை வருமானம், வருமான வரி முதலியன மொத்த வருமான அதிகரிப்பை ரூ. 681 இலட்சமாகச் செய்தன.

இரண்டாவது உலகப்போரின் தொல்லைகள் 1940—41 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்துடன் ஆரம்பித்தன. அவ்வரவு செலவுத் திட்டம் ரூ. 52·52 கோடி மதிப்பிடப்பட்ட பாதுகாப்புச் செலவுடனும், அதன் விளைவாக ரூ. 625 இலட்சம் பற்றுக்குறையுடனும் போராட வேண்டியதாயிற்று. இப் பற்றுக்குறையை 50 சதவீத அதிக இலாப வரியாலும், நூறு பவுண்டு சர்க்கரைமேல் ரூ. 1 அதிகமாக வரி விதிப்பதாலும் சரிக்கட்டலாம் எனத் திட்டமிடப்பட்டது. அவ்வருடம் செல்லச் செல்ல, எதிர்பார்க்கப்பட்டதைவிடச் செலவு அதிகமாகத்தான் ஆகும் எனத் தெரிந்தது. பாதுகாப்புச் செலவிற்கு ரூ. $14\frac{1}{2}$ கோடி அதிகமாகவும், பொதுத்துறைக்கு ரூ. $2\frac{1}{2}$ கோடி அதிகமாகவும் தேவைப்பட்டது. ஆகவே, அப்பொழுது நிதியமைச்சராயிருந்த சர். ஜெர்மி ரெய்ஸ்மன் (Sir Jeremy Raisman), 1940 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இரண்டாவது நிதி மசோதாவை

கொணர்ந்தார். அம் மசோதாவின்படி வருமானத்தின் மீதான எல்லா வரிகளின் மேலும் 25 சதவீத மேல் வரியும் (மத்திய அரசாங்கம்), தபால் கட்டணங்களில் அதிகரிப்பும் வரவிருந்தன. எதிர்பார்க்கப்பட்ட ரூ. 5 இலட்சம் உபரிக்குப் பதிலாக, அந்த ஆண்டு ரூ. 8·42 கோடி பற்றுக்குறையுடன் முடிந்தது. இந்த முடிவான பற்றுக்குறை 1940 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் திட்டமிடப்பட்ட ரூ. 15 கோடி பற்றுக்குறையைவிட மிகக் குறைவானது. இது எப்படி ஏற்பட்டது எனில், இருப்புப் பாதைகள் தங்களது செலுத்தப்படாத பங்குகளுக்காகச் செலுத்திய ரூ. 2·81 கோடி, புதிய மாநிலங்களிலிருந்து கிடைத்த அதிக வருமானம் இவைகளால்தாம். கடன்களைக் குறைக்கவும் தவிர்க்கவும் வைக்கப்பட்டிருந்த ரூ. 3 கோடி, இந்த ரூ. 8·42 கோடி பற்றுக்குறைக்கு மாற்றப்பட்டு அரசாங்கத்தின் கடனை ரூ. $5\frac{1}{2}$ கோடிக்கு மேலும் குறைத்தது.

1941-2 ஆம் ஆண்டு வரவு செலவுக் கணக்கு ரூ. 20·4 கோடி பற்றுக் குறையையும், ரூ. 84·13 கோடி பாதுகாப்புச் செலவையும் எதிர்பார்த்தது. பற்றுக் குறையைச் சரிசெய்யக் கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. (i) அதிக இலாப வரி 50 சதவீதத்திலிருந்து $66\frac{2}{3}$ சதவீதத்திற்கு உயர்த்தப்பட்டது; (ii) வருமான வரியின் மீதான மேல்வரி 25 சதவீதத்திலிருந்து $33\frac{1}{3}$ சதவீதத்திற்கு உயர்த்தப்பட்டது ; (iii) ஆயத்தீர்வையானது தீப்பெட்டிகளின்மேல் இரு மடங்காக்கப்பட்டது; இறக்குமதித் தீர்வையும் அதிகரிக்கப்பட்டது; (iv) போலிப் பட்டு நூலின்மீது வரி ஒரு பவுண்டிற்கு 3 அணுவிலிருந்து 5 அணுவிற்கு அதிகரிக்கப்பட்டது. (v) காற்றழுத்தத்தால் இயங்கக்கூடிய ரப்பர் சுற்றுகள் (tyres) மேலும், குழாய்கள் மேலும் 10 சதவீதம் பெறுமான விகித வரி விதிக்கப்பட்டது. ஆகவே, அவ்வருடம் ரூ. 17 கோடி முடிவான பற்றுக் குறையுடன் முடிவடிந்தது.

போர்ச் செலவுகள் அதிகரித்துக்கொண்டே இருந்தன. 1942-3 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டம் அதற்காக ரூ. 133 கோடி ஒதுக்கியது. அவ்வருடம் எதிர்பார்க்கப்பட்ட பற்றுக்குறை ரூ. 47 கோடியாகும். அதில் ரூ. 12 கோடி அதிகவரி விதிப்பினுலும், ரூ. 35 கோடி கடன்களாலும் சரிக்கட்டப்பட இருந்தது. புதிய வரிகளாவன: வருமான வரியின் மேல் தண்டமும், அதிக மேல் வரியும், சுங்க வரிக்கான எல்லாப் பொருள்கள்மீதும் 20 சதவீத தண்டம், தபால் - தந்திக் கட்டணங்களை அதிகரித்தல். 1943-4 ஆம் ஆண்டு மதிப்பிடப்பட்ட பற்றுக்குறையான ரூ. 60·29 கோடி, ரூ. 92·43 கோடியாக ஆனதற்குக் காரணம், முக்கியமாகச் செலவில் ரூ. 87·34 கோடி அதிகமானதுதான். 1944-5 ஆம் ஆண்டு பற்றுக்குறை ரூ. 78·21

கோடியாகக் குறைக்கப்பட்டது. இதைச் சரிக்கட்ட கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. (i) வருமானத்தின்மீதான வரியை மூலத்தில் கழிக்காமல் முன்னாலேயே கட்டிவிடுதல். (ii) அதிக இலாப வரியில் $\frac{1}{6}\frac{9}{4}$ பாகத்தைக் கட்டாயமாக வைப்பு செய்தல். (iii) வருமான வரி வீதம் உயர்த்தப்பட்டது. (iv) புகையிலை, சாராயம் இவற்றின் மீதான தண்டமும், புகையிலைமீதான ஆயத்தீர்வையும் அதிகரிக்கப்பட்டன. (v) பாக்கு, காப்பி, டீ முதலிய மத்திய ஆயத்தீர்வைத் துறை ஊழியர்களின்கீழ்க் கொண்டுவரப்பட்டன.

1945 ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஜெர்மனியுடன் இருந்த பகை ஒழிந்தாலும், அவ்வாண்டிலேயே செப்டம்பர் மாதம் ஜப்பானுடன் இருந்த பகை நீங்கினாலும், 1945-6 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டம், எபபொழுதும்போல் ஒரு போர்க்கால வரவு செலவுத் திட்டமாக ரூ. 163·89 கோடி பற்றுக்குறையுடன் இருந்தது. இத்தொகையில் ரூ. 155·2 கோடி கடன்கள் மூலமும், மீதித் தொகை புகையிலை மீதான வரியை அதிகரிப்பது, தபால், சிறுகட்டு (parcel) கட்டணங்களை அதிகரிப்பது, தந்திகளின்மீது தண்டம் விதிப்பது, தொலைபேசி வாடகை, தொலைபேசி மூலம் வெளியூர்த் தொடர்புகள் இவைகள்மீது தண்டம் விதிப்பது மூலமும் சேகரிக்கப்பட்டது. உழைத்து ஈட்டிய பொருளுக்கும், உழைக்காமல் சேர்த்த பொருளுக்கும் உள்ள வேற்றுமை இவ்வருடத்திய கண்டுபிடிப்பே ஆகும்.

முதல் சமாதான கால வரவு செலவுத் திட்டம் தொழில்களில் வரி செலுத்தும் மக்களுக்குத் திட்டமிடப்பட்ட ரூ. 49 கோடி வருமான இழப்பின் பேரில் தணிவு அளிக்க முயன்றது. எதிர்பார்க்கப்பட்ட பற்றுக்குறை ரூ. 44·06 கோடியாகும். ஏனெனில், பாதுகாப்புச் செலவு இன்னும் ரூ. 243·77 கோடியாக அதிகமாகவே இருந்துவந்தது.

1947-8 ஆம் ஆண்டு இந்தியா இன்னொரு பெரிய சிக்கலைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அதுதான் பிரிவினை. இந்த வருடத்திற்கான வரவு செலவுத் திட்டம் இரு பாகங்களாகப் பிரிக்கப்பட்டது. அதாவது, 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15 ஆம் நாள் வரை அத் தேதியிலிருந்து 1948 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31 ஆம் தேதிவரை பிரிவினைக்கு முன்னைய வரவு செலவுத் திட்டம் ரூ. 48·46 கோடி பற்றுக்குறையை எதிர்பார்த்தது. வருமானம் ரூ. 279·42 கோடி; செலவு ரூ. 327·88 கோடி; பற்றுக்குறை என்பின்பு ரூ. 56·7 கோடியாக உயர்த்தப்பட்டது. ஏனெனில், உப்பு வரி நீக்கப்பட்டுவிட்டது. வரிகளிலிருந்து கிடைத்த வருமானத்தை

மாற்றி அமைத்த பிறகு நிகரமாகச் சரிசெய்யமுடியாமல் போன பற்றுக்குறை ரூ. 29·5 கோடியாகும்.

பிரிவினைக்குப் பின் வந்த இரண்டாவது வரவு செலவுத் திட்டம், பருத்தி நூலின்மீது கெஜத்திற்கு 4 அணுவாகத் தனிப்பயன் வரி விதித்ததின் மூலம் கிடைத்த ரூ. 1·6 கோடிக்குப் பின்னும், ரூ. 24·6 கோடியைச் சரிசெய்ய முடியாத தொகையாக அளித்தது. செலவினத்தில் முக்கியமாகக் கூறப்படவேண்டியவை பாதுகாப்பிற்கு ரூ. 92·7 கோடி; குடிகள் வெளியேற்றமும் அகதிகளுக்குத் துயருதவியும் ரூ. 22 கோடி; உணவு இறக்குமதிக்கு அளிக்கப்பட்ட உதவிக்கொடை ரூ. 22·5 கோடி; நாட்டின் முன்னேற்றத்திற்கான செயல்கள் ரூ. 12 கோடி; மாநிலங்களுக்கு நிதி உதவியாகவும் முன்னேற்றத்திற்குக் கடனுகவும் அளிக்கப்பட்ட தொகை ரூ. 25·4 கோடி.

1948-9 ஆம் ஆண்டு காஷ்மீர் தொல்லையும், ஹைதராபாத்தில் போலீஸ் நடவடிக்கையும் இல்லாதிருந்தால், அவ்வாண்டின் வரவு செலவுத் திட்டம் மகிழ்ச்சிகரமான நிலையைக் குறித்திருக்கும். அப்போது இருந்தபடி செலவு வருமானத்தைவிட ரூ. 1·55 கோடி அதிகமாயிருந்தது. செலவு ரூ. 339·87 கோடி; வருமானம் ரூ. 338·32 கோடி; செலவு ரூ. 82·49 கோடியாக அதிகமானதற்குக் காரணம் காஷ்மீரிலும் ஹைதராபாத்திலும் நடைபெற்ற சண்டையும், பொதுத் துறையில் பிரிவினைக்கு முன்னையக் கடன்களைத் தீர்க்கச் செலவான ரூ. 20·75 கோடியும், உணவுப் பொருள்கள் இறக்குமதிக்காக அளிக்கப்பட்ட உதவிக் கொடையும், மாநிலங்களுக்கு உணவு சேகரத்திற்காக அளிக்கப்பட்ட மிகையூதியமும் (bonus), துயருதவி, மறுசீரமைப்பு இவைகளுக்கான அதிகச் செலவுமேயாகும்.

1949-50 ஆம் ஆண்டிற்கான சரிபார்க்கப்பட்ட மதிப்பீடுகளின்படி ரூ. 332 கோடி வருமானமும், ரூ. 336 கோடி செலவும் இருந்தது. தளர்த்தப்பட்ட இறக்குமதிக் கொள்கையால் சுங்க வரியிலிருந்து கிடைத்த வருமானமும், மதிப்புக் குறைப்பின் காரணமாகக் கிடைத்த வருமானமும், ரூ. $12\frac{2}{3}$ கோடி பாதுகாப்புச் செலவினுல் (முக்கியமாகக் காஷ்மீரில்) அடித்துக்கொண்டு போகப்பட்டது.

முதல் தடவையாகப் பல ஆண்டுகளுக்குப் பின், 1950-51 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டம் வருமானக் கணக்கில் ரூ. 9·62 கோடி உபரி காட்டியது. இறக்குமதிகள் கட்டுப்படுத்தப்பட்டபடியால், சுங்க வரியில் ரூ. 14 கோடி குறைந்தாலும், வருமான வரியில் இணைக்கப்பட்ட மாநிலங்களிலிருந்து கிடைத்த வரவாலும், நலமடைந்த நிலைகளாலும், வருமான வரிச் சட்டத்தின் 18 (A) பிரிவின்கீழ் முன்பணம் அளிக்கப்பட்டதாலும் ரூ. 35 கோடி அதிகமாகக் கிடைத்தது.

அதற்குப் பின் வரும் வருடங்களுக்கு வரவு செலவுத் திட்ட எண்கள் பக்கம் 52-ல் கொடுக்கப்பட்டிருக்கின்றன :[1]

வருமான வரவு செலவுத் திட்டத்தில், செலவு வருமானத்தைவிட முக்கியமாக ஐந்தாண்டுத் திட்டத்தால்தான் அதிகரித்திருக்கிறது என்பது நன்ருகத் தெரிகிறது. ஆனுல், முதலீட்டு வரவு செலவுத் திட்டத்தில் வரவுகள் செலவைவிடச் செங்குத்தாக மேலே செல்லு வதைக் கவனிக்கிறோம்.

**29. மாநிலங்களின் நிதித்துறை :** இங்கு ஒவ்வொரு மாநிலத்தின் நிதி நிலையையும் தனித்தனியாக விவாதிக்க முடியாது. ஒவ்வொரு இனத்திலும் எல்லா மாநிலங்களின் வருமானங்களையும் பரந்த முறையில் பக்கம் 53-ல் உள்ள அட்டவணையில் கொடுக்கப்பட்டிருக்கிறது.[2]

**30. மாநில வருமானங்கள்:** சில சமீப காலப் போக்குகள் மாநில வரவு செலவுத் திட்டங்களின் வருமானப் பகுதியில், கடந்த சில வருடங்களாகக் காணப்படும் முக்கிய அம்சம் என்னவென்ருல் விற்பனை வரியைப் புகுத்தியிருப்பதே ; இது முதன்முதலில் 1939-40 ஆம் ஆண்டில் சென்னை மாநிலத்தில் விதிக்கப்பட்டது. மற்ற மாநிலங்கள் இதைப் பின்பற்றத் தொடங்கின. முதலில் வரிவீதங்கள் குறைந்த அளவில் இருந்தன. உணவுப் பொருள்கள், வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள், தொழிலுக்கான கச்சாப் பொருள்கள், மாநிலத்தை விட்டு வெளியேறும் பொற்கட்டி, பொருள்கள் முதலியன இவ்வரியினின்றும் விலக்கு அளிக்கப்பட்டிருந்தன. இப்பொழுது இவ்விலக்கு அளிப்புகளெல்லாம் நீக்கப்பட்டுவிட்டன. தற்பொழுது பொது, சிறப்பு விற்பனை வரிகள் உள்ளன. அவைகளின் வரி வீதங்கள், அப்பொருள்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவா, அல்லது போகப் பொருள்களா என்பதைப் பொறுத்து மாறுகின்றன. மேலும், அவைகள் ஆலை உற்பத்திப் பொருள்களா, அல்லது கைத்தொழில் உற்பத்திப் பொருள்களா என்பதைப் பொறுத்தும் மாறும். உதாரணமாக ஆலையில் உற்பத்தியான துணிக்கு வரி விலக்கு இல்லை ; ஆனுல், காதிக்கு உண்டு. இரும்பு, எஃகு இவைகளால் செய்யப்பட்ட பொருள்கள் மேல் மற்றப் பொருள்களைவிட அதிக வீத வரி விதிக்கப்படுகிறது.

[1] Reserve Bank of India, Report on Currency and Finance, 1955-6. pp. 186-8. எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

[2] ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடும் எண்கள் பின்வருவனவற்றையும் உள்ளடக்கி இருக்கின்றன : (i) மத்திய ஆயத்தீர்வையில் மாநிலங்களின் பங்கு (C பகுதி மாநிலங்களைத் தவிர) (ii) நிதியுதவிகள், வழக்கம் மீறிய வரவுகள், ஓய்வு உதவிச் சம்பளம், வருமானக் காப்பு நிதியிலிருந்து மாற்றங்கள், விவசாய வருமான வரி வரவுகள். C பகுதி மாநிலங்களுக்கான மதிப்பீட்டில் ஆஜ்மீர் விலக்கப்பட்டிருக்கிறது. (Reserve Bank of India, Report on Currency and Finance, 1953-4, Statements 52-4).

| | வருமானக் கணக்கு | | | முதலீட்டுக் கணக்கு | | |
|---|---|---|---|---|---|---|
| | வருமானம் | செலவு | உபரி (+) பற்றுக்குறை(—) | வரவுகள் | பிரிக்கப்பட்ட செலவுகள் | உபரி (+) அல்லது பற்றுக்குறை (—) |
| 1951 - 2 | 509·49 | 381·40 | + 128·09 | 169·04 | 293·43 | — 124·39 |
| 1952 - 3 | 429·60 | 390·67 | + 38·93 | 69·77 | 164·01 | — 94·24 |
| 1953 - 4 | 409·80 | 401·30 | + 8·50 | 238·02 | 307·86 | — 69·84 |
| 1954 - 5 | 449·86 | 416·35 | + 33·51 | 409·64 | 461·84 | — 52·20 |
| 1955 - 6 | 494·58 | 482·27 | + 12·31 | 556·21 | 550·69 | + 5·52 |
| 1956 - 7 | 484·42 | 536·25 | — 18·04 | 704·26 | 685·63 | + 18·63 |
| (வரவு செலவுத் திட்ட மதிப்பீடு) | (13·79 | | | | | |

| | A பிரிவு மாநிலங்கள் | | | B பிரிவு மாநிலங்கள் | | | C பிரிவு மாநிலங்கள் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1952-3 | 1953-4 | 1954-5 | 1952-3 | 1953-4 | 1954-5 | 1953-4 | 1954-5 |
| நிலவருமானம் | 38·29 | 49·64 | 52·10 | 17·59 | 17·93 | 19·66 | 1·59 | 1·79 |
| விற்பனை வரி | 43·08 | 48·57 | 47·94 | 7·10 | 8·23 | 8·74 | 1·28 | 1·30 |
| முத்திரை வரி | 18·84 | 19·90 | 19·34 | 3·12 | 3·28 | 3·38 | 0·58 | 0·57 |
| மற்ற வரிகள் மூலம் வருமானம் | 35·80 | 40·83 | 40·66 | 3·59 | 4·15 | 4·46 | 0·73 | 0·77 |
| ஆயத்தீர்வை | 40·04 | 37·92 | 37·56 | 10·79 | 20·85 | 20·56 | 1·72 | 1·86 |
| வருமான வரி | 54·14 | 53·53 | 51·33 | 6·76 | 6·83 | 7·44 | 0·15 | 0·15 |
| மாநிலங்களுக்குள் மாற்றப்படும் தீர்வை | — | — | — | 8·14 | 6·47 | 5·84 | — | — |
| மற்ற வருமானங்கள் | 99·03 | 107·10 | 117·84 | 41.03 | 44·47 | 51·68 | 9·12 | 10·27 |
| மொத்தம் | 329·22 | 357·49 | 366·77 | 108·12 | 112.21 | 121·76 | 15·17 | 16·72 |

பொருள்களை வாங்கச் செலவிடப்பட்ட தொகையின் சதவீதத்திலும், அல்லது மொத்தச் செலவிலும் வருமான வரி ஒரே மாதிரியாக உள்ளது. ஆகவே, இதை ஒரு வளர்வீத வரி என்பதைக் காட்டிலும், இது ஒரு வீதாசார வரி என்று கூறுவதே மேல்.[1] விற்பனை வரியின் வருமானங்களின் வளர்ச்சி கீழ்வரும் அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது.[2]

| மாநிலம் | 1946-7 | 1948-9 | 1949-50 |
|---|---|---|---|
| சென்னை | 7·22 | 12·32 | 12·45 |
| பம்பாய் | 1·60 | 6·35 | 9·45 |
| வங்காளம் | 3·60 | 4·00 | 4·00 |
| யுனைடெட் மாநிலங்கள் | — | 4·00 | 6·00 |
| பஞ்சாப் | 0·12 | 0·24 | 0·74 |
| பீகார் | 0·78 | 2·24 | 3·14 |
| மத்திய மாநிலங்களும் பீராரும் | — | 1·40 | 1·75 |
| அஸ்ஸாம் | — | 0·15 | 0·20 |
| ஒரிஸ்ஸா | — | 0·29 | 0·57 |
| | 13·32 | 30·98 | 38·30 |

[1] விற்பனை வரி, விற்பவனிடமிருந்து வசூலிக்கப்படும்பொழுது அவ்விதமாக அழைக்கப்படுகிறது. வாங்குவோரிடமிருந்து வசூலிக்கப்படும்பொழுது அது வாங்கும் வரி என அழைக்கப்படுகிறது. சாதாரணமாக, தனிப்பட்ட வாங்குவோர்கள் எண்ணிக்கையில் மிக அதிகமாக இருப்பதாலும், இவர்களைக் கண்டுபிடிப்பது கடினமாதலாலும், நிர்வாகத்திற்குச் சுலபமாக இருப்பதாலும் இவ்வரி விற்போர்மீதோ அல்லது உற்பத்தி செய்வோர் மீதோ சுமத்தப்படுகிறது. விற்பனை வரி முக்கியமாக இருவகைப்படும், ஒருமுக வரி; பன்முக வரி. முன் குறிப்பிட்டதில் அது ஒரே இடத்தில்தான் விதிக்கப்படுகிறது; பின் கூறப்பட்டதில் அது பல இடங்களில் விதிக்கப்படுகிறது. உதாரணமாக, பொருள் உற்பத்தி செய்வோனிடமிருந்து நுகர்வோனிடம் போகும்வரை பல விற்பனையாளர்கள் மூலமாகப் போகும்பொழுது பல இடங்களில் விதிக்கப்படுகிறது.

[2] United Nations, Public Finance Surveys, India, p. 74. எண்கள், ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

எல்லா மாநிலங்களுக்குமான மொத்த வருமானம், ரூ. 500 கோடியில், விற்பனை வரி ஏறக்குறைய ரூ. 75 கோடி கொடுத்திருக்கிறது. சில மாநிலங்களில், உதாரணமாக, பம்பாய், சென்னை, மேற்கு வங்காளம் முதலியவற்றில் நில வருமானத்தைவிட, விற்பனை வரி அதிகப் பலனைக் கொடுத்திருக்கிறது.

விற்பனை வரி அவசியமாக ஒரு மாநில வரியாகவே தொடர்ந்து கருதப்பட்டாலும், மாநிலங்களுக்கு இடையேயான விற்பனைகள் மத்திய அரசாங்கத்திற்கு விடப்படவேண்டுமென வரி விசாரணைக் குழு பரிந்துரைத்திருக்கிறது. மாநிலங்களுக்கு இடையேயான வியாபார நடவடிக்கைகள்மீது வரி வீதம் குறைவாக இருக்க வேண்டும். அதன் வரவுகள், வசூல்களின் அடிப்படையில் மாநிலங்களுக்குப் பிரித்து அளிக்கப்படுதல் வேண்டும். மாநிலங்களுக்கு இடையே நடைபெறும் வர்த்தகத்தில் நிலக்கரி, இரும்பு, எஃகு, பதனிடப்பட்ட, பதனிடப்படாத தோல்கள், எண்ணெய் வித்துக்கள், சணல் முதலியன சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்தவை எனக் குறிப்பிடவேண்டும். இந்தப் பட்டியலில், மாநிலங்களுக்கு இடையேயான வரிக் குழுவைக் (Inter - State Taxation Council) கலந்து ஆலோசிக்காமல் எந்தப் பொருளையும் சேர்க்கலாகாது. விற்பனை வரி கடைசியில் நுகர்வோர்மீது ஏற்றப்படுவதால், இது தேய்வு வீத வரி எனக் குற்றஞ்சாட்டப்படுகிறது. அது மாநிலங்களுக்கு இடையேயான வாணிபத்தைத் தடை செய்கின்றது. ஆனால், இக் குற்றச்சாட்டுகளுக்கு மேற்பட்டு இவ் வரி நிலைத்துவிட்டது. அதற்குக் காரணம் அதனுடைய நெகிழ்ச்சியும், நல்ல வருமானமும், இதற்கு இணையாக வேறு மாற்று வரி இல்லாமையும் ஆகும். பல்வேறு மாநிலங்களில் இவ்வரி வீதத்தில் பெரிய வேறுபாடுகள் உள்ளன. 1949 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கம், இவ்வரியை ஒருதன்மையதாக ஆக்க, மத்திய அரசாங்கமே அதனை வசூலித்து, ஆதாயத்தை மாநிலங்களுக்குப் பகிர்ந்து அளிக்கலாம் என யோசனை கூறிற்று. ஆனால், இக்கருத்து மாநிலங்களின் எதிர்ப்பினால் கைவிடப்படவேண்டியதாயிற்று. செய்தித் தாள்கள்மீதான விற்பனை வரி ஒன்றுதான் இப்பொழுது மத்திய அரசாங்கப் பட்டியலில் உள்ளது.

மாநிலங்களின் நிதித் துறையில் இன்னொரு முக்கிய அம்சம் என்னவென்றால், பல மாநிலங்களில் மதுவிலக்கைப் புகுத்தியதாகும். 1948 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் சென்னை மாநிலம் மதுவை முழுவதும் ஒழித்தது; 1950 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பம்பாயும் அவ்வாறே செய்தது. ஆந்திராவிலும், சௌராஷ்ட்ராவிலும் மது முற்றிலும் விலக்கப்பட்டுவிட்டது. ஆனால், மற்றொரு பக்கத்தில், பெப்சு, ஹைதராபாத், இராஜஸ்தான், ஹிமாசலப்

பிரதேசம், ஆஜ்மீர், போபால், விந்தியப் பிரதேசம் போன்றவை இத் தருணத்தில் தங்கள் ஆயத்தீர்வை வருமானத்தில் சிறு பகுதிகூட இழக்கும் நிலையில் இல்லை. இவை இரண்டிற்கும் இடையில் முழு மதுவிலக்குக் கொள்கையை அணுகும்விதத்தில் பல்வேறு நிலைகள் உள்ளன. உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், மைசூர், ஒரிஸ்ஸா, திருவாங்கூர் - கொச்சி, கூர்க் முதலிய மாநிலங்களின் பகுதிகளில் மட்டும் மதுவிலக்கு அமலிலுள்ளது; அஸ்ஸாமிலும், பஞ்சாபிலும் சில இடங்களில் மதுவிலக்கு அமலிலுள்ளது. பீகார், மேற்கு வங்காளம், மத்திய டாரதம், டெல்லி முதலியவைகள் மட்டோடு குடிக்கும் கொள்கையைக் கடைப்பிடிக்கின்றன.

அரசியல் சட்டத்தின்படி, மாநிலங்கள் மதுவிலக்குக் கொள் கையைக் கடைப்பிடிக்க வேண்டும்; ஆனால், அதைச் செய்யும் விதமும், இடமும் அவைகளின் விருப்பத்திற்கே விடப்பட்டுள்ளன. எதிர்கால ஆயத்தீர்வைக் கோட்பாடு பற்றி வரி விசாரணைக் குழு அங்கத்தினர்களுக்குள்ளேயே கருத்து வேறுபாடு இருந்தமையால், அக்குழு எவ்விதப் பரிந்துரைகளையும் கொடுக்க முடியவில்லை. மூன்று அங்கத்தினர்கள் முழு மதுவிலக்கைக் கூடிய விரைவில் புகுத்த வேண்டும் எனவும், அகில இந்தியாவிற்கும் ஒருகாலவரை அமைத்து, அதற்குள் எல்லா மாநிலங்களும் அதை அமலாக்க உறுதிமொழி எடுக்கச்செய்யவேண்டும் எனவும் விரும்பினார்கள். அவர்களின் கருத்துப்படி, மதுவிலக்கின் பொருட்டு ஓரளவு வருமானத்தைத் தியாகம் செய்ய வேண்டியிருப்பின் அதற்குச் சிறிதும் தயங்கக் கூடாது. ஆனால், காலப்போக்கில் அவ்விதத் தியாகம் செய்ய வேண்டியிராது; ஏனெனில், மதுவிலக்கு மக்களின் பொருளாதார நிலையை உயர்த்துமாகையால், அவர்களின் வரி செலுத்தும் திறனும் அதிகமாகிறது என்பது அவர்களுடைய கருத்து. ஆயத்தீர்வையில் ஏற்படும் இழப்பு மற்ற வரிகளின் அதிகவருமானத்தினால் சரிக்கட்டப் படும். கடந்த ஐம்பது ஆண்டுகளாக இருக்கும் 'மட்டோடு குடிக்கும் கொள்கை' சாராயத்தைக் குடிப்பதில் எவ்விதக் குறைப்பையும் தெளி வாகக் காணும்படி ஏற்படுத்தவில்லை என அவர்கள் எடுத்துக் காட்டி னார்கள். மேலும், சாராயத்தைப் பங்கீடு செய்வதானது நடை முறையில் செய்ய முடியாததாகும் என்பது அவர்கள் கருத்து.

மற்ற மூன்று அங்கத்தினர்கள் இவ்வாறு வேண்டினர்: (i) மது விலக்கு, அரசியல் சட்டத்தின் பல நெறிமுறைக் கோட்பாடுகளில் ஒன்றாகும்; ஆகவே, இது, இதற்கிணையாக விரைவில் செயலாற்றப்பட வேண்டிய மற்றக் கோட்பாடுகளுடன் இணைந்து, அதன் காலம் வரும்பொழுது செயல்பட வேண்டும். (ii) பல்வேறு மாநிலங்கள், தங்கள் நிதி நிர்வாகத் திறனுக்கு ஏற்ப மதுவிலக்குக் கொள்கையை

அமல் நடத்தவேண்டியிருப்பதால், இக்குறிக்கோளை நிறைவேற்றும் வேகம் எல்லா மாநிலங்களுக்கும் ஒன்ருக இருக்க முடியாது. (iii) எவ்வாருயினும், இக்குழுவிடம் இதைப்பற்றிய உண்மை நிகழ்ச்சிகள் கைவசம் இல்லாதலால், நாடு முழுவதற்குமாக மதுவிலக்கைப் புகுத்த இலக்குத் தேதிகளைப் பரிந்துரைக்க முடியவில்லை.

ஆந்திரா மதுவிலக்கு விசாரணைக் குழு (1954), மதுவிலக்கு ஆந்திராவில் தோல்வி அடைந்துவிட்டது என்ற முடிவுக்கு வந்தது. சாராயம் குடிப்பதை, கல்வி, மட்டோடு குடிக்கும் பழக்கத்தைப்பற்றிய பிரசாரம், விரைவான சமூகப் பொருளாதார முன்னேற்றம் முதலியவைகள் மூலமாகக் கட்டுப்படுத்துவதே அதைவிட நல்ல கொள்கை எனக் கூறியது. அவர்களின் கருத்துக்கு இணங்க, மதுவிலக்கு, மது அருந்தும் தீய பழக்கத்தைக் கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவர இயலவில்லை. அதற்கு மாருக அது தனக்குப் பின்னல், கள்ளச் சாராயம் காய்ச்சுதல், சட்டத்தை மீறவும், குற்றங்கள் புரியவும் வளர்ந்து செல்லும் போக்கு, சட்டத்தை நிலைநாட்டும் ஊழியர்களிடமும், போலீஸாரிடமும் லஞ்ச ஊழல் முதலிய மிக மோசமான தீங்குகளைக் கொண்டுவந்திருக்கிறது. சுருக்கமாகக் கூறவேண்டுமாயின், 'நற்பயன்களைக் கொடுப்பதற்குப் பதிலாக, அது தனி மனிதனுக்கும், சமூகத்திற்கும், நாட்டிற்கும் அழிவு உண்டாக்கும் விளைவுகளில் முடிவடைந்திருக்கிறது' (அறிக்கை, பக்கம், 84). மற்ற மாநிலங்களில் நடத்திய பரிசோதனைகள் இதைவிட ஊக்குவிக்கத் தக்கதாய் இருக்கின்றன எனக்கூற எவ்விதமான மெய்ப்பிக்கும் சான்றுகளும் இல்லை. எப்படியிருந்தாலும் வருங்காலத்தில் மிக விரைவில் மதுவிலக்கை, அதன் விளைவுகளைப் பற்றி எண்ணுமல், ஓர் அகில இந்தியக் கொள்கையாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படும் எனத் தெரிகிறது. இக்கொள்கையினல் நேரடியாகத் தியாகம் செய்யப்படவேண்டிய வருமானம் ஒரு வருடத்திற்கு ரூ. 60 கோடியாகும் என எதிர்பார்க்கப்படுகிறது. ஆயினும், சில வருடங்களின் கசப்பான அனுபவத்திற்குப் பின், நாடு தன் அடிச்சுவடுகளையே பின்பற்றித் திரும்பிப் போக நேர்ந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை ; அப்பொழுது அது, நிதானமாக, ஆனல், நிச்சயமாகச் சாராயத்தை உற்பத்தி செய்வதையும் அருந்துவதையும் கட்டுப்படுத்தும் முறையையும், வருமானச்[1]

[1] *1954 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் அமைக்கப்பட்ட மதுவிலக்கு விசாரணைக் குழு, நாடு முழுவதற்கும் மதுவிலக்கை அமலாக்க, 1958 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி இலக்கு நாளாகக் குறிக்கப்பட வேண்டுமெனப் பரிந்துரைத்தது. ஆனல், திட்டக்குழு முழு மதுவிலக்கு நோக்கம், திட்டமிடப்பட்ட நிகழ்ச்சி முறைக்கேற்ப, ஒவ்வொரு மாநிலத்தின் தேவைகள் சூழ்நிலைகள் இவைகளுக்கு ஏற்றவாறு அணுகப்படவேண்டுமெனக் கூறுகிறது.*

னைக்கு அடுத்த முக்கியத்துவம்தான் கொடுக்கவேண்டு மென்ற நாணயமான தீர்மானத்தையும், மிகுந்த பிரசாரத்தையும் ஆதரிக்கும்.

முடிவுரையாக, எல்லா மாநிலங்களிலும் நிதானமாகப் புகுத்தப் படும் விவசாய வருமானங்கள்மீதான வரியைப்பற்றிக் குறிப்பிட வேண்டும். 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம், தனி மாநிலங்களுக்குத் தங்கள் எல்லைக்குள் ஏற்படும் விவசாய வருமானங்கள்மீது வரி விதிக்கும் உரிமையைக் கொடுத்தது. இவ் வரியை முதன்முதல் விதித்த மாநிலம் அஸ்ஸாம் ஆகும். 1939 ஆம் ஆண்டு அம் மாநிலம் அவ்வாறு செய்தது. இப்பொழுது இவ்வரி கீழ்க்காணும் பன்னிரண்டு மாநிலங்களில் உள்ளது ; பீகார் (22)[1], அஸ்ஸாம் (69), மேற்கு வங்காளம் (64), ஒரிஸ்ஸா (8), உத் தரப்பிரதேசம் (36), ஹைதராபாத் (5) திருவாங்கூர்-கொச்சி (90), சென்னை (7), இராஜஸ்தானம் (15), கூர்க் (10), போபால் (2), விந்தியப் பிரதேசம் (3).

**31. மாநிலச் செலவுகள் :** கடந்த சில வருடங்களாக மத்திய அரசாங்கத்தில் ஏற்பட்டதைவிட, மாநில அரசாங்கங்களின் செலவில் மிகுந்த விரிவு ஏற்பட்டுள்ளது. 1938-9 ஆம் ஆண்டுக்கு முன்பைவிட இப்பொழுது மாநில அரசாங்கங்கள் அதிக நெகிழ்ச்சி உடைய வருவாய் மூலங்கள்மீது ஆதிக்கம் உடையனவாய் இருந்தன ; அவைகளின் செலவுகள் மிக அதிகமாக வளர்ந்ததற்குக் காரணம் அவைகளின் அலுவல்கள் அதிகரித்ததே. 1950-51 ஆம் ஆண்டிற்குப்பின் மாநில வருமானங்கள் தொடர்ச்சியாக அதிக மாயிருந்தாலும், அவைகளின் செலவினங்கள் அதைவிட அதிக மாயிருப்பதால், வருமானக் கணக்கின் நிதி வரவு செலவுத் திட்டத்தில் பற்றுக்குறையை ஏற்படுத்தியுள்ளன.

செலவினங்கள் அதிகமாவதற்குப் பொறுப்பான சில காரணிகள் மத்திய மாநில அரசாங்கங்கள் இரண்டிற்கும் பொதுவானவை. உதாரணமாக விலைவாசி நிலை ஏற்றம், ஜனநாயக நிறுவனங்களின் உயர்ந்த செலவு ; பல்வேறு கட்டுப்பாட்டுத் திட்டங்களின் நிர்வாகச் செலவு, உதாரணமாகத் தொழிலாளர், தொழில் இவைகளுக் கானவை, மக்கள்தொகை அதிகரிப்பு முதலியன. மேலும் நாட்டாண் மைக் கழகங்களுக்கு மேலும் மேலும் நிதியுதவிகளை அளிப்பதன்

[1] இணைக்குறிக்குள் கொடுக்கப்பட்டிருக்கும் எண்கள் இவ்வரியிலிருந்து வந்த வரவுகளைக் குறிக்கின்றன. எண்கள் ரூபாய்களை இலட்சத்தில் குறிக்கின்றன, இது 1954-5 ஆம் ஆண்டிற்குரியது.

மூலம் மாநில அரசாங்கங்கள் மிக அதிகமாகச் செலவு செய்கின்றன.[1] B பிரிவு மாநிலங்கவில் A பிரிவு மாநிலங்களைவிடத் தலாச் செலவுத் தொகை அதிகமாயுள்ளது. C பிரிவு மாநிலங்களில் அது உச்சமாக இருந்தது இதற்கான விளக்கத்தின் ஒரு பகுதி மாநிலங்களின் மக்கள் தொகை அடர்த்தியில் இருக்கிறது. A பிரிவு மாநிலங்களில் மக்கள் தொகையின் ஒருங்கமைப்பு உச்சமாக இருந்தது. C பிரிவு மாநிலங்களில் மிகக் கீழாக இருந்தது. அடர்த்தி அதிகம் ஆக ஆக, தலா நிர்வாகச் செலவு கீழே செல்லும். தலாச் செலவுத் தொகையால் ஏற்படும் வேற்றுமைகள் பல்வேறு மாநிலங்களில் போலீஸ், செய்தித் தொடர்புகள், நீர்ப்பாசனம் முதலியவற்றின் தேவைகளில் ஏற்படும் வேற்றுமைகளால் விளைவிக்கப்படுகின்றன.[2]

மாநிலங்களுக்கு முக்கியமான உரிமைகளும், கடமைகளும் கீழ்க்காணுபவைகளில் உள்ளன: சட்டமும் ஒழுங்கும், போலீஸ் நீதி (சுப்ரீம் கோர்ட், ஹைகோர்ட்டுகளைத் தவிர), நாட்டுத் தன்னாட்சி நிர்வாகம் (மாநகராட்சி மன்றங்கள், முக்கிய டிரஸ்டுகள், மாவட்டக் கழகங்கள், சுரங்கக் குடியேற்றங்கள், பொது நலச் சுகாதாரம் முதலியவை உள்பட) போதை தரும் சாராயப் பானங்களின் உற்பத்தி, அவற்றை வைத்திருத்தலும் விற்பனை யும், ஊனமுற்ற வேலையற்றவர்களுக்குத் துயருதவி, கல்வி நூலகங்கள், பொருட்காட்சி சாலைகள் முதலியன. உள்நாட்டுச் செய்தித் தொடர்புகள். விவசாயம், பூச்சிக் கட்டுப்பாடு, கால்நடை மருத்துவப் பணிகள், நீர்ப்பாசனம், வாயு, வாயு அலுவல்கள். மேலும், கீழ்வருவனவற்றில் மாநிலங்களுக்கும் மத்திய அரசாங் கத்திற்கும் பொதுவான உரிமைகளும் கடமைகளும் உள்ளன. பொருளாதார சமூகத் திட்டமிடுதல், சமூகப் பாதுகாப்பு, சமூகக் காப்புறுதி (Insurance), வேலை, வேலையின்மை, சமூக நலம், தொழிலாளர், வாழ்க்கைத் தொழில், தொழில்பயிற்சி, இடம் பெயர்ந் தோருக்குத் துயருதவியும் மறுசீரமைப்பும், இயந்திரத்தால் இயங்கும் வாகனங்கள், மின்சாரம், விவசாய முன்னேற்றத்தைச் சார்ந்த சமூகப்பணிகளும் முக்கியக் கடமைகளும் மாநிலங்களுக்கு ஒதுக் கப்பட்டிருக்கின்றன. பக்கங்கள் 60, 61-ல் வரும் இரண்டு அட்டவணை களும் மாநிலச் செலவின் முக்கிய இனங்களையும், அவைகளின்

[1] A பிரிவு மாநிலங்களின் பொதுத்துறைச் செலவின் அமைப்பில் ஒரு குறிப் பிடத்தக்க மாற்றம் உள்ளது. முன்னேற்றத்திற்கல்லாத மற்றக் காரியங்களுக்காகச் செலவாகும் மொத்தத் தொகை, முன்னேற்றத்திற்காகச் செலவாகும் தொகையை விட அதிகமானாலும். முன்னேற்றத்திற்கான செலவு, முன்னேற்றத்திற்கல்லாத மற்றச் செலவைவிட விரைவாக அதிகரித்துள்ளது.

[2] Taxation Enquiry Commissoin Report, Vol. *I*, pp. 35-42.

| | A பிரிவு மாநிலங்கள் | | | B பிரிவு மாநிலங்கள் | | | C பிரிவு மாநிலங்கள் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1952·3 | 1953-4 | 1954-5 | 1952-3 | 1953-4 | 1954-5 | 1953-4 | 1954-5 |
| வருமானத்தின் மீதான நேரடிக் கோரிக்கைகள் | 28·47 | 33·64 | 41·39 | 10·68 | 11·15 | 13·26 | 1·71 | 2·41 |
| கடன் பணிகள் | 4·38 | 6·29 | 12·80 | 4·90 | 5·84 | 6·01 | — | — |
| பொதுத்துறை நிர்வாகம் | 88·37 | 90·43 | 91·19 | 23·07 | 23·31 | 23·73 | 2·68 | 2·62 |
| பொதுத்துறைப் பணிகள் | 36·49 | 35·05 | 42·94 | 10·02 | 13·55 | 13·98 | 2·35 | 2·28 |
| பொதுத்துறைப் பணிகள் தவிர மற்ற முன்னேற்றத்திற்கான செலவுகள் | 126·68 | 151·27 | 162·08 | 41·27 | 48·24 | 56·91 | 7·02 | 8·57 |
| மொத்தம் (மற்றவையும் உள்பட) | 329·36 | 371·64 | 400·88 | 104·87 | 115·84 | 127·64 | 15·51 | 17 8 |
| உபரி (+) அல்லது பற்றுக்குறை (—) | —0·14 | —14·15 | —34·11 | +3·25 | —3·63 | —5·88 | —0·34 | —0·76 |

ஒப்பிடப்பட்ட முக்கியத்துவத்தையும் காட்டுகின்றன[1] பணத்திற் கூறும்பொழுது சமூகப் பணிகளின்மீதான செலவு தொடர்ந்து அதிகரித்துக்கொண்டே சென்று, அது அநேகமாக முழுவதும் மாநிலங்களின் மீதே சேருகின்றன.[2]

| தலைப்பு | சராசரி சதவீதம் |
|---|---|
| பொதுத்துறைப் பணிகள் | 24·6 |
| நீர்ப்பாசனம் | 16·2 |
| மின்சாரம் | 14·6 |
| விவசாயம், அதிக உணவு உற்பத்தி செய்யும் திட்டம் | 12·3 |
| கல்வி | 8·0 |
| மருத்துவப் பொதுநலம் | 6·8 |
| தொழில்கள் | 3·7 |
| காடுகள் | 1·1 |
| கால்நடை மருத்துவம் | 0·8 |
| கூட்டுறவு | 1.0 |
| பொது நிர்வாகம், மற்றவை | 10·9 |
| | 100.0 |

மாநிலங்களின் செலவு தொடர்ந்து அதிகமாவதற்குக் காரணம், மாநிலங்களின் விரிந்துகொண்டு வரும் முன்னேற்றத்திற்கான திட்டங்களாகும். 1946-7 லிருந்து 1949-50 வரையான நான்கு ஆண்டுகளில் A பிரிவு மாநிலங்கள் முன்னேற்றத்திற்காக ரூ. 228·75

[1] United Nations, Public Finance Surveys, India, p. 82; Reserve Bank of India, Report on Currency and Finance, 1953-4, Statement 52-4.

[2] ஆனால், எப்படியும் செலவு அதிகரிப்பை, விலை மாற்றங்களுடன் சரி செய்து பார்க்குங்கால், சமூகப் பணிகள் உண்மையாக மிகச்சிறிய முன்னேற்றத்தைத் தான் அடைந்துள்ளன.

கோடி செலவழித்திருக்கிறது. எல்லா மாநிலங்களையும் ஒன்றாக எடுத்துக்கொள்ளுவோமாயின், எல்லாவற்றிலும் பொதுவாகக் காணப்படும் முன்னேற்றத்திற்கான காரியங்கள் என்னவெனில் பொதுத்துறைப் பணிகளான சாலை போடுவதும், நீர்ப்பாசனமும் தான் (குழாய்க் கிணறு, பல நோக்கு ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்கள் உள்பட).

32. **தன்னாட்சி நிறுவனங்கள் ; நாட்டாண்மை நிதி:**[1] இந்தியாவின் தன்னாட்சி நிறுவனங்கள் நான்கு வகைப்படும் : (i) கிராமப் பஞ்சாயத்துகள்; (ii) மாவட்ட ஆட்சிக் கழகங்கள்; (iii) நகராட்சிகள்; (iv) மாநகராட்சிகள்.

(i) **கிராமப் பஞ்சாயத்துகள் :** பெரும்பாலான மாநிலங்களில் கிராமப் பஞ்சாயத்துகளுக்கு வரிவிதிப்பு மிகப்பெரிய வருமான மூலமாக இருக்கிறது. இவைகளைப் பொறுத்தவரை, மாவட்டக் கழகங்களைக் காட்டிலும் அரசாங்கத்தின் நிதியுதவிகள் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்த வருமான இனமாக இருக்கின்றன. பஞ்சாயத்துகள் விதிக்கக்கூடிய வரிகளில் சில: பொதுச் சொத்து வரி, பணி வரிகள், நிலத்தின் வாடகைமீதோ அல்லது வருமானத்தின்மீதோ வரிகள், வர்த்தகம், தொழில்கள்மேல் வரிகள், விலங்குகள், வாகனங்கள்மீது வரிகள், இறக்குமதியாகி உள்ளே செல்லும் பொருள்கள்மீது வரி (octroi), பொது விற்பனை வரியின்கீழ் வரும் பொருள்கள் தவிர மற்றப் பொருள்கள்மீது விற்பனை வரி, யாத்திரை வரி, நாடக, சினிமாக் கொட்டகைகள் மீது வரி, சந்தை, திருவிழாக்கள்மீது வரி, தொழில் வரி. வரிகளை விதிக்கவோ, வீதங்களை மாற்றவோ, இருக்கும் வரிகளை நீக்கவோ மாநிலங்களின் அனுமதி வேண்டும். உண்மையில் மேற்கூறப்பட்ட பெரிய பட்டியலில், பஞ்சாயத்துகள் மூன்று அல்லது நான்கு வரிகளையே மேற்கொள்ளுகின்றன. அவைகளாவன: பொதுச்சொத்து வரி, நிலத்தின்மீதோ அல்லது நில வாடகை மீதோ வரி, தொழில் வரி, விலங்குகள், வாகனங்கள்மீதான வரிகள். அவைகளிடம் ஒப்படைக்கப்பட்ட பல அலுவல்களில், அவைகள் சிலவற்றைச் செய்வதிலேயே திருப்தி அடைகின்றன. உதாரணமாகப் பிறப்பு, இறப்புகளைப் பதிவு செய்தல், பஞ்சாயத்து 'கார்களை' (Panchayat ghars) அல்லது 'சாவடிகளை'க் (Chawdies) கட்டுவது, மேற்பார்த்துக் கொள்ளுவது, குடிதண்ணீருக்காகக் கிணறுகளை வெட்டுவது, மேற்பார்த்துப் பழுது பார்ப்பது, விளக்குகள் போடுவது, தொண்டர்களைத் திரட்டி அளிப்பது முதலியன.[2]

[1] Taxation Enquiry Commission Report, Vol. *III*, pp. 333 - 416.
[2] அத்தியாயம் IX, 5 ஆம் பிரிவைக் காண்க.

(ii) மாவட்ட நகராண்மைக் கழகங்கள்: மாவட்டக் கழகங்கள் தங்கள் வருமானத்தில் மிக முக்கியமான பகுதியை அரசாங்கத்திடமிருந்து நிதியுதவியாகப் பெறுகின்றன. அவைகளுக்கு மிகக் குறைந்த வரி விதிப்பு அதிகாரங்களே உள்ளன. அதிக நிதியுதவிகள் கிடைத்தபோதிலும் அவைகள் நகராட்சிகளைவிட வறுமையற்று இருந்தன. அவைகளில் மிக முக்கியமான வருமான மூலம், நெகிழ்ச்சியற்றதாக நிரூபிக்கப்பட்ட நில வரியாகும். சொத்துக்கள் மாற்றத்தின்போது விதிக்கப்படும் தீர்வை, தொழில் வரி, வழிச்சுங்கம் (Toll) முதலியன முக்கியத்துவத்தில் அடுத்த படியில் வருகின்றன. கிராமப் பஞ்சாயத்துகள் நாடெங்கும் மிக விரிந்த முறையில் நிறுவப்பட்டு வருகின்றன. அவைகள் மாவட்டக் கழகங்களிலிருந்து அதிகமதிகமாக அலுவல்களையும் வருமான வளங்களையும் எடுத்துக்கொள்கின்றன.

(iii) நகராட்சிகள்: சராசரியாக 63·2 சதவீதம் வருமானம் வரிகளிலிருந்து நகராட்சிக்குக் கிடைக்கிறது. கீழ்வருவன நகராட்சிகள் விதிக்கும் முக்கிய வரிகளாகும்: (அ) சொத்துக்கள்மீது வரி, நிலங்கள், கட்டடங்கள் மீது தீர்வைகள், பொதுத் தீர்வைகளும், பணி வரிகளும், சொத்து மாற்றப்படும்பொழுது விதிக்கும் தீர்வைகளும் (ஆ) பொருள்கள்மீது வரி, இறக்குமதியாகி உள்ளே செல்லும் பொருள்கள்மீது வரி, முடிவுகளில் வரி. (இ) நபர்கள்மீது சொந்த வரி, தொழில், வர்த்தகம், வேலை இவைகள்மீது வரிகள், யாத்திரீகர்கள் மேல் முடிவு வரி (யாத்திரீகர் வரி உட்பட). (ஈ) நாடகம், சினிமாக் கொட்டகைகள் வரி, காட்சி வரி. (உ) விலங்குகள், வாகனங்கள்மீது வரி. பொதுவாகப் பேசும்பொழுது நகராட்சிகள், நேர்முக வரிகளை விதித்து மக்களின் விரோதத்தைத் தேடிக்கொள்வதைவிட, இறக்குமதியாகி உள்ளே செல்லும் பொருள்கள்மீதான வரி போன்ற மறைமுக வரிகளையே தெரிந்தெடுக்கின்றன. மொத்தத்தில் முழுவதும் பார்க்குங்கால், நகராட்சிகளின் நிதி நிலை, வருமானம், செலவு ஆகிய இரண்டுமே கீழாக இருப்பதைக் காட்டுகிறது. பெருகிய அலுவல்களால் வளரும் செலவிற்குத் தகுந்தாற்போல் அவைகளின் வருமானம் வளரவில்லை. கடமையாகச் செய்யப்பட வேண்டிய பணிகள்கூட தேவைக்குக் குறைவாக நகராட்சிகளால் செய்யப்படுகின்றன.

(iv) மாநகராட்சிகள்: மாநகராட்சிகள், நகராட்சிகளினின்று இரு விதங்களில் வேறுபடுகின்றன. முதன்மையாக, வரி விதிப்பதிலும், பெரிய அலுவல்களைச் செயல்படுத்துவதிலும் அவைகளுக்கு நிறைய அதிகாரங்கள் உண்டு. இரண்டாவதாக, மாநகராட்சிகளில் ஆராய்ந்து தீர்மானிக்கும் அலுவல்களும், செயலாற்றும் அலுவல்

களும், அலுவல்களின் தலைமை அதிகாரமும் தனித்தனியே பிரிக்கப் படுகின்றன; அதாவது, நகராட்சியின் ஆணையாளர் தேர்ந்தெடுக்கப் பட்ட சபையிலிருந்து தனியாக ஒப்புமையில் சுதந்திரத்துடன் இருக்கிறார். இவ்வாறாகத் தற்பொழுது பன்னிரண்டு மாநகராட்சிகள் உள்ளன. கீழ்வரும் அட்டவணை, அவைகளில் சிலவற்றின் வருமானத்தின் வேற்றுமையையும், அவைகள் பணியாற்றும் மக்கள் தொகையையும் குறிக்கிறது.[1]

| | மக்கள் தொகை (லட்சத்தில்) | வருமானம் 1951-2 ஆம் ஆண்டு (லட்ச ரூபாய்களில்) |
|---|---|---|
| பம்பாய் | 28·36 | 860·5 |
| கல்கத்தா | 25·21 | 542·5 |
| சென்னை | 14·29 | 230·0 |
| அஹமதாபாத் | 8·14 | 110·6 |
| திருவனந்தபுரம் | 1·87 | 9·9 |
| நாக்பூர் | 4·89 | 108·3 |

மாநகராட்சிகள் நிறைய வரி வருமானங்கள் பெற்றும், நகரமைப்புத் திட்டம், சேரிகளைச் சுத்தம் செய்தல், வீடு கட்டுதல், தண்ணீர் வசதி, சாக்கடை வசதி, இன்னும் பெரிய நகரங்களில் காணற்கரிய விதத்தில் பெருகியுள்ள மக்கள் தொகைக்கு வேண்டிய மற்றத் தேவைகள் முதலியவற்றை அளிக்கமுடியாமல் துன்புறுகின்றன.

33. **நாட்டாண்மைக் கழகங்களின் வருங்காலம் :** இந்தியாவில் நாட்டாண்மைக் கழகங்களின் தேவைகளையும் பொறுப்புகளையும் பார்க்குங்கால் அவைகளின் வருமானம் மிகக் குறைவாகும். மத்திய மாநில அரசாங்கங்களின் வருமானப் போக்குகளைப் பார்க்கும்பொழுது நாட்டாண்மைக் கழகங்களின் வருமான வளர்ச்சி - பணத்தின் அடிப்படையில் பார்த்ததாலுங்கூட - மிக நிதானமாக இருக்கிறது. ஐந்தாண்டுத் திட்டங்களின் வெற்றி, திட்டங்கள் சம்பந்தமாகக்

[1] Taxation Enquiry Commission Report, vol. *III*, p. 348.

கனமான பொறுப்புகள் சுமத்தப்பட்ட நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களின் ஒத்துழைப்பையும், துணிவுடன் செய்யும் ஊக்கத்தையும் பொறுத்தது ஆகும். 1919 ஆம் ஆண்டுச் சட்டத்தின்கீழ் மாநிலங்கள் நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களுக்காகச் சில வரிகளை (குறிப்பிட்ட வரிகள் எனக் கூறப்பட்டவை) விதிக்கலாமெனவும், நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களைக் கீழ்க்கண்ட வரிகளை விதிக்க அனுமதிக்கலாம் எனவும் சட்ட விதிகளால் கூறியது. வழிச் சுங்கங்கள், நிலம், நில மதிப்பீட்டின்மீது வரி, கட்டடங்கள், வாகனங்கள், படகுகள், விலங்குகள் முதலியன மீது வரி. ஆனால், 1935 ஆம் ஆண்டுச் சட்டத்தால் இந்த ஏற்பாடுகள் விலக்கப்பட்டதோடு, இரண்டாம் அட்டவணையிலிருக்கும் குறிப்பிடப்பட்ட வரிகள் மாநிலங்களுக்கான பட்டியலில், இவ் வரிகள் நாட்டாண்மைக் கழகங்களுக்காக ஒதுக்கப்பட்டவை என்பதற்குச் சிறிதும் அடையாளமின்றிச் சேர்க்கப்பட்டன. இந்த மாற்றம் நாட்டாண்மைக் கழகங்களின் நிதியின்மேல் சாதகமற்ற விளைவைத் தந்தன. முன்னால் முழுவதும் நாட்டாண்மைக் கழகங்களுக்கான வரி எனக் கருதப்பட்டவைகளை மாநில அரசாங்கங்கள் சில சமயங்களில் தங்களுடைய காரியங்களுக்காகப் பயன்படுத்திக்கொண்டன. மாநிலங்கள் நாட்டாண்மைக் கழகங்களுக்குக் கடன்களோ அல்லது உதவியோ அளிக்கலாம்; ஆனால், அவைகளுக்குக் குறிப்பிட்ட வருமான மூலங்களை அளிக்க வேண்டுமென்று கடமை இல்லை. பஞ்சம், வெள்ளம், இன்னும் மற்றப் பெருந்துன்பங்களில்—இயல்பு கடந்த நிலையில்—மத்திய அரசாங்கம், நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களுக்கு நேரடியான பண உதவி செய்யலாமே தவிர, மத்திய அரசாங்கத்திற்கு நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களுடன் நேரடித் தொடர்பு இல்லை.

1953ஆம் ஆண்டு வரி விசாரணைக் குழு, நாட்டாண்மைக் கழகங்களின் மறு சீரமைப்பிற்காகப் பல பரிந்துரைகளை வழங்கியுள்ளது. கிராமப் பஞ்சாயத்துகளைப் பொறுத்தவரை, அவைகளை ஏற்படுத்திய சட்டத்தில் கண்டுள்ளபடி வழக்கமாக அவைகளுக்குக் கொடுக்கப்படும் பல்வேறு அலுவல்களை நிறைவேற்ற முடியுமா என்பதைப்பற்றி அது தன்னுடைய நம்பிக்கைக் குறைவைத் தெரிவித்தது. ஒருசில பொறுக்கி எடுக்கப்பட்ட, திட்டவட்டமாக விளக்கப்பட்ட கடமைகளையே அவைகளுக்குக் கொடுக்கவேண்டுமெனவும், அவ்வலுவல்கள், மாவட்ட நாட்டாண்மைக் கழகங்கள், மற்றக் கிராமாந்திரக் கழகங்கள் முதலியவற்றின் அதேபோன்ற அலுவல்களுடன் இணைக்கப்பட வேண்டுமெனவும் அக்குழு கருதியது.

நாட்டாண்மைக் கழகங்களின் நிதியைப் பொறுத்த மட்டில், அக்குழு கீழ்க்கண்ட வரிகளை அவைகளின் தனிப்பட்ட உபயோகத்

திற்காக ஒதுக்கி வைக்கப்படவேண்டுமெனப் பரிந்துரைத்தது: (i) நிலம், கட்டடங்கள் மீதான வரி; (ii) இறக்குமதியாகி உள்ளே செல்லும் பொருள்கள்மீது வரி; (iii) வாகனங்கள் (இயந்திரத்தால் இயங்குபவை தவிர மற்றவை) மீது வரி; (iv) விலங்குகள், படகுகள் மீது வரிகள்; (v) தொழில், வர்த்தகம், வேலைகள்மீது வரிகள்; (vi) செய்திப் பத்திரிகைகளில் வரும் விளம்பரங்களைத்தவிர மற்ற விளம்பரங்கள்மீது வரி; (vii) நாடக, சினிமாக் கொட்டகைகள் அல்லது காட்சிகள்மீது வரி; (viii) சொத்து மாறும்பொழுது வரி. சாலைகளிலும், உள்நாட்டு நீர்வழிப் பாதைகளிலும் கொண்டு சொல்லப்படும் பொருள்கள்மீதும், பிரயாணிகள்மீதும், நாட்டாண்மைக் கழகங்கள் வழிச் சுங்கம் விதிக்க அனுமதிக்கப்படவேண்டும் என்று அது பரிந்துரைத்தது. குழுவின் கருத்துப்படி, நாட்டாண்மைக் கழகங்கள், நில வருமானம், மோட்டார் வாகன வரி இவைகளின் ஆதாயத்தில் மட்டும் பங்களிக்கப்பட்டு, மற்ற வரிகளில் பங்களிக்கப் படுவதைவிட நிதியுதவிகளே அளிக்கப்படலாம் என்பதாகும். நாட்டாண்மைக் கழகங்கள் வியாபார அலுவல்களையும், வரியைத் தவிர மற்ற வருமான மூலங்களையும் பெருக்க ஊக்குவிக்கப்படவேண்டும். மாநிலங்கள் நாட்டாண்மைக் கழகங்களுக்கு (பெரிய நகராட்சிகள், மாநகராட்சிகளைத் தவிர) அடிப்படையான 'பொதுக் காரியங்களுக்கென' ஒரு நிதியுதவியை, ஒரு நியாயமான உறுதிபெற்ற காலம் வரை (உதாரணமாக, மூன்று அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு) கொடுக்கலாம். இந்த அடிப்படை நிதியுதவிகளைத் தவிர, அக்குழு குறிப்பிட்ட கட்டுப்பாடுகளுக்கு அடங்கிய நிதியுதவிகளை அளிக்கவும், நகராட்சிக் கடன்களுக்கு அரசாங்கம் உறுதியளிக்கும் முறையை மேற்கொள்ளவும் பரிந்துரைத்தது. கிராமாந்தரக் கழகங்களுக்கு ஏற்ற வரிகள், நிலவரியும், சொத்து மாற்ற வரியும் எனவும், பொதுச் சொத்து வரி, தொழில்நிலவரி, நில வரி, சொத்து மாற்ற வரி முதலியன பஞ்சாயத்துகளுக்கு மிகவும் பொருத்தமானவை எனவும் அக்குழு கருதியது.

கீழே வருபவை அக்குழுவின் சில முக்கிய பரிந்துரைகள்: (i) மாநில அரசாங்கங்கள் சிறு நகராட்சி முன்னேற்றத் திட்டங்களுக்குப் பயனுள்ள உதவி அளிக்க வேண்டும். (ii) இப்பொழுதிருக்கும் நில வரியின் கீழான விகிதங்களை வருமான வரியின் தண்டமாக வேண்டிய அளவு மாற்றி விதித்து, அதை நாட்டாண்மைக் கழகங்களுக்குத் தனியாக ஒதுக்கிவிடவேண்டும். நிலவரியின் குறைந்த அளவு, நில வருமானத்தில் ஒவ்வொரு ரூபாயிலும் 3 அணுக்களாக இருத்தல் வேண்டும். நிலையான சொத்துக்களை மாற்றும்பொழுது வரி விதிப்பது நகரக் கழகங்களுக்குத்தான் பொருந்தும். நகராட்சி நிலப்பகுதிகளில் இருப்புப்பாதை, கடல்,

ஆகாயம் இவற்றில் கொண்டுசெல்லப்படும் பொருள்கள்மீது முடிவு வரி விதிப்பதை மத்திய அரசாங்கம் சாதகமாக நோக்க வேண்டும். (iii) தகுந்த குறைந்தபட்ச வீதங்களில் தொழில் வரி விதிக்கப்படுவதானது: (அ) நகராட்சிகளிலும், மாநகராட்சிகளிலும் கட்டாயப்படுத்தப்படவேண்டும். (ஆ) பஞ்சாயத்துகளின் விருப்பத்திற்கு விட்டுவிடலாம். (இ) மாவட்டக் கழகங்களுக்கு சாதாரணமாக அனுமதி தரக்கூடாது. (iv) நகராட்சிக் கழகங்கள் தனித்தனியாக மோட்டார் வாகனங்கள்மீது சக்கர வரி (Wheel tax) விதிக்க வேண்டும்; நகராட்சிகளும், மாவட்ட நாட்டாண்மைக் கழகங்களும்; மாநில மோட்டார் வாகன வரி வருமானத்திலிருந்து பங்கு பெற வேண்டும். (v) ஐந்து இலட்ச ரூபாய்களுக்குமேல் செலவு செய்த பாலங்களில், அத்தொகை மறுபடியும் பெறப்படும் வரை, வழிச் சுங்கங்கள் விதிக்கப்படலாம்; மற்ற வழிச் சுங்கங்கள் ஒழிக்கப்பட வேண்டும்.

**34. இந்தியப் பொதுக் கடன்களின் வரலாறு:** 1792 ஆம் ஆண்டு இந்தியப் பொதுக்கடன் சிறு தொகையான ரூ. 7 மில்லியனிலிருந்து, 1858 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கம் கிழக்கிந்தியக் கம்பெனியிலிருந்து நிர்வாகத்தை எடுத்துக்கொண்டபொழுது, ரூ. 100 மில்லியனாக உயர்ந்திருந்தது. கிழக்கு இந்தியக் கம்பெனி தொடுத்த போர்களால் (1857 ஆம் ஆண்டுக் கலகத்தை அடக்கியது உள்பட) இக்கடன் ஏற்பட்டதால், அது பயனற்றதாய் இருந்தது. இந்திய அரசாங்கம் கம்பெனியின் பொதுக்கடன்களை எடுத்துக் கொண்டதுமன்றி, கிழக்கிந்தியக் கம்பெனியின் 1874 ஆம் ஆண்டு மீட்கப்பட்ட £ 12 மில்லியன் ஆன மூலதன இருப்பிற்கு. இலாப ஈவு அளிக்கவேண்டிய பொறுப்பையும் ஏற்றுக்கொண்டது. கிழக்கிந்தியக் கம்பெனியின் மறைவுக்குப் பின் நிர்வாகத்தின் தன்மை மாறி வர்த்தகத்திற்கு அளிக்கப்பட்டிருந்த முக்கியத்துவம் நாட்டின் ஒழுங்கான முன்னேற்றத்திற்கு அளிக்கப்பட்டது. இந்திய அரசாங்கம் பெரிய பொதுத்துறை வேலைகளை மேற்கொண்டதுமன்றி இருப்புப்பாதைகளை வாங்கியது; நீர்ப்பாசனத் திட்டங்களை ஆரம்பித்தது. இக் காரியத்திற்குக் கடன் வாங்கப்பட்ட பணம், பொதுத் துறை அலுவல்களுக்கான பொதுக்கடன் என அழைக்கப்பட்டது; 1879 ஆம் ஆண்டிலிருந்து மற்றச் சாதாரணக் கடன்கள், பயனிலாக் கடன்கள் என அழைக்கப்பட்டன. இவை முதலில் கூறப்பட்ட கடன்களிலிருந்து வேறுபட்டவை. 1878 ஆம் ஆண்டு முதல். அரசாங்கம் நடைமுறை வருமானத்தின் உபரிகளை உபயோகித்து, பயனுள்ள செலவுகளுக்கு நிதி வசதி அளித்து, அந்த அளவிற்கு பயனிலாக் கடன்களைப் பயனுள்ள கடன்களாக மாற்றியது. இம் முறையில் சாதாரணக் கடன்கள் 1917 ஆம் ஆண்டு முடிவுற்றிருக்க

வேண்டும். ஆனால், இரண்டாம் உலகப்போர் வந்ததால் 1916 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 'சாதாரணக் கடன்கள்' ரூ. 3·1 கோடியாக அதிகரித்தன. அதன்பின் பெரிய பொதுக் கடன்கள் இந்திய நிதித்துறையின் நிரந்தரமான அம்சம் ஆகிவிட்டன. அதன்பின் வந்த போர்க் கடன்கள் இந்தியாவின் போர்ப் பங்குதவிகள், புது டில்லிக்கான செலவு, போருக்குப்பின் நிர்மாணப்புதுத் திட்டங்கள், வரவு செலவுத் திட்டத்தின் பற்றுக்குறைகள் முதலியன சாதாரணக் கடனை 1924 ஆம் ஆண்டு ரூ. 257·7 கோடியாக உயர்த்தின 1914-18 ஆம் ஆண்டுகளுக்குமுன் இங்கிலாந்தில் அரசாங்கக் கடன்கள் ஏற்படுத்தப்பட்டன. போர்க்காலத்தில் இது கிடைக்காமல் போகவே, அரசாங்கம் நாட்டிற்குள்ளேயே பணம் கடன் வாங்க வேண்டியிருந்தது. அவ்வாறு செய்கையில், அதிகத் தொகைகள் இந்தியாவுக்குள்ளேயே, அதிகமான சிரமம் இன்றிப் போர்க்காலக் கடன்கள் மூலமாகவும், ரொக்க உறுதிச்சீட்டுகள் (cash certificates) மூலமாகவும் கிடைக்கும் என்பதை அவர்கள் கண்டுபிடித்தார்கள். 1929-30 ஆம் ஆண்டு முதன் முறையாக அரசாங்க உண்டியல்கள் வெளியிடப்பட்டு, அதன்பின் இந்திய நிதித்துறையின் நிரந்தர அம்சமாக ஆகிவிட்டது.

இரண்டாம் உலகப் போரின்பொழுது 1940-ஆம் ஆண்டிலிருந்து 1943-ஆம் ஆண்டிற்குள், பாதுகாப்புப் பத்திரங்கள், பாதுகாப்புச் சேமிப்புப் பத்திரங்கள், வட்டியில்லாப் பத்திரங்கள் முதலியவற்றை வெளியிட்டதன்மூலம் ரூ. 547 கோடி சேகரிக்கப்பட்டது. 1942-3 ஆம் ஆண்டு முதல் வரவு செலவுத்திட்டத்தின் பற்றுக்குறைகளாலும், குவிந்துகொண்டே செல்லும் போர்ச் செலவுகளாலும் கடன் மிக வேகமாக அதிகரித்தது. இந்திய அரசாங்கத்தின் வட்டி கொடுக்கும் கடமைப் பொறுப்புகள் 1942-3 ஆம் ஆண்டு ரூ. 1,389·13 கோடியிலிருந்து, முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கப்படும் வரை அவை உயர்ந்துகொண்டே சென்று, ரூ. 2,561·50 கோடியில் நின்றன. 1955-6 ஆம் ஆண்டு அந்த எண்கள் ரூ. 3,508·79 கோடியாக உயர்ந்தன. பக்கம் 69-ல் வரும் அட்டவணை பொதுக் கடன்களின் வளர்ச்சியையும், அவைகளின் முக்கிய மாற்றங்களையும் காட்டுகிறது.[1]

இப்பொழுது ஸ்டெர்லிங் கடன்கள் பொதுக் கடன்களில் மிக முக்கியப் பகுதி வகிக்கின்றன. சிறு சேமிப்புகளும், அரசாங்க உண்டியல் கணக்கும் மொத்தப் பொதுக்கடன்களில் மூன்றில் ஒரு பங்காகும்.

[1] Reserve Bank of India, Reports on Currency and Finance, 1951-2 (Statement 74) and *1954-5*. (Statement 58). எண்கள் ரூபாய்களை லட்சத்தில் குறிக்கின்றன,

| | 1939-40 | 1942-43 | 1945-46 | 1950-51 | 1954-55 | 1955-56 |
|---|---|---|---|---|---|---|
| ரூபாய்க் கடன்கள் | 45,023 | 74,874 | 1,49,222 | 1,43,846 | 1,47,491 | 1,5,311 |
| ஸ்டெர்லிங் கடன்கள் | 37,346 | 2,994 | 1,322 | 135 | 70 | 67 |
| சிறு சேமிப்புகள் | 13,535 | 9,277 | 22,152 | 32,625 | 50,539 | 55,699 |
| அரசாங்க உண்டியல் கள், வழி வகைகள் முன்பணம், அரசாங்க வரவுகள் | 5,470 | 26,470 | 8,333 | 37,320 | 55,495 | 89,495 |
| மொத்தம் (மற்றவை யும் உள்பட) | 1,20,386 | 1,38,913 | 2,30,848 | 2,56,150 | 3,03,915 | 3,50,879 |

அண்மை ஆண்டுகளில் மற்றப் பழமையான பொதுக்கடன் வாங்கும் முறைகளைத்தவிரத் தேசீய சேமிப்புப் பத்திரங்களாலும், பத்தாண்டுத் தேசீயத் திட்டக் கடன்கள், பதினைந்து ஆண்டுகள் ஆண்டுத் தொகைப் பத்திரங்கள் மூலமாக ரூபாய்க் கடன்கள் ஏற்படுத்தப் படுகின்றன.

35. **பொதுக்கடன்களின் மீட்பு:** 1924 ஆம் ஆண்டுவரை பொதுக்கடன்களின் மீட்பைப்பற்றி இந்திய அரசாங்கத்திற்கு எவ்விதத் திட்டமான முறையும் இல்லை. 1914-18 ஆம் ஆண்டு களுக்கு முன் உபரித் தொகைகளை, இருப்புப் பாதைகள், நீர்ப் பாசனம் முதலியவற்றின்மீது செய்யப்படும் மூலதனச் செலவு மூலமாகவும், இருப்புப்பாதைகள் ஆண்டுத்தொகை அளிப்பதன் மூலமாகவும், 1917 ஆம் ஆண்டு இருப்புப்பாதைகள் கடன் கழிவு நிதி ஏற்பட்டதன் மூலமாகவும் கடன்கள் குறைக்கப்பட்டன. 1924 ஆம் ஆண்டு நிதிஅங்கத்தினர், சர் பேசில் பிளாக்கட் (Sir Basil Blackett) பொதுக் கடன்களை முழுதும் நீக்காவிட்டாலும் அதனுடைய பயனி லாப் பகுதியையாவது குறைக்க ஒரு ஒழுங்கான திட்டத்தைக் கொணர்ந்தார். அவர் கூறியதாவது: ஒவ்வொரு வருட இறுதியிலும்

1923 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 31 ஆம் தேதியிலிருந்த கடனைவிட அதிகமாயுள்ள தொகையில் $\frac{1}{80}$ பாகமும், ரூ. 4 கோடியும் நடைமுறை வருமானங்களில் சரி செய்யப்பட வேண்டும். 1933-4 ஆம் ஆண்டு வருடாந்தர மொத்தத் தொகை ரூ. 3 கோடியாகக் குறைக்கப்பட்டது.

36. **ஸ்டெர்லிங் கடன்:** 1937 ஆம் ஆண்டிற்கு முன் இந்தியாவின் பொதுக் கடனில் ஸ்டெர்லிங் கடன்கள் மிகப்பெரிய பாகமாயிருந்தன. ஆனல், அந்த ஆண்டிற்குப்பின், இந்திய பணச் சந்தையை நன்கு உபயோகித்திருந்ததாலும், இன்னொரு பகுதி, திட்டவட்டமான திருப்பிக் கொடுக்கும் ஏற்பாட்டினலும் அதன் முக்கியத்துவம் குறைந்துவிட்டது. 1939 ஆம் ஆண்டு பெரும் ஸ்டெர்லிங் தொகைகள், யு. கே (U. K.) யினின்று கிடைத்த செலுத்துதல்களாலும், வெள்ளியை விற்றதாலும் கிடைத்தன. இந்த வளங்கள் இந்தியாவினல் முடிக்கமுடியாத ஸ்டெர்லிங் பத்திரங்களைத் திறந்த சந்தையில் வாங்க உபயோகப்படுத்தப்பட்டன. ஆனல், இவைகள் பின் இந்திய அரசாங்கத்தால் நீக்கப்பட்டு, 3 சதவீத, $3\frac{1}{2}$ சதவீத முடிக்க முடியாத ரூபாய்க் காகிதக் கடன்கள் கொண்டு வரப்பட்டன. 1940 ஆம் ஆண்டு ஸ்டெர்லிங் கடன்கள் வைத்திருப்போர், அவைகளை ரூபாய்க் கடன்களாக மாற்ற அனுமதி அளிக்கப்பட்டது. 1941 ஆம் ஆண்டு அவ்வாறு £ $28\frac{1}{2}$ மில்லியன் மாற்றப்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கூட்டுறவினல் £ 90 மில்லியன் தொகை கட்டாயமாகத் திருப்பி அளிக்கப்பட்டது. இந்திய அரசாங்கமோ ஸ்டெர்லிங் இருப்பு வைத்திருக்கும் இந்தியர்களை அதை ரிசர்வ் பாங்கிற்கு (Reserve Bank) விற்குமாறு கட்டாயப்படுத்தியது. இந்த இரு பாதை நடவடிக்கைகள் மொத்தம் £ 70 மில்லியனைப் பற்றியதாகும். 1937-8 ஆம் ஆண்டிலிருந்து, 1948-9 ஆம் ஆண்டிற்குள் £ 327. 32 மில்லியன் கடன்கள் (ரூ. 437.42 கோடிக்குச் சமம்) திருப்பிக் கொடுக்கப்பட்டது. அதே சமயத்தில் அதற்கு இணையாக ரூ. 274·05 கோடி பெறுமான ரூபாய்கள் ஏற்படுத்தப்பட்டன.

ஸ்டெர்லிங் கடன் இவ்வாறு குறைக்கப்பட்டதானது இந்தியாவின் நிதி நிலையை உறுதிப்படுத்திற்று. இந்தியா வெளி நாடுகளின் மிகுதியான இருப்பினங்களை வைத்துக்கொள்ள வேண்டிய தேவை நீங்கியதோடு தனது பொன்னிற ஓரப்பத்திரங்களின் (Gilt edged securities) சந்தையை விரிவாக்கவும் முடிந்தது.

37. **ஸ்டெர்லிங் இருப்புகள்:** 1939 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இருந்த சிறிய தொகையான £ 52 மில்லியனிலிருந்து போர் நிமித்தம் இந்தியாவிலிருந்து சரக்குகளும் பொருள்களும் வாங்கியதால், 1947 ஆம் ஆண்டு £ 1,137 மில்லியன் பெருந்தொகை

யாக வளர்ந்துவிட்டது. லண்டனில் ஸ்டெர்லிங்கில் செலுத்தப்பட்டு ரிசர்வ் பாங்குகளில் வரவு வைக்கப்பட்ட தொகைக்கு இணையான தொகை இந்தியச் செலாவணியில் செலுத்தப்பட்டது. அதன் விளைவாக ஏற்பட்ட செலாவணி வீக்கத்தாலும், பொருள் குறைப்பாலும் மக்கள் நிறையத் தியாகம் செய்யவேண்டியிருந்தது.

1947 ஆம் ஆண்டு லண்டனில் கையெழுத்தான இடைக்கால ஒப்பந்தப்படி, ஸ்டெர்லிங் இருப்புகள் இரண்டு இந்திய அரசாங்கக் கணக்குகளை ஏற்படுத்தின. கணக்கு எண் 1. துவக்கத்தில் £ 65 மில்லியன்களுடன் ஆரம்பிக்கவிருந்தது; அது பல விதங்களில் மாற்றக் கூடிய செலாவணியாக உபயோகப்படுத்தப்படலாம். நடைமுறை கொடுக்கல் வாங்கல் தொகைகள் யாவும் இந்தியக் கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டும். இந்த இடைக்கால ஒப்பந்தம் 1948 ஆம் ஆண்டு கையெழுத்திடப்பட்ட புதிய ஒப்பந்தத்தால் பின்பற்றப் பட்டது. இந்த ஒப்பந்தத்தால் (i) இந்தியா, 1947 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி எடுத்துக்கொண்ட எல்லாச் சரக்குகளுக்கும் நிறுவனங்களுக்கும் £ 100 மில்லியன் (ரூ. 133 கோடி) மொத்தத் தொகையாகக் கொடுத்தது. (ii) இந்தியா, ஸ்டெர்லிங் ஓய்வு உதவிக் காகவும், குறைந்து செல்லும் ஆண்டுத் தொகைகளை வாங்கவும் யு. கே. (U. K.)-க்கு £ $147\frac{1}{2}$ மில்லியன் கொடுக்கவேண்டும். 60 ஆண்டுகளில் இந்த ஆண்டுத் தொகை மறைந்துவிடும். (iii) காப்புச் செலவால் இந்தியாவுக்குக் கொடுக்கவேண்டிய கடன்கள் £ 65 மில்லியன் எனக் குறிப்பு வெளிவந்தது. (iv) 1948 ஆம் ஆண்டு ஜூலை மாதம் தொடங்கி, மூன்று ஆண்டுகளுக்கு யு. கே. £ 80 மில்லியன் கொடுப்பது என்றும், அத்தொகை அதே அளவுள்ள செலவழிக்கப் படாத மற்ருெரு தொகையுடன் சேரும்பொழுது மொத்தம் £ 160 மில்லியன் இந்தியக் கணக்கு எண் 1-க்குச் சேரும்.

ஒப்பந்தம் கையெழுத்தான தேதியன்று, மொத்தத் தொகை யாகச் செலுத்தப்பட்டவைகளைக் கழித்தபின், ஸ்டெர்லிங் இருப்பு எண் £ 800 மில்லியனுக இருந்தது. 1954-5 ஆம் ஆண்டு இந்த இருப்புகள் £ 549 மில்லியனுகக் குறைந்ததற்குக் காரணம், இந்தியா தன்னுடைய பொருளாதார வளர்ச்சிக்கு வேண்டிய பொருள்களை வாங்க இந்த இருப்புகளை நிறைய உபயோகித்ததாகும்.

38. **வரி விசாரணைக்குழு (1953):** 1953 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி, அரசாங்கத்தின் தீர்மானத்தினுல், நாட்டின் வரி அமைப்பைப் பற்றி மிக விரிவான விசாரணை நடத்த வரி விசாரணைக்குழு அமைக்கப்பட்டது. அத்தகையதொரு விசாரணை இப்பொழுது அவசியமாகிவிட்டது. ஏனெனில், அத்தீர்மானம் எடுத்துத்

காட்டியபடி 1925 ஆம் ஆண்டு வரி விசாரணைக் குழுவின் அறிக்கைக்குப்பின் பல அரசியல் பொருளாதார மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. அப்பொழுது பர்மா, வங்காளம் முழுவதும், பஞ்சாப் முழுவதும், வடமேற்கு எல்லை மாநிலம், பலுசிஸ்தான், சிந்து முதலியவை இந்தியாவில் இருந்தன. அரசர்களின் மாநிலங்கள் அவைகளுக்கெனத் தனியே வரவு செலவுத் திட்டங்களும், வருமான மூலங்களும் கொண்டிருந்தன. அப்பொழுது பொருளாதாரத் திட்டத்தைப்பற்றியோ அல்லது பொதுநல நாட்டைப் பற்றியோ (welfare state) நினைக்கப்படவில்லை. பருத்தி, சணலைத்தவிர, மற்ற ஒழுங்காக அமைக்கப்பட்ட தொழில்கள் அதிக முன்னேற்றம் அடையவில்லை. இந்தியா பெரும்பாலும் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை இறக்குமதி செய்வதிலும், கச்சாப் பொருள்களை ஏற்றுமதி செய்வதிலும் ஈடுபட்டிருந்தது. பொது நிதித்துறையில் மத்திய வருமானங்களுக்குச் சுங்க வரிகள் தலையாய வருவாய் மூலமாகவும், மாநில வருமானங்களுக்கு நில வருமானம் தலையாய வருவாய் மூலமாகவும் இருந்தன. உப்பு வரியும், சாராயத்தின்மீதான ஆயத்தீர்வையும் மிகமுக்கியமான வருவாய் பயக்கும் இனங்களாகும். அப்பொழுது மதுவிலக்குக் கிடையாது; விற்பனை வரியும் இல்லை. வருமானவரி அப்பொழுது இருந்தாலும், வரி வீதங்கள் இப்பொழுதைவிட மிகத் தாழ்ந்து இருந்தன. மேற்கூறப்பட்ட நிலையைப் பெரிதும் மாற்றிப் போர்க்காலத்திலும், போர்க்காலத்திற்குப் பின்னும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இப்பொழுது பர்மா பிரிக்கப்பட்டுவிட்டதாலும், பாகிஸ்தான் ஏற்படுத்தப்பட்டதாலும் இந்தியா பூகோள ரீதியாக மிகச் சிறியதாக ஆகிவிட்டது. இப்பொழுது நாட்டில் பல தொழில்கள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. ஆகவே, நமது பன்னாட்டு வாணிபம் முக்கியமானதொரு மாற்றத்தை அடைந்துள்ளது. சுங்கவரிகள், பெரிதும் விரிவடைந்து கொண்டு செல்லும் வருவாய் மூலமானாலும், ஒப்புமையில் முன்னைவிட முக்கியத்துவத்தில் மிகக் குறைந்துவிட்டது. உப்புவரி நீக்கப்பட்டுவிட்டது. மதுவிலக்கானது அரசியல் சட்டத்தின் ஆணையின்படி நாடு முழுதும் ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கைமட்டுமல்லாமல், முழுதாகவோ அல்லது பகுதியாகவோ பெரும்பாலான மாநிலங்களில் செயல்படுத்தப்பட்ட உண்மையாகும். மாநில அரசாங்கங்களுக்கு விற்பனைவரி தலையான வருமான மூலமாக ஆகிவிட்டது. நில வருமானம் முக்கியத்துவத்தில் குறைந்துவிட்டது. பொதுநல நாட்டுக் கொள்கையை ஒப்புக்கொண்டது முதல் வரிவிதிப்பிலும், முன்னேற்றத்திற்கான செலவிலும் மிகுந்த அதிகரிப்பு ஏற்பட்டிருக்கிறது. நேர்முக வரி, மறைமுகவரி இரண்டுமே அதிகரித்திருந்தாலும் மொத்த வரி வரவில் நேர்முக வரியின் வீதம் 1938-9 ஆம் ஆண்டு 12 சதவீதத்திலிருந்து, இப்பொழுது சுமார் 25 சதவீதத்திற்கு உயர்ந்திருக்கிறது.

**39. வரிதாங்கு வல்லமை :**[1] வரிவிதிப்பிற்குப் பொருளாதாரக் கட்டுப்பாடுகளைத் தவிர, அரசியல், உளவியல், நிர்வாகக் கட்டுப்பாடுகளும் உள்ளன. வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்கும் ஜனநாயக அடிப்படையில் இயங்கும் சமூகத்தில் சிலவரிகளை விதிப்பதில், பொதுவாக மக்களின் இணக்கத்தைப் பெறவேண்டியது வெளிப்படையாக அவசியமானதாகும். வரிப்பளுவை ஏற்றுக்கொள்ள உளச்சூழ்நிலை அமைவதானது, வரிவிதிப்பின் நோக்கங்களைப் புரிந்து பாராட்டுவதையும், பொது நிதிகளை உபயோகிக்கும்பொழுது இருக்கும் திறமை, நாணயம், சிக்கனம் இவைகளின் அளவையும் பொறுத்ததாகும்.

இந்திய வரி வருமானங்கள், நாட்டு வருமானத்தில் 7 அல்லது 8 சதவீதமாகும் எனவும், இந்த வீதம் தென்கிழக்கு ஆசியா உள்பட பல நாடுகளைக் காட்டிலும் குறைவானது எனவும் வரி விசாரணைக்குழு உரைத்தது. கடந்த இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளாக நாட்டின் வரி முயற்சியில் கூடுதல் இல்லை. பண அடிப்படையில், பொது வருமானங்கள் நாட்டு வருமானத்துடன் இணைந்து செல்லுகிறது; ஆனால், அவை இரண்டிலுமே அதிகரிப்பில்லை. நுகர்ச்சித் தரத்தையோ, உற்பத்திக்கான ஊக்கத்தையோ பாதிக்காமல் இந்தியாவில் இன்னும் வரிகள் விதிக்க இடமிருக்கிறது. கூடுதல் வருமானம் அடைய மேற்கொள்ளக்கூடிய முக்கிய வழிகளில் வருமான வரியை அதிகரிப்பது ஒன்று (மாநகராட்சி வரியில் சிறிது குறைப்பதாலும், சேமிப்பு, முதலீடு முதலியவற்றிற்குச் சலுகைகள் அளிப்பதாலும், அப்பளுவை சிறிது நீக்கலாம்.); தேவையான அளவு இப்பொழுது இருக்கும் ஆயத்தீர்வைகளை உயர்த்திப் பல்வேறு வகையான பொருள்கள்மீது விதிக்கலாம். சரியான விலைக் கோட்பாடுகளை மேற்கொள்ளுவதன்மூலம் வரியற்ற வருமானத்தை அதிகரித்தல்; அதிகமில்லாத நில வருமானத் தண்டங்கள்; விவசாய வருமான வரியின் வீதங்களை அதிகப்படுத்துவது, அவ்வரி செயல்படும் நிலப்பரப்பின் அளவை அதிகரிப்பது; சொத்து வரிகளை அதிகமாக மேற்கொள்ளுதல், நாட்டாண்மைக் கழகங்களின் நலனுக்காகச் சொத்து மாறும்பொழுதான வரி விதித்தல்; விற்பனை வரியின் செயலாற்றும் பரப்பை அதிகரித்தல், அவைகளின் வீதங்களை உயர்த்துதல் ஆகியவை வருவாயை அதிகரிக்கும் முறைகளாகும். மேலே கூறப்பட்டதுபோல, வரிப்பளுவைத் தாங்கும் விருப்பம், அரசாங்கம் தனது ஆதாயங்களை உபயோகிக்கும் முறையைப் பொறுத்தது. செலவழிக்கப்படும் இனங்கள் மிகவும் பாராட்டப்படும் நாட்டு நலன்கள்பற்றியதாக இருப்பதுமன்றி, அதில் உச்ச அளவுத் திறமையும், சிக்கனமும் வேண்டும். வரி செலுத்துவதினின்று தப்புவது பெரிய அளவில் பொறுத்துக்கொள்ளப்

[1] Taxation Enquiry Commission Report, vol. 1, pp. 150-52

பட்டால், நாணயம் உள்ள வரி செலுத்துவோனுக்குக்கூட அது ஒரு குறையாகத் தோன்றி, அவனே நாணயம் அற்றவனாக ஆகி விடவும் கூடும்.

40. வரி நிலைப்பாடு: வரிநிலைப்பாட்டைப் பற்றி இதுவரை எந்த விதமான விசாரணையும் செய்யப்படவில்லை. 1924 ஆம் ஆண்டு வரி விதிப்புக் குழு அபிப்பிராய ரீதியான சில முடிவுகளை வழங்கிற்று. மக்களில் எந்த வகுப்பினரும் வரிப்பளுவைக் கொடுமையாக நினைக்கவில்லை எனவும், ஆனால், அதே சமயத்தில் அது சமமற்ற முறையில் பகிர்ந்து அளிக்கப்பட்டிருக்கிறது எனவும் கூறிற்று. பெரிய நிலச்சுவான்தார்கள், கிராம வர்த்தகர்கள் முதலியோர் போன்ற சில வகுப்பினர் மிகச் சுலபமாக விடப்பட்டு விடுகின்றனர். உப்பு வரி, நிலவருமானம், ஆயத்தீர்வைகள், முத்திரை வரிகள் முதலியவை மூலமான பளுவை ஏழை மக்களே சுமக்கின்றனர். 1914 ஆம் ஆண்டிற்குப்பின் போகப்பொருள்கள்மீது விதிக்கப்பட்ட படிப்படியான வருமான வரி, மேல்வரி, சில சிறப்பு இறக்குமதி வரிகள் முதலியன வரி அமைப்பை நேர்மையானதாகச் செய்தது. ஆயினும், கணிசமான அளவில் நேர்மையற்ற தன்மையும் அதில் தொடர்ந்து இருந்தது.

1953 ஆம் ஆண்டு வரி விசாரணைக் குழு, வரி நிலைப்பாட்டினைப் பற்றி ஆராய முற்பட்டபொழுது, 'வழக்கமான நிலைப்பாட்டி'னைப்[1] பற்றிமட்டும் ஆராய்வதோடு நிறுத்திக்கொண்டது. நேர்முக வரிகளின் நிலைப்பாடு அவை யாரிடமிருந்து முதலில் வசூலிக்கப்படுகின்றனவோ அவர்கள் மேல் இருக்கிறது என்பது ஊகம். ஆனால், செயல் விளைவு உடைய நிலைப்பாட்டைக் (இதன் பொருள் என்னவெனில், பளு பல பேர் மேல் மாற்றப்பட்டு முடிவில் எப்படிப் பங்கிடப்படுகிறது என்பது) கண்டுபிடிப்பது மிகக் கடினமான காரியமாகும்; குழு இதனை முயற்சி செய்யவில்லை. சமூகத்தின் பல்வேறு வகுப்பினர் மேல் விழும் வரிப்பளுவையும், குறிப்பிட்ட செலவுத் திட்டங்களால் அவர்களுக்கு ஏற்படும் நன்மையையும் தொடர்புபடுத்திக் காட்டவும் முடியவில்லை. நாட்டில் வரி நிலைப்பாட்டில் கணிசமான வேறுபாடுகள் உள்ளன; ஒரே மாதிரியான வீதங்கள் உள்ள வரிகள் (உதாரணமாக மத்திய அரசாங்க வரிகள்) இருந்தாலும், நுகர்ச்சிச் செலவு மாதிரிகளில், ஒரே வகுப்பில் உள்ளவர்களுக்குக்கூட வேற்றுமைகள் இருக்கலாம். இரண்டாவதாகப் பல்வேறு மாநிலங்களில், தங்கள் எல்லைக்குட்பட்ட வரி வீதங்களில் மாற்றங்கள் ஏற்படலாம். ஒரே மாநிலத்திற்குள் அதே போல, உள்நாட்டு வரிவீதங்கள் மாறுகின்றன. வரி விசாரணைக்குழு, இத்துணைக் குறைபாடுகள் உள்ளமையால், நாட்டின் வரி நிலைப்பாட்டினைப் பற்றிய ஆய்வுரை, வரி நிலைப்பாடு எவ்வாறு

[1] Taxation Enquiry Commission Report, vol. I, Chs. IV and V

பங்கிடப்படுகிறது என்பவைகளை மிகத் திட்டமற்ற முறையில்தான் மதிப்பீடு செய்யமுடியும் என்று கூறியது. தலாவரி, ஒரே மாதிரியாக எப்பொழுதும் கிராமப்புறங்களைவிட நகர்ப்புறங்களில் அதிகமாயிருக்கும் என்பதில் தவறிருக்க முடியாது. மறைமுக வரிகளைப் பொறுத்த வரையில், நகர்ப்புறங்களில் தலாவரி, கிராமப்புறங்களைவிட இரண்டே முக்கால் பங்கு அதிகமாயிருக்கிறது. மத்தியத் தலாவரியில் கிராமப்புறங்களைவிட அது மூன்று மடங்கு அதிகமாயிருக்கிறது. நகர மயமாக்குதல் அதிகமாக ஆகும்பொழுது, தலாவரியும் அதிகரிக்கிறது. இந்த வேற்றுமை கீழ் அல்லது நடுத்தர வருமான வகுப்பினரைவிட மேல் வருமான வகுப்பினரிடையே அதிகமாகக் காணப்படுகிறது. மத்திய ஆயத்தீர்வையில் இந்த கிராமப்புறத்திற்கும், நகர்ப்புறத்திற்கும் உள்ள வேற்றுமை மிகக் குறைவாகும். இறக்குமதித் தீர்வைகளில் அதைவிட அதிகமாகவும், வருமான வரியில் உச்சமாகவும் காணப்படுகிறது. மறைமுக வரிகளின் நிலைப்பாடு சிறிது வளர்வீதத்தில் உள்ளது (மிகக் கீழான வருமான வகுப்பிற்கு 2·2 சதவீதத்திலிருந்து, உச்ச வருமான வகுப்பிற்கு 8·4 சதவீதமாக உயருகிறது). இந்த வளர்வீதம் முக்கியமாக மத்திய அரசாங்க வரிவிதிப்பில்தான் காணப்படுகிறது. மாநில அரசாங்க வரிவிதிப்பில் இது மிகச் சிறிதாக இருக்கிறது. கிராமப்புற மறைமுக வரிவிதிப்பைவிட நகர்ப்புற வரிவிதிப்பு அதிக வளர்வீதத்தில் உள்ளது.

வருமான வரியும் நில வருமானமும் முக்கிய நேர்முக வரிகளாகும். நகர்ப்புறத்தில் வருமானவரி மாதம் ஒன்றுக்கு ரூ. 300-க்கு மேல் வருமானம் உள்ள வகுப்பால் முழுதும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. அதற்கு மாருக நில வருமானம் முழுவதும் கிராமப்புறத்தையே சார்கின்றது. இதன் நிலைப்பாடு மிகச் சுமையற்றது. தேசீய வருமானக் குழு (National Income Committee) அறிக்கையின்படி மொத்த விவசாய உற்பத்தியின் மொத்த மதிப்பு 1950-51ஆம் ஆண்டு ரூ. 4,866 கோடியாகவும், நிகர மதிப்பு ரூ. 4,112 கோடியாகவும், அவ்வருடத்தில் நிலவருமான வசூல்கள் ரூ. 47 கோடியாகவும் இருந்தன. கிராமப்புறங்களில் ஒப்புமையில் இவ்வாறு குறைந்த அளவில் வரி விதிக்கப்படுவதானது நல்ல ஏற்ற வீதத்துடன் விவசாய வருமான வரி விதித்திருக்கும் மாநிலங்களில் சரிசெய்யப்படுகிறது. போருக்கு முன்பிருந்தே மொத்த வரிப்பளு கிராமப் பகுதியைவிட நகர்ப் பகுதியில் மிக அதிகரித்திருக்கிறது. கிராமப்புறத்திற்குள்ளேயோ அல்லது நகர்ப்புறத்திற்குள்ளேயோ பல்வேறு வருமான வகுப்புகளிடையே வருமான மாற்றங்கள் நடைபெற்றிருப்பதுபோல இருந்தாலும், கிராமப்புறத்திலிருந்து நகர்ப்புறத்திற்கோ அல்லது நகர்ப்புறத்திலிருந்து கிராமப்புறத்திற்கோ எவ்விதப் பெரிய வருமான மாற்றமும் நிகழவில்லை.

# 23. பொருளாதாரத் திட்டமும் வேலையின்மையும்

**1. முதல் ஐந்தாண்டுத் திட்டம் :** 1950ஆம் ஆண்டு இந்திய அரசாங்கத்தினால், நாட்டின் வளங்களை 'செயலுரமிக்க முறையிலும் சம நிலையிலும்' உபயோகப்படுத்த ஒரு திட்டத்தை உடனே தயாரிக்க திட்டக்குழு ஒன்று அமைக்கப்பட்டது. 1950ஆம் ஆண்டு ஜூலை மாதம் இக் குழு, காமன்வெல்த் ஆலோசனைக் குழுவின்முன் (Commonwealth Consultative Committee) சமர்ப்பிக்கப்படுவதற்காக, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கான ஓர் ஆறாண்டுத் திட்டத்தைக் குறுகிய காலத்தில் தயாரிக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டது. இத்திட்டம், தெற்கு, தென்கிழக்கு ஆசியக் கூட்டுறவுப் பொருளாதார முன்னேற்றத்திற்கான கொழும்புத் திட்டத்தில் (Colombo Plan for Co-operative Economic Development in South and South-east Asia) சேர்க்கப்பட்டது. 1951ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் வரைசட்டம், 'முடிந்த அளவுக்கு மிகப்பெரிய பொது விவாதத்திற்காக'த் திட்டக் குழுவினால் வெளியிடப்பட்டது. 1952ஆம் ஆண்டு டிசம்பர் மாதம், முடிவுப் பதிப்பு பாராளு மன்றத்தின்முன் சமர்ப்பிக்கப்பட்டது. கீழ்வரும் முக்கிய முன்னேற்ற இனங்களின்கீழ் திட்டம் ரூ. 2,356 கோடியை மொத்த முதலீடாக ஒதுக்கியது.[1]

திட்டத்தின்கீழ்ச் செல்வு இனங்களைத் தீர்மானிப்பதில் எடுத்துக் கொள்ளப்பட்டதாகக் கூறப்படும் காரியங்களாவன : (i) எதிர்காலத் தில் தேவைப்படும் செறிவுமிக்க முயற்சிகளுக்கு அடிப்படையாக, முன்னேற்றத்திற்கான வழியைத் துவக்கவேண்டிய தேவை;

[1] இந்த எண்கள் முதலில் வெளியிடப்பட்டதற்குப்பின் சரிபார்க்கப்பட்டவையாகும். (pp. 3 and 70) Second Five Year Plan, pp. 51-2.

(ii) முன்னேற்றத்திற்கான செலவிற்காக நாட்டில் கிடைக்கக்கூடிய மொத்த வளங்கள் ; (iii) வளர்ச்சியின் வீதத்திற்கும் தனியார், அரசாங்கத் துறைகளிலிருந்து வளங்களுக்கு ஏற்படும் தேவைகளுக்கும் இடையேயுள்ள நெருங்கிய உறவு ; (iv) திட்டம் செயலாற்றத்

| | 1951-6 க்கு மொத்த முதலீடு (ரூபாய்கள் கோடியில்) | மொத்தத்தில் சதவீதம் |
|---|---|---|
| விவசாயமும் சமூக முன்னேற்றமும் | 357 | 15·1 |
| நீர்ப்பாசனம், மின்சாரம், வெள்ளக் கட்டுப்பாடு ... ... ... | 661 | 28·1 |
| போக்கு வரத்து, செய்தித் தொடர்புகள் ... | 557 | 23·6 |
| தொழில், சுரங்கம் ... ... | 179 | 7·6 |
| சமூகப் பணிகள், வீடுகட்டுதல், மறுசீரமைப்பு ... | 533 | 22·6 |
| மற்றவை ... ... ... | 69 | 3·0 |
| மொத்தம் ... | 2,356 | 100·0 |

தொடங்குவதற்குமுன் மத்திய, மாநில அரசாங்கங்கள் ஆரம்பித்த முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றவேண்டிய தேவை; (v) இரண்டாம் உலகப் போரினாலும், பிரிவினையாலும் பொருளாதாரத்திற்கு ஏற்பட்ட பொருத்தக்கேட்டைச் சீரமைக்கவேண்டிய தேவை. திட்டத்தின் மொத்தச் செலவு மத்திய மாநில அரசாங்கங்களுக்கு இடையே பங்கிடப்படவேண்டும். மத்திய அரசாங்கம், இருப்புப் பாதைகள் உள்பட ரூ. 1,374·4 கோடி மொத்த முதலீட்டிற்குப் பொறுப்பு ஆவார்கள்; மாநிலங்கள் ரூ. 982 கோடி செலவழிக்கும் என எதிர்பார்க்கப்பட்டது. பக்கம் 78-ல் அட்டவணை திட்ட முதலீட்டின் முக்கியத்துவத்தைத் தனியார், அரசாங்கத் துறைகளில் உற்பத்திச் சாதனங்களை அதிகரித்ததன்மூலமும், அதன் விளைவாக அதிகரித்

துள்ள உற்பத்தி இயல் தகுதியையும்[1] (production potential) காட்டுகிறது :

| | ரூ. (கோடியில்) |
|---|---|
| மத்திய மாநில அரசாங்கங்களின் பயனுள்ள மூல தனத்தை அதிகரிக்க ... ... ... | 1,199 |
| தனியார் துறையில் பயனுள்ள மூலதனத்தைச் சேர்க்க உதவும் முதலீடு : | |
| (i) விவசாயம், கிராம முன்னேற்றம் இவைகளுக்கான செலவு, பற்றுக்குறையால் துன்புற்று இருக்கும் நிலப் பகுதிகளுக்கான குறிப்பு ஏற்பாடுகளைத் தவிர ... | 244 |
| (ii) போக்கு வரத்துக்கும், தொழிலுக்கும் கடன்கள் ... | 47 |
| (iii) உள்நாட்டு முன்னேற்றத்திற்காக ஏற்பாடுகள் (சமுதாய நலத் திட்டங்கள், உள்நாட்டுப் பணிகள்) ... ... | 105 |
| சமூக மூலதனத்தின்மீது முதலீடு ... | 425 |
| பிரிக்கப்படாத முதலீடு (இல்லாமையால் துன்புற்றிருக்கும் நிலப்பகுதிகளுக்கான ஏற்பாடுகள் உள்பட) ... ... ... | 49 |
| மொத்தம் ... | 2,069 |

[1] முதலாக வந்த முதலீட்டு மதிப்பீட்டின் அடிப்படையில் கணக்கிடப்பட்டது (First Five Year Plan, p. 71).

2. **நிதி மூலங்கள் :** கீழ்வரும் அட்டவணை, திருத்தப்பட்ட திட்டத்தில் கண்டுள்ள நிதி மூலங்களைக் (மத்தியு, மாநிலங்கள்) காட்டுகிறது.[1]

| | ரூ. (கோடியில்) |
|---|---|
| வரவு செலவுத் திட்டத்தின் வளங்கள்— | |
| பொதுத்துறை நிர்வாகத்தினரிடமிருந்து சேமிப்புகள்—நடைமுறை வருமானத்திலிருந்து ... | 599 |
| இருப்புப்பாதைகளிலிருந்து ... ... | 170 |
| கீழ்க்கண்டவைகளிலிருந்து கிடைத்த தனியார் சேமிப்புகள்— | |
| மக்களிடமிருந்து கடன்கள் ... ... | 115 |
| சிறு சேமிப்புகளும் நிதியற்ற கடன்களும் ... | 270 |
| வைப்பு நிதிகளும் மற்றும் பலவகை வளங்களும் | 132·8 |
| மொத்தம் ... ... ... | 1,286·8 |
| முதலீடு ... ... ... | 2,363·4 |
| வளங்களில் துண்டு விழும் பகுதி ... ... | 1,076·6 |

வளங்களில் துண்டு விழும் பகுதி ஓரளவிற்கு வெளி உதவியாலும், ஸ்டெர்லிங் வெளியீட்டாலும், அதிக வரி விதிப்பாலும் நிரப்பப்படும்.

[1] Planning Commission, Progress Report for 1954-5 (May, 1956), p. 22. முன் பக்கத்திலுள்ள எண்ணைவிட, மொத்த முதலீட்டில் ரூ. $6\frac{1}{2}$ கோடி அதிகமாய் இருப்பதைக் காணலாம். இந்தத் திருத்தத்திற்குக் காரணம், திட்டத்தின் முதல் $2\frac{1}{2}$ ஆண்டுகளுக்கு, பல மாநிலங்கள் சேர்ந்து அமைந்த சென்னை மாநிலத்திற்கு அதன் அறிக்கையின்படி, மீதி இருக்கும் சென்னை, ஆந்திரா, பெல்லாரி முதலியவற்றின் எதிர்பார்க்கப்பட்ட மொத்த முதலீட்டைவிட அதிக முதலீடு காட்டப்பட்டதே ஆகும்.

3. எதிர்பார்க்கப்பட்ட விளைவுகள்: முன்னேற்றத்திற்கான செலவு கீழ்க்கண்ட விளைவுகளைக் கொடுக்குமென எதிர்பார்க்கப் பட்டது.[1]

| இனம் | 1950 - 51 | 1955 - 56 |
|---|---|---|
| விவசாயம் — | | |
| உணவுப் பொருள்கள் (மில்லியன் டன்) | 52·7 | 61·6 |
| பருத்தி (இலட்சம் பேல்) ... ... | 29·7 | 42·2 |
| சணல் (இலட்சம் பேல்) ... ... | 33·0 | 53·9 |
| சர்க்கரை (இலட்சம் டன்) ... ... | 56·2 | 63·2 |
| எண்ணெய் வித்துகள் (இலட்சம் டன்) ... | 51·0 | 55·0 |
| நீர்ப்பாசனம், மின்சாரம்— | | |
| பெரிய, சிறிய நீர்ப்பாசனம் (மில்லியன் ஏக்கர்) ... | 50·0 | 69·7 |
| மின்சார விசை (மில்லியன் கிலோவாட் நிறுவப்பட்ட திறன்) ... ... | 2·3 | 3·5 |
| தொழில்கள்— | | |
| வார்ப்புத் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய வார்ப்பிரும்பு (இலட்சம் டன்) ... | 3·5 | 6·6 |
| முழு எஃகு (இலட்சம் டன்) ... ... | 9·8 | 13·7 |
| சிமெண்டு (இலட்சம் டன்) ... ... | 26·9 | 48·0 |
| அலுமினியம் (ஆயிரம் டன்) ... ... | 3·7 | 12·0 |
| உரங்கள் (ஆயிரம் டன்)— | | |
| அம்மோனியம் சல்பேட் ... ... | 46·3 | 450·0 |
| சூபர் பாஸ்பேட் ... ... | 55·1 | 180·0 |
| இருப்புப்பாதை எஞ்சின்கள் (எண்கள்) | 3·0 | 150·0 |
| இயந்திரக் கருவிகள் (ஆயிரம்) ... | 1·1 | 4·6 |
| திரவப் பெட்ரோலியம் (மில்லியன் கேலன்) ... | n. a. | 403·0 |
| நிலக்கீல் (ஆயிரம் டன்) ... ... | n. a. | 37·5 |
| பருத்தி உற்பத்திப் பொருள்கள்— | | |
| நூல் (மில்லியன் பவுண்டு)... ... | 1,179·0 | 1,640·0 |
| ஆலைத்துணி (மில்லியன் கஜம்) ... | 3,718·0 | 4,700·0 |
| கைத்தறி (மில்லியன் கஜம்)... ... | 810·0 | 1,700·0 |

[1] First Five Year Plan, pp. 75-7; சில மதிப்பீடுகள் பின் திருத்தப்பட்டன.

| இனம் | 1950 - 51 | 1955 - 56 |
|---|---|---|
| சணல் உற்பத்திகள் (ஆயிரம் டன்) ... | 892·0 | 1,200·0 |
| விவசாய இயந்திரங்கள்— | | |
| விசையால் இயங்கும் குழாய்கள் (ஆயிரம்) ... ... ... | 34·3 | 85·0 |
| டீசல் எஞ்சின்கள் (ஆயிரம்) ... ... | 5·5 | 50·0 |
| சைக்கிள்கள் (ஆயிரம்) ... ... | 101·0 | 530·0 |
| விசைச் சாராயம் (மில்லியன் காலன்) ... | 4·7 | 18·0 |
| போக்குவரத்து— | | |
| கப்பல்கள் (டன்னில்)— | | |
| கரைக் கப்பல்கள் (ஆயிரம் டன்) ... | 211·0[2] | 315·0[2] |
| கடல் கடக்கும் கப்பல்கள் (ஆயிரம் டன்) ... ... ... | 173·5 | 283·5 |
| சாலைகள்— | | |
| நாட்டின் நெடுஞ்சாலைகள் (ஆயிரம் மைல்) ... ... ... | 11·9 | 12·5 |
| அரசாங்கச் சாலைகள் (ஆயிரம் மைல்) ... | 17·6 | 20·6 |
| கல்வி— | | |
| மாணவர்கள்— | | |
| ஆரம்பப் பள்ளிகளில் (இலட்சம்) ... | 151·1 | 187·9 |
| இளைய ஆதாரப்பள்ளிகளில் (இலட்சம்)... | 29·0 | 52·8 |
| உயர் நிலைப் பள்ளிகளில் (இலட்சம்) ... | 43·9 | 57·8 |
| தொழில் பள்ளிகளில் (ஆயிரம்) ... | 14·8 | 21·8 |
| மற்றத் தொழில், வாழ்க்கைத் தொழில், பயிற்சிப் பள்ளிகள் (ஆயிரம்) ... | 26·7 | 43·6 |
| சுகாதாரம்— | | |
| மருத்துவ மனைகள் (ஆயிரம் படுக்கைகள்) ... ... ... | 106·5 | 117·2 |
| மருந்தகங்கள் (எண்ணிக்கை)— | | |
| நகரங்களில் ... ... ... | 1,358·0 | 1,615·0 |
| கிராமப்புறங்களில் ... ... | 5,229·0 | 5,840·0 |
| முன்னேற்றத்திற்கான நிறுவனங்கள்— | | |
| பஞ்சாயத்துகள் (ஆயிரங்களில்) ... | 55·1 | 69·1 |
| கூட்டுறவுச் சங்கங்கள்— | | |
| கடன் சங்கங்கள் (ஆயிரம்) ... ... | 87·8 | 112·5 |

[2] ஆனால், 17 ஆம் பிரிவைக் காண்க.

| இனம் | 1950 - 51 | 1955 - 56 |
|---|---|---|
| விற்பனைச் சங்கங்கள் (ஆயிரம்) ... ... | 14·7 | 20·7 |
| பலநோக்குச் சங்கங்கள் (ஆயிரம்) ... | 31·5 | 40·5 |
| ஏற்றப்பாசன சங்கங்கள் (எண்ணிக்கை) ... | 192·0 | 514·0 |
| கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் (எண்ணிக்கை) ... ... ... | 352·0 | 975·0 |
| மற்றவை (ஆயிரங்களில்) ... ... ... | 27·3 | 35·8 |
| மொத்தம் (ஆயிரங்களில்) ... | 161·9 | 211·1 |

1950 - 51ஆம் ஆண்டு நாட்டு வருமானமாகிய மதிப்பிடப்பட்ட ரூ. 9,000 கோடி, 1955 - 56ஆம் ஆண்டு ரூ. 10,000 கோடியாக (நிலை பெற்ற விலைகளில்) உயரும் என எதிர்பார்க்கப்பட்டது. இந்த அதிகரிப்பு 11 சதவீதத்திற்கு அதிகத்தைக் குறிக்கும்.

பொருளாதார முன்னேற்றத்தின் காரணமாகத் தனியார் துறையிலும், வர்த்தகங்களிலும் ஏற்பட்ட வேலையைத் தவிர, திட்டம், 33 இலட்சம் பேருக்கு வேலை தரும் என எதிர்பார்க்கப்பட்டது.[1]

| தொழில் | வேலை கிடைத்த அதிகப்பேர்கள் (இலட்சத்தில்) |
|---|---|
| தொழில் (சிறுபான்மைத் தொழில் உள்பட) ... | 4·00 |
| பெரிய நீர்ப்பாசனமும், மின்சாரத் திட்டங்களும்... | 2·50 |
| விவசாயம் ... ... ... ... | 23·00 |
| கனிப்பொருள்கள் ... ... ... | 0·04 |
| கட்டடங்கள் (தனியானவை, பொதுவானவை)... | 1·00 |
| சாலைகள் ... ... ... ... | 2·00 |
| மொத்தம் ... | 32·54 |

**4. பல தலைப்புகளின்கீழ்த் திட்டங்கள்:** 76ஆம் பக்கத்தில் கூறப்பட்ட பல தலைப்புகளின்கீழ் வரும் திட்டங்களைப்பற்றி இப்போது சுருக்கமாகப் பார்ப்போம்.

[1] First Five Year Plan, p. 654.

விவசாயமும், சமுதாயநல முன்னேற்றமும் : ஒதுக்கப்பட்ட மொத்த ரூ. 337 கோடி கீழ்க்கண்டவாறு செலவிடப்படும் :

| | ரூ. (கோடியில்) |
|---|---|
| விவசாயம் ... ... ... ... ... | 197·9 |
| கால்நடை பேணுதல் (பால்பண்ணை, பால் அளிப்பு உள்பட) ... ... ... ... ... | 21·9 |
| காடுகள் ... ... ... ... ... | 10·4 |
| கூட்டுறவு ... ... ... ... ... | 6·8 |
| மீன் பிடிக்கும் தொழில்கள் ... ... ... | 4·0 |
| கிராமாந்தர முன்னேற்றம் ... ... ... | 11·4 |
| சமுதாயநலத் திட்டங்கள் ... ... ... | 90·0 |
| உள்நாட்டுப் பணிகள் ... ... ... ... | 15 0 |
| மொத்தம் ... | 357·4 |

கிராம மக்களிடையே கூட்டுறவையும் தன்னுதவியையும் வளர்க்க, விவசாயத்திற்கு அடுத்தபடியாக சமுதாய நலத் திட்டங்களுக்கே மிக அதிகமாகச் செலவிடப்படுகிறது என்பதைக் காணலாம். நில உடைமைகளின் உச்சவரம்பையும் கீழ்வரம்பையும் நிர்ணயிப்பது, விவசாயிகளுக்கு உரிமைக் காலத்தை (tenure) உறுதிப்படுத்துவது, படிப்படியாக உரிமைகளை விவசாயிகளுக்கு மாற்றுவது போன்ற காரியங்களைப்பற்றிய நிலச் சீர்திருத்தங்களும் இத்திட்டத்தின் ஒரு முக்கியப் பகுதியாகும்.

போக்குவரத்தும் செய்தித் தொடர்புகளும் : கீழ்வரும் எண்கள், போக்குவரத்து, செய்தித் தொடர்புகள்மீதான மொத்த முதலீடு ரூ. 557 கோடி பகிர்ந்து அளிக்கப்பட்டிருக்கும் விதத்தைக் காட்டுகிறது.[1]

| | ரூ. (கோடியில்) |
|---|---|
| இருப்புப் பாதைகள் ... ... ... | 267·5 |
| சாலைகள் ... ... ... | 132·5 |
| சாலைப் போக்குவரத்து ... ... ... | 8·9 |
| துறைமுகங்கள் ... ... ... ... | 41·9 |
| கப்பல் தொழில் ... ... ... ... | 21·1 |
| படைத்துறை சாராத ஆகாயப் போக்குவரத்து ... | 26·6 |
| தபால் தந்திகள் ... ... ... ... | 50·0 |
| ஒலிபரப்பு ... ... ... ... | 6·3 |
| மற்றவை ... ... ... ... | 1·8 |
| மொத்தம் ... | 556·6 |

[1] அத்தியாயம் 16-ல் காட்டப்பட்ட தற்காலிக ஏற்பாட்டிலிருந்து இவ்வெண்கள் சிறிது மாறுபடுகின்றன.

இச் செலவின் பெரும்பகுதி இருப்புப்பாதைகளின் உடனடியான பிரச்சினைகளான புனரமைப்பு, திரும்ப நிர்மாணம் செய்தல் ஆகியவைகளில் இருந்தது. இந்த முதலீடானது இருப்புப்பாதைகளை மறுபடியும் அமைப்பதிலான கடன்களைச் சரி செய்யவும், பொருளாதார அமைப்பின் மற்றத் துறைகளுடைய முன்னேற்றத்தால் இருப்புப்பாதைப் பணிகளுக்கான தேவைகள் அதிகரித்ததை, குறைந்தபட்ச சாதனங்களைக்கொண்டு சரிக்கட்டவும் உபயோகிக்கப்பட்டது. மொத்த இருப்புப்பாதை மைல்களை அதிகரிப்பதைத் தவிர, எஞ்சின்களையும், பொருள்களை ஏற்றிச் செல்லக்கூடிய பெட்டிகளையும், பிரயாணிகள் பெட்டிகளையும், மற்றச் சாதனங்களையும் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்வதற்கான திட்டத்தையும் அது கொண்டிருந்தது. 101ஆம் பக்கத்திலுள்ள அட்டவணையில் காட்டப்பட்டுள்ளபடி, 1950-51ஆம் ஆண்டு முதல் 1955-6ஆம் ஆண்டுக்குள் உற்பத்தி கீழ்க்காணுமாறு அதிகரிக்கவேண்டும்: எஞ்சின்கள் 3-லிருந்து 150; வாகன வண்டிகள் 479-லிருந்து 4,380; பொருள்களை ஏற்றிச் செல்லும் வண்டிகள் 2,924-லிருந்து 30,000. பிரயாணிகளின் மொத்தப் பிரயாண மைல்கள் 1950-51-ல் 95 மில்லியனிலிருந்து, 1955-6 ஆம் வருடம் 108 மில்லியனுக்கு அதிகரிக்கவேண்டும்; அதே ஆண்டுகளில் மொத்தச் சரக்கு 91 மில்லியன் டன்னிலிருந்து 120 மில்லியனுக்கு அதிகரிக்க வேண்டும்.

கப்பல் தொழிலுக்கான இலக்கு, இந்தியக் கப்பல்களின் மொத்த டன் 3,84,000-லிருந்து 6,00,000-க்கு அதிகரிக்கவேண்டும். சாலைகளுக்கான திட்டம் ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்ட சாலைகளை முடிக்கவும், 450 மைல்களுக்குப் புதுச் சாலைகளை அமைக்கவும், 48 பெரிய பாலங்களையும், பெரிய எண்ணிக்கையில் சிறிய பாலங்களையும் கட்டவும், இப்பொழுது இருக்கும் சுமார் 2,200 மைல் சாலைகளைச் சீர்படுத்தவும் ஏற்பாடு செய்தது.[1] இப்பொழுது இருக்கும் ஆகாயப் போக்குவரத்துக் கம்பெனிகள் பொருளாதார ரீதியில் தனி அலகுகளாக (units) இயங்கமுடியாது. ஆகையால், அவைகள் ஒரே அலகாக ஒன்ருக்கப்படவேண்டுமென அக்குழு யோசனை கூறியது. இப்பொழுது இருக்கும் கம்பெனிகளுக்கு இழப்பீடு அளிக்கவும், புது விமானங்களை வாங்கவும் ரூ. 9·5 கோடி திட்டத்தில் ஒதுக்கப்பட்டது. 2,000 பேருக்குமேல் மக்கள் தொகையுள்ள ஒவ்வொரு கிராமத்திலும், ஓர் அஞ்சல் அலுவலகத்தை ஏற்படுத்தவும், பெரிய நகரங்களுக்குத் தொலைபேசி வசதியை விரிவாக்கவும் அக்குழு ரூ. 50 கோடியைத் தனியாக ஒதுக்கியது.

[1] First Five Year Plan, p. 480.

**நீர்ப்பாசனமும் மின்சாரமும்:** நீர்ப்பாசனத்தின்கீழ் இருக்கும் நிலப்பரப்பை 50 மில்லியனிலிருந்து 66·9 மில்லியன் ஏக்கர்களாக அதிகரிக்க எண்ணப்பட்டது. ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களை முடிக்கவும், திட்ட காலத்தில் நீர்ப்பாசனத்தின் மீது ரூ. 401 கோடியைச்[1] செலவழிக்கவும் திட்டம் விரும்பியது. இத் திட்டங்கள் எப்படி அமைக்கப்பட வேண்டுமென்றால், நீர்ப்பாசனம், மின்சாரம் இவைகளின் பலன்கள் நிதானமாகவும் படிப்படியாகவும் சேரவேண்டும். திட்டத்தில் சிறு நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முக்கியமாக இடமளிக்கப்பட்டன. இச் சிறு திட்டங்களால் 10 மில்லியன் ஏக்கர்களுக்கும், பெரிய நடுத்தரத் திட்டங்களால் 6·9 மில்லியன் ஏக்கர்களுக்கும் நீர்ப்பாசன வசதிகள் அளிக்கப்படுமென எதிர்பார்க்கப்பட்டது; மொத்த நீர்ப்பாசன நிலப்பரப்பு 1951 ஆம் ஆண்டு 16 சதவீதத்திலிருந்து 1956ஆம் ஆண்டு 20 சதவீதத்திற்கு உயர்த்தப்படும்.

ரூ. 260 கோடி முதலீட்டின் மூலம் மின்சார உற்பத்தித் திறனை 2·3 மில்லியன் கிலோவாட்டிலிருந்து 3·5 மில்லியன் கிலோவாட்டிற்கு அதிகரிக்கத் திட்டமிடப்பட்டிருந்தது. எப்பொழுதும் வளர்ந்துகொண்டே போகும் நகர்ப்புறங்களின் மின்சாரத் தேவைகளைத் தவிர, 5,000-லிருந்து 20,000 வரை மக்கள் தொகையுள்ள கிராமங்களுக்கு மின்சார வசதிவிரிவைத் திட்டம் நோக்கமாகக் கொண்டது.

**தொழில்:** இந்தியா பிரதானமாக ஒரு விவசாய நாடாக இருப்பதால், முதலீட்டில் ஒரு பெரும் பகுதி விவசாயத்திற்கு ஒதுக்கப்படுவது இயல்பானது; தொழில் முன்னேற்றத்திற்கு 7·6 சதவீதம் தான் (ரூ. 179 கோடி) விடப்பட்டது. தொழில் முன்னேற்றத்திற்கு அக் குழு கீழ்க்கண்ட ஆலோசனைகளை முதன்மை வரிசையாகக் கூறியது: (i) முதலீட்டுக்குரிய பண்டங்கள் உற்பத்தி செய்யும் தொழில்களான சணல், ஒட்டுப் பலகை முதலியவையும், நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் தொழில்களான பருத்தித் துணிகள், சர்க்கரை, சோப்பு, வனஸ்பதி முதலியவையும் இப்பொழுது இருக்கும் திறனை முழுவதும் உபயோகப்படுத்துவது; (ii) முதலீடு, முதலீட்டுக்குரிய பண்டங்கள் உற்பத்தி செய்யும் தொழில்கள், உதாரணமாக இரும்பு, எஃகு, அலுமினியம், சிமெண்டு, உரங்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள், இயந்திரச் சாதனங்கள் ஆகியவற்றின் திறனை அதிகரித்தல்; (iii) முதலீட்டுச் செலவு மேற்கொள்ளப்பட்டு ஏற்கெனவே ஆரம்பித்துள்ள தொழில் அலகுகளை முடித்தல்; (iv) புதுத்

[1] வெள்ளக் கட்டுப்பாடு, மற்றும் பரிசோதனை நிலையிலிருக்கும் திட்டங்களுக்கு ரூ. 17 கோடி உள்பட.

தொழில்களை நிறுவுதல், உதாரணமாக ஜிப்சத்திலிருந்து (gypsum) கந்தகம் தயாரித்தல்.

மத்திய, மாநில அரசாங்கங்களினால் கட்டுப்படுத்தப்படும் தொழில் திட்டங்களுக்காக ரூ. 94 கோடியைத் திட்டம் ஒதுக்கியது. ஒரு புது இரும்பு, எஃகு திட்டத்திற்காக, ஆறு வருடங்கள்மீது பரவிய விதத்தில் ரூ. 80 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால், திட்டத்தின் காலவரைக்குள் ரூ. 15 கோடி அரசாங்கத்தினால் செலவழிக்கப் படவேண்டியதாயிருந்தது; உள்நாட்டு, அந்நிய மூலதனங்க[ள்] பங்கெடுத்துக்கொள்ளுவதன்மூலம், இன்னொரு ரூ. 15 கோடி கிடைக்கப்பெறும். ஒழுங்காக அமைக்கப்பட்ட 42 தொழில்களுக்கு, அத் தொழில்களின் பிரதிநிதிகளைக் கலந்து ஆலோசித்து, விவரங்கள் அடங்கிய திட்டத்தை அக்குழு தயாரித்தது. ஐந்து ஆண்டுக் கால வரையில் தனியார்துறையில் ரூ. 233 கோடி முதலீடு செய்யப்படு மென எதிர்பார்க்கப்பட்டது; இதில் 80 சதவீதம், முதலீடு—முதலீட்டுக்குரிய பண்டங்கள், உற்பத்தி செய்யும் தொழில்கள், முக்கியமாக இரும்பு, எஃகு திட்டங்கள், எண்ணெய் சுத்தம் செய்யும் சாலைகள், சிமெண்டு, அலுமினியம், உரங்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள், விசைச் சாராயம் முதலியன உற்பத்தி செய்யும் தொழிற் சாலைகள்மீது செலவழிக்கப்படும் என எதிர்பார்க்கப்பட்டது.

1948ஆம் ஆண்டு, தொழில் கொள்கைத் தீர்மானத்தில் (Industrial Policy Resolution) தொழில் முன்னேற்றத்தின் நோக்கங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது. தனியார் துறையின்மேல் செயலுரமிக்க கட்டுப்பாட்டைச் செயலாற்ற, 1951[1] ஆம் ஆண்டு, தொழில் (முன்னேற்றம், கட்டுப்பாடு) சட்டத்தின் கீழ் [Industries (Development and Regulation) Act 1951] அனுமதி வழங்கும் முறை புகுத்தப்பட்டது. தொழில்கள் மூன்று பரந்த இனங்களாகப் பிரிக்கப்பட்டன: (i) அரசாங்கத்தின் சர்வாதீனமாகக்கூடிய போர்க் கருவிகள் தளவாடங்கள் உற்பத்தி, அணுசக்தி, ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்களும் இருப்புப்பாதைகளும்; (ii) இரும்பு, எஃகு, விமான உற்பத்தி, தொலைபேசி, தந்தி, கம்பியில்லாத் தந்தி, கப்பல் தொழில், கனிவகை எண்ணெய் முதலியன. இவைகள் அரசாங்கத்தால் கவனமாகக் கட்டுப்படுத்தப்படவேண்டியவை; (iii) தனியார் முயற்சியால் முன்னேற்றமடையவேண்டிய மற்றத் தொழில்கள். தொழில்களைக் கட்டுப்படுத்துவதற்காக, எந்தத் தொழில் நிறுவனமாவது, திறமையாக இயங்கவில்லையானாலும், அல்லது பொது நலத்திற்கு விரோத

[1] இந்த அத்தியாயத்தின் 41, 42ஆவது பிரிவுகளில் 1948, 1956ஆம் ஆண்டுகளின் தொழிற்கொள்கைத் தீர்மானங்களைப்பற்றி விவரமாகக் கூறப்பட்டுள்ளது. பிரிவு 42ஐயும் பார்க்க.

மாக இயங்கினாலும், அதை அரசாங்கம் தனதாக்கிக் கொள்ளும் உரிமையை வைத்துக்கொண்டது.

சிறுபான்மைத் தொழில்கள், கிராமத் தொழில் முன்னேற்றத்திற்காகத் திட்டம் ரூ. 30 கோடியை ஒதுக்கிற்று; இந்தத் திட்டம் கைத்தறி நெசவு, காதி, கிராமத் தொழில்களான நெல்குத்தல், தாவர எண்ணெய், தீப்பெட்டி உற்பத்தி, கைத்தொழில்கள், பட்டு, பட்டுப்புழு வளர்த்தல், கயிறு திரித்தல் முதலியவற்றைப்பற்றியதாகும். கிராமத்தைத் தொழில்மயமாக்கும் முயற்சியில் மாற்றத்தை விளைவிக்கச் சிறுபான்மைத் தொழில்களின் முன்னேற்றம் இத் திட்டத்தில் சேர்க்கப்பட்டது. தேவைகள் முன்னேறும்பொழுதும், தொழில் முறைகள் மேம்பாடு அடையும்பொழுதும் சாதாரணக் கைத்தொழில்கள், சிறுபான்மைத் தொழில்களாக வளரமுடியும். ஒருவகையில் விவசாயத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டதும், மறு பக்கத்தில் பெருவாரித் தொழிலோடு நெருங்கிய இணக்கம் உடையதுமான திறமையுள்ள, பரவலான துறையை ஏற்படுத்தும் நோக்கத்தோடு, ஏற்கெனவே இருக்கும் கிராமத் தொழில்களை ஒழுங்குபடுத்தி அமைக்க அரசாங்கம் உறுதியான ஏற்பாடுகளை மேற்கொள்ள முடிவு செய்தது.

**சமூகப் பணிகள்:** கீழ்வரும் அட்டவணையில் இந்தப் பெரிய தலைப்பின்கீழ் வரும் முக்கிய நடவடிக்கைகளைக் காணலாம்.

1951ஆம் ஆண்டு மிகக் கீழாக இருந்த 17·2 மொத்த எழுத்தறிவு சதவீதத்தை அதிகரிக்கக் கல்வித் திட்டம் அமைக்கப்பட்டது. சமூகத்தின் எல்லா நிலைகளிலும், எல்லா வகுப்பினருக்கும் போதிய அளவு கல்வி வசதிகள் அளிக்க நினைத்தது; கிராமப் புறங்களுக்கும் நகர்ப் புறங்களுக்கும் உள்ள வேற்றுமைகளைக் குறைக்கவும், வீணாவதைத்

| | ரூ. (கோடியில்) |
|---|---|
| கல்வி ... ... ... ... | 169[1] |
| சுகாதாரம் ... ... ... ... | 140 |
| வீடு கட்டுதல் ... ... ... ... | 49 |
| பின்தங்கிய வகுப்பினர், தாழ்த்தப்பட்டவகுப்பினர் முதலியோரின் நலன் ... ... | 32 |
| தொழிலாளர், அவர்களுடைய நலன்... ... | 7 |
| மறுசீரமைப்பு ... ... ... ... | 136 |
| மொத்தம் ... | 533 |

1 திட்டம் முதலில் வெளிவந்தபின் இந்த எண்களும், மற்ற எண்களும் திருத்தப்பட்டன.

தடுத்துப் போதிய அளவு தொழில்துறை, வாழ்க்கைத் தொழிற்கல்வி அளிக்கவும் முற்பட்டது.

சுகாதார நலத்திட்டம் நகரங்களிலும் கிராமங்களிலும், அதிக மருத்துவ மனைகள், மருந்தகங்கள் ஆகியவற்றின் பெருக்கத்தையும் கிராம மன்றங்களிலிருந்து (dais) முழுப் பயிற்சிபெற்ற மருத்துவர்கள்வரை பயிற்சிபெற்ற பணியாளர்களை அதிகமாக்குவதையும் உள்ளடக்கி இருந்தது. மருத்துவக் கல்வி நிறுவனங்களை 16 சதவீதம் (1950 - 51 ஆம் ஆண்டு 8,600-ல் இருந்து 1955 - 56 ஆம் ஆண்டு 10,000) அதிகமாக்கவும், படுக்கை எண்ணிக்கையை 4 சதவீதம் (1950 – 51 ஆம் ஆண்டு 1,13,000-ல் இருந்து 1955 - 6 ஆம் ஆண்டு 1,17,222) அதிகரிக்கவும் திட்டமிடப்பட்டது. கிராம மக்களுக்கு வேண்டிய மருத்துவ வசதிகளை அளிக்க 700-க்கும் மேற்பட்ட சுகாதார அலகுகளை (units) ஏற்படுத்தினர். முன்னேற்றத் திட்டத்தில் உணவு ஊட்டம், குடும்பக் கட்டுப்பாடு, சுகாதாரம், சுகாதாரக் கல்வி முதலியனவும் இருந்தன.

வீடு கட்டும் திட்டத்தில், தொழிலாளர்களுக்கான வீடுகள் கட்டுதல், குறைந்த செலவில் வீடு கட்டுதல், கூட்டுறவு முறையில் வீடு கட்டுதல், கிராமப்புற வீடு அமைத்தல் முதலியன முக்கியமாகும். மக்கள்தொகை வளர்ச்சி (33 சதவீதம்), மதிப்பிறக்கம் (1 சதவீதம்), புதுப்பித்தல் (11 சதவீதம்) முதலியவற்றை எடுத்துக் கொண்டு பார்க்கும்பொழுது, 1951 ஆம் ஆண்டு முதல் 1961 ஆம் ஆண்டு வரை, 8·9 மில்லியன் வீடுகள் நகர்ப்புறங்களில் மாத்திரம் தேவைப்படும் என மதிப்பீடு செய்யப்பெற்று, கிராமப் புறங்களில் மிகப்பெரிய காரியமான 54 மில்லியன் வீடுகளைத் திருத்திக் கட்டி, அவைகளைக் குடியிருப்பதற்கு ஏற்றவாறு அமைக்க இத் திட்டம் விரும்பியது.

தாழ்த்தப்பட்ட குடியினர், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மற்றப் பின்தங்கிய வகுப்பினர் முதலியோருடைய நிலைகளில் முன்னேற்றம் காண, தீண்டாமையை அகற்றுதல், குற்றச் சார்புள்ள மற்றப் பின்தங்கிய வகுப்புகளை மறு சீரமைப்புச் செய்தல், கல்வி வசதிகள் அளித்தல், உதவிச் சம்பளம் தருதல், வாழ்க்கைத் தொழில் பயிற்சிக் கூடங்கள் அமைத்தல், குடிசைத் தொழில்களை நிறுவுதல் முதலியன கையாளப்பட்டன.

தொழிலாளர் நலன் என்ற பொதுத் தலைப்பில் கீழ்க்கண்ட காரியங்களை இத் திட்டம் செய்வது என முடிவாயிற்று. வேலைக்குத் தகுந்த நல்ல சூழ்நிலைகளை எவ்வாறு ஏற்படுத்துவது, தகுந்த

ஊதியம், தகராறுகளைத் தீர்ப்பதற்கான ஏற்பாடுகள், வருங்கால வைப்புத் திட்டம் (provident scheme), வீடு கட்டுதல், பயிற்சி அளித்தல், தொழிலாளர் சங்க அலுவல்கள். நாடு பிரிக்கப்பட்ட பொழுது, பெருந்தொகையான மக்கள் அவர்கள் வீடுகளிலிருந்து வெளியேறும்படி நேர்ந்ததால், அவர்களின் மறு சீரமைப்புப் பிரச்சினையும் கவனிக்கப்படவேண்டியதாயிருந்தது. 7·5 மில்லியன் இடம் பெயர்ந்த மக்கள் எங்காவது குடியேற்றப்பட்டு, அவர்களுக்கு வாழ்க்கைவசதிகள் அளிக்கப்படவேண்டி இருந்தது. இப் பிரச்சினையைத் தீர்ப்பதுகூட வீடு கட்டுதல், சிறுபான்மைத் தொழில்களை நிறுவுவதில் உதவி அளித்தல் முதலியவைகளைச் சார்ந்ததாய் இருந்தது.

5. **முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் சாதனைகள்:** பொதுவாகப் பேசுங்கால், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றிகள் திருப்திகரமானவை. திட்டக் காலவரையில் விவசாய உற்பத்தி 20 சதவீதமும், தொழில் உற்பத்தி 25-விருந்து 30 சதவீதம் வரையும் அதிகரித்தன. மொத்த விற்பனை விலைகள் 13 சதவீதம் குறைந்தன; தொழிலாளர்களின் வாழ்க்கைச்செலவுக் குறியீட்டு எண் 5 சதவீதம் குறைந்தது. 1950-51-லிருந்த நாட்டு வருமானமான ரூ. 9,110 கோடியையும், 1952-3 ஆம் ஆண்டு விலைகளின் அடிப்படையில் கணக்கிடப்பட்ட 1955-6 ஆம் ஆண்டின் நாட்டு வருமான மதிப்பீடான ரூ. 10,800 கோடியையும் ஒப்பிடும்பொழுது, நாட்டு வருமானம் 18 சதவீதம் அதிகரித்தது. 1955 - 6 ஆம் ஆண்டின் இறுதியில் இருந்த சிறிய பண வீக்கத்திற்கான அறிகுறிகளைத்தவிர, பணவீக்கம் இல்லை. திட்டக் காலவரையில் மொத்தம் மதிப்பிடப்பட்ட முதலீடு ரூ. 3,100 கோடி ஆகும். நாட்டு வருமானத்தின் வீதமாக முதலீட்டுத் தொகையைப் பார்க்கும்பொழுது, 1950 - 51ஆம் ஆண்டு 4·94 சதவீதமாக இருந்தது. 1955 - 6 - ல் 7·31 சதவீதமாக ஆகியுள்ளது. அதே ஆண்டுகளில் நாட்டு வருமானத்தின் வீதமாக உள்நாட்டுச் சேமிப்பைப் பார்க்கும்பொழுது 4·98 சதவீதத்திலிருந்து 7·00 சதவீதமாக உயர்ந்துள்ளது.[1]

6. **முதல் திட்டத்தின் செலவு:** திட்டத்தின் சரிபார்க்கப்பட்ட முதலீடான ரூ. 2,356 கோடிக்குப் பதிலாக, உண்மையாக ஆன செலவு ரூ. 2,114 கோடியாகும்; ஆகவே, ரூ. 242 கோடி துண்டு விழுந்தது. இது ஏன் ஏற்பட்டது என்றால் முதல் இரண்டு ஆண்டுகளில், திட்டத்தின் பல அம்சங்கள் நிறைவேற்றப்பட முடியவில்லை.

[1] Reserve Bank of India, Report on Currency and Finance 1955-6, pp. 7 and 85-7.

## முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் செலவுகள்

(எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிக்கின்றன.)

| இனங்கள் | மத்திய அரசாங்கம் | | மாநில அரசாங்கங்கள் | |
|---|---|---|---|---|
| | உண்மையான செலவு | திட்டமிடப் பட்ட செலவு (மாற்றங்கள் உள்பட) | உண்மையான செலவு | திட்டமிடப் பட்ட செலவு (மாற்றங்கள் உட்பட) |
| **விவசாயமும் சமூகநல முன்னேற்றமும் :** | | | | |
| விவசாயம் ... | 75·5 | 78·2 | 109·7 | 119·7 |
| கால்நடை பேணுதல் (பால் பண்ணை, பால் வழங்குதல் உள்பட) ... | 4·1 | 3·1 | 14·9 | 18·8 |
| காடுகள் ... | 2·8 | 1·0 | 8·6 | 9·4 |
| கூட்டுறவு ... | 0·3 | 0·5 | 4·9 | 6·3 |
| மீன்பிடி துறை ... | 1·0 | 1·0 | 2·5 | 3·0 |
| கிராம முன்னேற்றம் ... | — | — | 10·1 | 11·4 |
| சமூதாய நல முன்னேற்றம் | 39·9 | 90·0 | — | — |
| உள்நாட்டுப் பணிகள் ... | 14·0 | 15·0 | — | — |
| மொத்தம் ... | 137·7 | 188·9 | 150·8 | 168·6 |
| **நீர்ப்பாசனமும் மின்சாரமும்:** | | | | |
| பல நோக்கு திட்டங்கள்... | 283·6 | 255·9 | — | — |
| நீர்ப்பாசனத் திட்டங்கள்.. | — | — | 193·1 | 208·6 |
| மின்சாரத் திட்டங்கள் ... | — | — | 175·9 | 179·8 |
| மொத்தம் ... | 283·6 | 255·9 | 369·0 | 388·4 |
| **போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் :** | | | | |
| இருப்புப்பாதைகள் ... | 267·5 | 267·5 | — | — |
| சாலைகள் ... | 36·4 | 41·2 | 101·9 | 91·3 |
| சாலைப் போக்குவரத்துகள் | 1·9 | — | 10·3 | 8·9 |
| கப்பல் கட்டுதல் ... | 21·3 | 21·1 | — | — |
| துறைமுகங்கள் ... | 34·3 | 40·0 | 1·9 | 1·9 |
| உள்நாட்டு நீர்வழிப்பாதைகள் ... | 0·4 | 0·2 | — | — |
| சிவில் ஆகாயப் போக்குவரத்து ... | 26·8 | 26·6 | — | — |
| தபால், தந்திகள் ... | 41·1 | 50·0 | — | — |
| ஒலி பரப்பு ... | 5·4 | 6·3 | — | — |
| வானிலை ஆராய்ச்சித் துறை ... | 0·5 | 0·6 | — | — |
| கடல் கடந்த செய்தித் தொடர்புகள் ... | 0·8 | 1·0 | — | — |
| மொத்தம் ... | 436·9 | 454·6 | 114·2 | 102·1 |

| இனங்கள் | மத்திய அரசாங்கம் | | மாநில அரசாங்கங்கள் | |
|---|---|---|---|---|
| | உண்மையான செலவு | திட்டமிடப்பட்ட செலவு (மாற்றங்கள் உட்பட) | உண்மையான செலவு | திட்டமிடப்பட்ட செலவு (மாற்றங்கள் உட்பட) |
| தொழில்கள் : | | | | |
| பெருவாரித் தொழில்கள்.. | 39·4 | 124·9 | 13·5 | 17·3 |
| சிறுபான்மை, குடிசைத் தொழில்கள் ... | 8·4 | 17·5 | 11·0 | 12·3 |
| விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சி ... | 6·6 | 6·2 | — | — |
| கனிப்பொருள் முன்னேற்றம் ... | 1·0 | 1·0 | — | — |
| மொத்தம் ... | 55·5 | 149·7 | 24·5 | 29·7 |
| சமூகப் பணிகள் : | | | | |
| கல்வி ... | 40·2 | 45·5 | 121·3 | 123·7 |
| சுகாதாரம் ... | 16·5 | 20·3 | 102·7 | 119·8 |
| வீடு கட்டுதல் ... | 28·1 | 38·5 | 10 2 | 10·9 |
| தொழில், தொழிலாளர் நலன் ... | 2·6 | 4·1 | 1·7 | 2·9 |
| பின் தங்கிய வகுப்பினர், தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் இனங்களும் ... | 7·5 | 7·0 | 27·0 | 24·8 |
| மொத்தம் ... | 94·9 | 115·4 | 262·9 | 282·2 |
| மற்ற மத்தியத் திட்டங்கள் | | | | |
| மறுசீரமைப்பு ... | 105·3 | 135·7 | — | — |
| பணிகளும் கட்டடங்களும் ... | 12·9 | 13·5 | — | — |
| நிதி அமைச்சர் துறையின் கீழ் ... | 7·3 | 9·2 | — | — |
| முன்னேற்றத் திட்டங்கள் வடமேற்கு எல்லைச்செயல் அலுவல் ... | 2·9 | 4·2 | — | — |
| அந்தமான் தீவுகளின் முன்னேற்றம் | 0·7 | 3 8 | — | — |
| மாநகராட்சிகளுக்குக் கடன்கள் ... | 6·0 | 12.0 | — | — |
| வெள்ளக் கட்டுப்பாடு ... | 12·8 | 16·5 | — | — |
| இயற்கைப் பெருந்துன்பங்களுக்காகக் கடன்கள் ... | 19·5 | 15·0 | — | — |
| இதர வகைகள் ... | — | — | 15·9 | — |
| பெரு மொத்தம் ... | 1,176·4 | 1,374·4 | 937·4 | 982·4 |

### முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் செலவுக்கான வளங்கள்
(எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிக்கின்றன)

| | மத்திய அரசாங்கம் | | மாநிலங்கள் | | மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் | |
|---|---|---|---|---|---|---|
| | உண்மையானது | மதிப்பிடப்பட்டது (திருத்தப்பட்டது) | உண்மையானது | மதிப்பிடப்பட்டது (திருத்தப்பட்டது) | உண்மையானது | மதிப்பிடப்பட்டது (திருத்தப்பட்டது) |
| வரவு செலவுத் திட்ட வளங்கள் | | | | | | |
| பொதுத்துறை மூலங்கள் : நடைமுறை வருமானங்கள் ... | 242·4 | 160·0 | 247·9 | 439·0 | 490·3 | 599·0 |
| இருப்புப் பாதைகள் ... | 115·9 | 170·0 | ... | ... | 115·9 | 170·0 |
| தனியார் மூலங்கள் : பொதுமக்களிடமிருந்து கடன்கள் ... | 50·4 | 36·0 | 152·4 | 79·0 | 202·8 | 115·0 |
| சிறு சேமிப்புகளும், நிதியில்லாக் கடன்களும் ... | 284·2 | 270·0 | ... | ... | 284·2 | 270·0 |
| மற்ற மூலங்கள் ... | — 39·2 | 90·0 | 58·9 | 42·8 | 19·7 | 132·8 |
| மொத்தம் ... | 653·7 | 726·0 | 459·2 | 560·8 | 1,112·9 | 1,286 8 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மாநிலங்களுக்கு மத்திய அரசாங்க உதவி | — 357·3 | — 360·3 | 357·3 | 360·3 | n/n | n/n |
| மொத்த வளங்கள் ... | 296·4 | 365·7 | 816·5 | 921·1 | 1,112·9 | 1,286·8 |
| மொத்த முதலீடு ... | 1,176·4 | 1,374·4 | 943·9[2] | 989·0 | 2,120·3[3] | 2.363·4[2] |
| வளங்களில் துண்டு விழும் பகுதி ... | 880·0 | 1,008·7 | 127·4 | 67·9 | 1,007·4 | 1,076·6 |
| வெளியுதவி : | | | | | | |
| நிதியுதவிகள் ... | 115·5 | n.a. | ... | ... | 115·5 | n.a. |
| கடன்கள் ... | 114·4 | n.a. | ... | ... | 114·4 | n.a. |
| மொத்தம் ... | 229·9 | 156·0[1] | ... | ... | 229·9 | 156·0[1] |
| நிகரப் பற்றுக்குறை ... | 650·1 | 852·7 | 127·4 | 67·9 | 777·5 | 920·6 |
| கீழ்க்கண்டவைகளால் நிரப்பப்பட்டன : | | | | | | |
| குறுகிய காலக் கடன்களை அதிகரித்தல்.. | 538·2 | n.a. | ... | ... | 538·2 | n.a. |
| ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த பத்திரங்களை விற்றல் ... | 0·1 | n.a. | 76·5 | 67·9 (covers this row and the next) | 76·6 | n a |
| மீதி ரொக்கத்திலிருந்து திருப்பி வாங்கியவை ... | 118·8 | n.a. | 29·4 | | 141·2 | n.a. |
| வழிவகைகள், முன்பணம் கொடுத்தலும் அதிகப் பற்றுகளும் ... | ... | ... | 21·5 | ... | 21·5 | ... |

திட்டத்தின் பிந்திய நிலைகளில் எதிர்பார்த்தபடி செலவின் அளவு கணிசமான முறையில் அதிகரித்தது. முதல் ஆண்டாகிய 1951 - 2-ல் மத்திய, மாநில அரசாங்கங்களுக்கு ஏற்பட்ட செலவு முறையே ரூ. 129·9 கோடியும், ரூ. 129·0 கோடியும் ஆகும். திட்டத்தின் நான்காவது ஆண்டில் திடீரென செலவில் ஓர் எழுச்சி காணப்பட்டு, அந்த ஆண்டு மத்திய, மாநில அரசாங்கங்களுக்கு ஆன செலவுகள் முறையே ரூ. 303·2 கோடியும், ரூ. 210·5 கோடியும் ஆக இருந்தன. 1955-6 ஆம் ஆண்டு வரவுசெலவுத் திட்ட மதிப்பீடுகள் மத்திய அரசாங்கத்திற்கு ரூ. 437·3 கோடியும், மாநில அரசாங்கங்களுக்கு ரூ. 396·5 கோடியும் செலவாகக் காட்டின.[1]

பல தலைப்புகளின்கீழ் ஆன செலவு 90 ஆம் பக்கத்தில் காட்டப்பட்டுள்ளது.[2] மத்திய அரசாங்கம் சமுதாய நலத் திட்டங்கள், பெருவாரித் தொழில்கள், சிறுபான்மைத் தொழில்கள், குடிசைத் தொழில்கள், வீடு கட்டுதல், மறு சீரமைப்பு முதலியவற்றின்மீது செய்த செலவுகள் குறைந்தன. ஆனால், மாநிலங்களின் செலவில் குறிப்பிடத்தக்க குறைவு எதுவும் ஏற்படவில்லை.

7. **வளங்கள் :** திட்டத்திற்குப் பணம் எவ்வாறு சேகரிக்கப்பட்டது என்பதை 92 ஆம் பக்கத்திலுள்ள அட்டவணை காட்டுகிறது.[3]

நடைமுறை வருமானங்களின் உபரியைப் பொறுத்தவரை மத்திய அரசாங்கம் ரூ. 82 கோடி அதிகமாகக் காண்பிக்கின்றது. இதற்குக் காரணம் வரி வரவுகள் திருப்திகரமாய் இருந்ததுதான். வரவுகள் 1950-51ஆம் ஆண்டு ரூ. 355·5 கோடியிலிருந்து, 1955-6ஆம் ஆண்டு ரூ. 409·4 கோடிக்கு அதிகரித்ததற்குக் காரணம், ஆயத் தீர்வையானது 1951-2ஆம் ஆண்டு ரூ. 82·4 கோடியிலிருந்து, 1955-6ஆம் ஆண்டு ரூ. 123·4 கோடிக்கு அதிகமாயிற்று. ஆனால், மத்திய, மாநில அரசாங்கங்களுக்குச் சேர்த்து ரூ. 109 கோடி பற்றாக் குறையாக இருந்தது.

1 Planning Commission, Progress Report for 1954-5 (May, 1956), p. 9.

2 Ibid., Annexure, Statement I.

3 Ibid., pp. 23-6.

8. **விவசாயம்:** விவசாய உற்பத்தியின் உயர்வுத் திட்டம் தீட்டியவர்கள் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இருந்தது. 1954-5-ஆம் ஆண்டுமட்டும் உணவுப் பொருள்கள் உற்பத்தி (65·3 மில்லியன் டன்). 1955 - 6 ஆம் ஆண்டின் திட்ட இலக்கான 61·6 மில்லியன் டன்னைவிட அதிகமாக இருந்தது. இந்த அதிக உற்பத்தி, மொத்த ஏக்கர்களை அதிகரித்ததனுலும், முன்னேற்றமடைந்த விவசாய முறைகளை மேற்கொண்டதாலும் அடையப்பெற்றது. திட்ட ஆரம்ப காலத்தில் உணவுப் பொருள்களின் விளைவின்கீழ் இருந்த 257 ஏக்கர்கள், 1954 - 5ஆம் ஆண்டு 272 மில்லியன் ஏக்கர்களாக அதிகமாயிற்று. அதே காலவரையில் வாணிபப் பயிர்கள் விளைவின் கீழ் இருந்த ஏக்கர்கள் 49 மில்லியனிலிருந்து 60 மில்லியனுக்கு உயர்ந்தது. உற்பத்திக் குறியீட்டெண் 1950 - 51ஆம் ஆண்டு 96-லும், 1955 - 6ஆம் ஆண்டு 115-லும் இருந்தது (அடிப்படை 1949 – 50 : 100). கீழ்வரும் அட்டவணை முக்கிய விவசாய இனங்களின் நிலையைக் காட்டுகிறது.[1]

| | திட்ட இலக்கு | திட்டமிடப் பட்ட உற்பத்தி 1955-6 | சதவீத அதிகரிப்பு (அடிப்படை 2 வருடத்தின் மீது)[2] |
|---|---|---|---|
| உணவுப் பொருள்கள் (மில்லியன் டன்) ... | 61·6 | 65·0 | 20·4 |
| எண்ணெய் வித்துகள் (மில்லியன் டன்) ... | 5·5 | 5·5 | 7·8 |
| கரும்பு (மில்லியன் டன்) ... | 6·3 | 5·8 | 3·6 |
| பருத்தி (மில்லியன் பேல்) ... | 4·2 | 4·2 | 44·8 |
| சணல் (மில்லியன் பேல்) ... | 5·4 | 4·0 | 21·2 |

மொத்தம் அதிகமாயுள்ள 11·4 மில்லியன் டன் உணவுப் பொருள்களில், சுமார் 5-லிருந்து 6 டன்வரை நிரந்தரமான இலாபத்தைக் குறிக்கிறது; இதை எந்தச் சராசரி விளைச்சலுள்ள வருடத்திலும் எதிர்நோக்கலாம்.

[1] Second Five Year Plan Draft Outline, p. 89.

[2] உணவுப் பொருள்களுக்கு அடிப்படை வருடம் 1949-50; மற்றவைகளுக்கு, 1950 - 51.

அடுத்த அட்டவணை உணவுத்தானியங்கள், மற்ற உணவுப் பண்டங்கள் இவைகளின் இறக்குமதி வளர்வீதத்தில் குறைந்து வருவதையும், அதன் விளைவாக அந்நியச் செலாவணியில் ஏற்பட்டுள்ள சேமிப்பையும் காட்டுகிறது.

| 1951-2 | 1952-3 | 1953-4 | 1954-5 | 1955-6 | |
|---|---|---|---|---|---|
| 252·08 | 175·18 | 92·66 | 115·56 | 62·42 | ரூபாய்கள் கோடியில் குறிக்கப்படுகின்றன. |

தானியங்கள், பருப்பு வகைகள், மாவு முதலியவற்றின் இறக்குமதியின் சரிவானது மிகச் செங்குத்தாக உள்ளது. அதாவது, 1951-2 ஆம் ஆண்டு ரூ. 228·12 கோடியிலிருந்து, 1955-6ஆம் ஆண்டு ரூ. 17·68 கோடிக்குச் சரிந்துவிட்டது.[1] கீழே கொடுத்திருக்கும் அட்டவணையில் காட்டியிருப்பதுபோல், திட்ட காலத்தின்பொழுது உணவுப் பொருள்களின் விலையும் குறைந்துகொண்டே வந்திருக்கிறது (அடிப்படை 1939 : 100):

| 1951 - 2 | 1952 - 3 | 1953 - 4 | 1954 - 5 | 1955 - 6 |
|---|---|---|---|---|
| 398·6 | 357·8 | 384·4 | 339·8 | 313·2 |

1950-51 ஆம் ஆண்டு உற்பத்தியான பருத்தி, 29·7 இலட்சம் பேலையும், 1955-6 ஆம் ஆண்டு உற்பத்தியான பருத்தி, 42 லட்சம் பேலையும் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, 42 சதவீதம் அது அதிகரித்துள்ளது. நீண்டஇழைப் பருத்தி விதங்களின் உற்பத்தி அதிகமாயிருப்பதைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். இந்தியா ஏற்கெனவே $1\frac{1}{16}$ அங்குல நீளமுள்ள இழைவரை சுயதேவைப் பூர்த்தியை அடைந்துவிட்டது.[2] சணல் உற்பத்தி அந்த அளவுக்கு நல்ல முறையில் அமையவில்லை; 1955-6ஆம் ஆண்டின் உற்பத்தி, திட்டத்தின் இலக்கைவிடக் குறைந்து இருந்தது. 1954-5ஆம் ஆண்டு சிறிது அதிகமாக உற்பத்தி செய்ததை 1953-4 ஆம் ஆண்டோடு ஒப்பிட்டுப் பார்க்குங்கால் வரும் வருடங்களில் நிலைமை முன்னேறும்

[1] Reserve Bank of India, Report on Currency and Finance for the years 1951-2 to 1955-6. எண்கள் சில இனங்களுக்கு மாத்திரம் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

[2] Reserve Bank of India, Report on Currency and Finance, 1955-6, p. 11.

என்று நினைக்க இடமிருக்கிறது. கரும்பு (வெல்லம்) உற்பத்தியும் இலக்கைவிடக் குறைந்துவிட்டது. ஆனால், எண்ணெய் வித்துகளின் உற்பத்தி எதிர்பார்த்த இலக்கைப் பூர்த்தி செய்தது.

கீழ்வரும் அட்டவணை முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் முக்கிய பயிர்களின் உற்பத்தி உயர்வை, ஓர் ஏக்கருக்கு இவ்வளவு பவுண்டு என்ற வீதத்தில் காட்டுகிறது:

| | | |
|---|---|---|
| அரிசி ... | 596 (1950-1) | 805 (1953 - 4) |
| கோதுமை ... | 566 (1948-9) | 713 (1954 - 5) |
| ஜாவர் ... | 305 (1948-9) | 469 (1954 - 5) |
| பருத்தி ... | 61 (1948-9) | 92 (1954 - 5) |

இந்த உயர்வுக்குக் காரணம், முன்னேற்றமடைந்த விவசாய முறைகள், உரங்களின் உபயோகம், பெரிய நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்கள், சாதகமான பருவக்காற்றுகள் முதலியன.

9. **நீர்ப்பாசனம்:** திட்ட காலத்தில், பெரிய நடுத்தர நீர்ப் பாசனத்தின்கீழ் 7 மிலியன் ஏக்கர்களும், சிறு நீர்ப்பாசனத்தின் கீழ் 10 மிலியன் ஏக்கர்களும் கொண்டுவரப்பட்டன. பெரிய பல நோக்குத் திட்டங்கள்மூலமும் நீர்ப்பாசனத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. பக்ரா-நங்கல், ஹீராகுட், ஹரிக-தாமோதர் பள்ளத்தாக்கு (Harike-'Damoder Valley') முதலியன சுமார் 22 இலட்சம் ஏக்கர்களை நீர்ப்பாசனத்தின்கீழ்க் கொண்டுவந்திருக் கின்றன.

10. **மின்சாரம்:** இத் துறையில், நிறுவப்பட்ட மொத்தத் திறன் 2·3 மிலியன் கிலோ வாட்டிலிருந்து 3·4 மிலியன் கிலோ வாட்டிற்கு அதிகரித்திருப்பது, தலா உபயோகம் 14 யூனிட்டுகளி லிருந்து 25 யூனிட்டுகளுக்கு உயர்ந்திருப்பது, மின்சாரத்தை ஊட்டனுப் பும் வலையை (transmission network) இரண்டு மடங்காக ஆக்கி யிருப்பது, 2,813 நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் மின்சாரத்தை அளித்திருப்பது போன்றவை மிக முக்கியமான சாதனைகளாகும். 20,000 க்கும் மேற்பட்ட மக்கள் தொகையுள்ள நகரங்களில் ஏறக் குறைய 95 சதவீதத்திற்கும், 5,000-த்திலிருந்து 20,000 வரை மக்கள் தொகையுள்ள நகரங்களில் 40 சதவீதத்திற்கும் மின்சாரம் வழங்கப் பட்டிருக்கிறது. தொழில்களின் மின்சார வளர்ச்சி 2·6 மிலியன்

கிலோவாட்டிலிருந்து (1950 ஆம் வருடம்) 1955 ஆம் ஆண்டு 4·6 மிலியன் கிலோவாட்டிற்கு உயர்ந்தது. நீர்ப்பாசனம், மின்சாரம், வெள்ளக் கட்டுப்பாடு ஆகியவைகள்மீது திட்டம் ஏற்பாடு செய்திருந்த ரூ. 661 கோடிக்குப் பதில், ரூ. 646 கோடி மொத்தத் தொகை 1951-6 காலவரையில் செலவழிக்கப்பட்டது.

11 **நிலச் சீர்திருத்தம் :** அதன் விளைவுகள் கீழ்க்கண்டவாறு சுருக்கமாகக் கூறப்படலாம் : (i) இனும்தார்கள், ஜாகீர்தார்கள், ஜமீன்தார்கள் போன்ற நடுவர்கள் முன்பு, சாகுபடி செய்யப்பட்ட நிலப்பரப்பில், 43 சதவீதத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு இருந்ததற்குப் பதிலாக, இப்பொழுது 8·5 சதவீதத்தையே கட்டுப்படுத்துகிறார்கள். (ii) முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், மொத்த உற்பத்தியின் மதிப்பில், குத்தகையின் வீதம் ஒன்றின்கீழ் நான்கு அல்லது ஐந்து மடங்குக்கு மேல் சென்றால் அதற்கு நியாயமான காரணம் இருக்க வேண்டும் எனக் கூறப்பட்டிருக்கிறது. பல்வேறு மாநிலங்களில் இதைப்பற்றிப் பல வேறுபாடுகள் உள்ளன; அவைகளுள் சிலவற்றில் குத்தகையைக் கட்டுப்படுத்துவதற்கான எவ்வித முயற்சியும் இல்லை. திரும்பப் பெற முடியாத நிலங்களின் குத்தகைக்காரர்களை நிலத்தின் உரிமையாளர்களாக ஆக்குவதிலுள்ள முன்னேற்றம் தாமதித்துச் செல்லுகிறது. குத்தகைக்காரர்களுக்கு, நிலச்சுவான்தாரர்களின் உரிமைகளை வாங்கவேண்டிய வழி வகைகளைச் செய்தாக வேண்டியிருக்கிறது.[1] குத்தகைக் காலவரையின் உறுதியைப் பொறுத்தவரை, முன்னேற்றம் அதிக திருப்தி அளிக்கிறது. (iii) நில உடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்பட்டு இருக்கிறது; ஓர் ஆளுக்கு உரிய உயர்ந்த பட்ச நிலம், பொருளாதார நோக்கில் தனித்து இயங்கக்கூடிய விதத்தில், சௌராஷ்ட்ராவில் 3 ஏக்கர் நிலத்திலிருந்து, மத்திய பாரதத்தில் 50 ஏக்கர் நிலம்வரை என விதிக்கப்பட்டு இருக்கிறது. (iv) அநேக மாநிலங்களில் கூட்டுப் பண்ணைமுறை மேற்கொள்ளப்பட்டு இருக்கிறது. ஆனால், இந்த இயக்கத்திற்கு இன்னும் வேகம் வரவில்லை.[2]

12. **சமுதாய நல முன்னேற்றம் :** திட்டக் காலத்தின் இறுதியில், 1,200 சமுதாய நல முன்னேற்றத் திட்டங்களும், நாட்டு விஸ்தரிப்புப் பணித்தொகுதிகளும் (national extension service blocks), 1,22,957 கிராமங்களுக்கும், 7·9 கோடி மக்களுக்கும் (இலக்கு 7·4 கோடி) தங்களது பணியை ஆற்றின. இத் திட்டங்களுக்காக அரசாங்கம் ரூ. 39·9 கோடி செலவழித்தபொழுது, மக்கள் ரொக்க

[1] Second Five Year Plan, pp, 189 - 90.

[2] Second Five Year Plan, pp. 237 - 8 and India 1956, p. 174.

மாகவும், பண்டங்களாகவும் ரூ. 15·3 கோடி அளித்தனர்; இது அரசாங்கச் செலவில் 40 சதவீதமாகும். கீழ்வரும் எண்கள் அப்பொழுது செய்யப்பட்ட பணிகளின் அளவைக் குறிக்கின்றன.[1]

| | |
|---|---|
| திருப்பிப் பெறப்பட்ட நிலப்பரப்பு (ஏக்கர்களில்) ... | 8,42,000 |
| நீர்ப்பாசனத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்ட அதிக நிலப்பரப்பு (ஏக்கர்களில்) ... | 15,42,000 |
| கிராமப்புறங்களில் கட்டப்பட்ட கழிப்பிடங்கள் (latrines) | 80,000 |
| வெட்டப்பட்ட கிணறுகள் ... | 28,000 |
| துவக்கப்பட்ட புதுப் பள்ளிகள் ... | 14,000 |
| துவக்கப்பட்ட முதியோர் கல்வி நிலையங்கள் ... | 35,000 |
| புதிதாகத் துவக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் ... | 27,000 |
| சாலை அமைத்தல் (மைல்களில்) ... | 32,069 |
| உற்பத்தி நிலையங்களும், பயிற்சி நிலையங்களும் ... | 687 |

1953-4 ஆம் ஆண்டு, 20·2 சதவீத மக்கள் கூட்டுறவு இயக்கத்தின் பணிகளைப் பெற்றனர். எல்லாவிதக் கூட்டுறவுச் சங்கங்களும், 1950-51 ஆம் ஆண்டு 1,62,000-த்திலிருந்து, 1953-4 ஆம் ஆண்டு 1,98,598-க்கு உயர்ந்தது. இவைகளின் மொத்த நடைமுறை முதல் ரூ. 351·79 கோடியாகும். கூட்டுறவுச் சங்கங்களின் வளங்களிலும், விதங்களிலும், எண்ணிக்கையிலும் இத்தகைய முன்னேற்றம் காணப்பட்டாலும், முதல் ஐந்தாண்டுத் திட்டம் விரிவான கூட்டுறவு அமைப்பிற்கு அடித்தளத்தைத்தான் நாட்டியது எனக் கூறவேண்டும். விவசாயக் கடன்களுக்கான இலக்குகள் இன்னும் நிறைவேற்றப்படவில்லை; பொதுவாகச் சங்கங்களில் தங்கள் பல்வேறு பொறுப்புகளை நிறைவேற்ற முடியவில்லை. கிராமக்கடன் மதிப்பீட்டுக்குழுவின் (Rural Credit Survey Committee) பரிந்துரைகளுக்கு ஏற்ப, இந்திய அரசாங்கத்தினல் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள், முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்தவை ஆகும். இப்பொழுது வந்திருக்கும் புது இந்திய அரசாங்கப் பாங்கின் (State Bank of India) மூலமாகக் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தாராள நிதி உதவி அளிக்கப்பட இருக்கிறது. இதைத் தவிர, நாட்டுக் கூட்டுறவு முன்னேற்றப் பண்டகசாலைக் குழு (National Co-operative Development and Warehousing Board) ஒன்று, இரண்டு நிதிகளுடன் அமைக்கப்பட்டது: முன்னேற்ற நிதி, பண்டகசாலை நிதி இவைகள் மூலமாகத் திரும்பப் பெறக்கூடியதும், திரும்பப் பெறக்கூடாததுமான ரூ. 30 கோடி நிதியுதவிகள் இக் குழுவிற்குக் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. இந்த இரு நிதிகளும் மாநில அரசாங்கங்கள், பங்குமுதல்கள்

[1] Second Five Year Plan, pp. 237-8, and India 1956, p. 174.

எடுப்பதன்மூலம், சங்கங்களின் விற்பனை, உபயோகத்திற்குத் தயாராக்கும் வழிகள் முதலியவற்றில் பங்கு எடுக்கவும், கம்பெனிகள் சங்கிலித் தொடர் போன்ற பண்டகசாலைகளை ஏற்படுத்த உதவி செய்யவும் முடிந்தது. இவற்றின் விளைவு விஞ்ஞான அடிப்படையில் பொருள்களை ஒழுங்காகச் சேமித்து வைப்பது மாத்திரமன்று; தானிய விற்பனைச் சந்தைக்குப் பண வசதி அளிப்பதும், விவசாய உண்டியல்களுக்குச் சந்தையை ஏற்படுத்துவதும் இதன் விளைவுகளே ஆகும்.

13. **தொழில்கள் :** திட்டத்தின்பொழுது தொழில் முன்னேற்றம், 1948 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட தொழில் கோட்பாட்டுத் தீர்மானத்தினல் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. 1952 ஆம் ஆண்டு செயலுக்கு வந்த தொழில் (முன்னேற்றக் கட்டுப்பாடு) சட்டம், தொழில்களுக்கான மத்திய ஆலோசனைக் குழுவையும், அனுமதிகள் வழங்கும் குழு ஒன்றையும் ஏற்படுத்தியது. அதன் நோக்கம் தொழில் முன்னேற்றத்தை விரும்பத் தகுந்த விதங்களில் செலுத்துவது ஆகும். 1953ஆம் ஆண்டின் இறுதியில் 2,409 தொழில் நிறுவனங்கள் பதிவு செய்யப்பட்டன. அதே வருடத்தில் அனுமதி வழங்கும் குழு 251 விண்ணப்பங்களை ஆராய்ந்தது. இந்த விண்ணப்பங்கள் புதிய நிறுவனங்களை அமைப்பது, ஏற்கெனவே இருக்கும் நிறுவனங்களை விரிவாக்குவது முதலியவைகளைப்பற்றியதாகும். தொழில் உற்பத்தியின் பொதுக் குறியீட்டெண், 1954ஆம் ஆண்டு 112·9 ஆக இருந்தது, 1955ஆம் ஆண்டு 121·9 ஆக மாறிற்று; 1956ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், மாதங்களிலெல்லாம் மிக அதிகமான 136·5 குறியீட்டு எண்ணை அடைந்தது.[1] பொதுத் துறையிலும், தனியார் துறையிலும் உண்மையான முதலீடு எதிர்பார்க்கப்பட்டதற்கும் கீழாக இருந்தது; எஃகு உற்பத்தியின் கீழான நிலை மிக முக்கியமான குறைபாடு ஆகும்; முதற்கருவிப் பொருள்கள் துறையின் முன்னேற்றம் நாட்டின் தேவைகளுக்குப் பின்தங்கியதாய் இருந்தது.

[1] Reserve Bank of India, Report on Currency and Finance, 1955-6, p. 13.

கீழ்வரும் அட்டவணை முக்கியத் தொழில்களின் நிலையைக் குறிக்கிறது.[1]

| தொழில் | நிறுவப்பட்ட வருடத் திறன் | | ஆண்டு உற்பத்தி | |
|---|---|---|---|---|
| | 1955-6 இலக்கு | 1955-6 உண்மை நிறைவேற்றம் | 1955-6 இலக்கு | 1955-6 உண்மை நிறைவேற்றம் |
| முழு எஃகு (ஆயிரம் டன்) ... | 1,550 | 1,300 | 1,280 | 1,300 |
| அலுமினியப் பாளங்கள் (டன்) ... | 20,000 | 7,500 | 12,000 | 7,500 |
| சிமெண்ட் (ஆயிரம் டன்) ... | 5,306 | 5,100 | 4,800 | 4,300 |
| ரயான் இழை (மிலியன் பவுண்டு) ... | 22 | 28 | 22 | 16 |
| பெட்ரோலியம் சுத்தம் செய்தல் (ஆயிரம் டன்) ... | 2,000 | 3,200 | ... | 3,600 |
| காகிதம், காகித அட்டை (ஆயிரம் டன்) ... | 211 | 220 | 200 | 200 |
| இருப்புப்பாதை உருள் கலங்கள்— | | | | |
| எஞ்சின்கள் ... | 150 | 170 | 150 | 175 |
| பிரயாணிகள் பெட்டிகள். | 4,380 | 1,200 | 4,380 | 950 |
| பொருள்களை ஏற்றிச் செல்லும் பெட்டிகள் ... | 30,000 | 14,000 | 30,000 | 12,000 |
| பருத்தித் துணிகள்— | | | | |
| நூல் (மிலியன் பவுண்டு) | 1,722 | 1,775 | 1,640 | 1,600 |
| ஆலைத் துணி (மிலியன் கஜம்) ... | 4,779 | 4,922 | 4,700 | 5,200 |
| பருத்தி இயந்திரங்கள்— | | | | |
| கோதும் (Carding) இயந்திரங்கள் ... | 600 | 792 | 600 | 690 |
| நூற்கும் வளைச்சட்டங்கள் ... | 800 | 1.212 | 700 | 880 |
| தறிகள் ... | 8,000 | 5,000 | 6,000 | 2,900 |
| டீசல் இயந்திரங்கள் ... | 39,725 | 21,000 | 50,000 | 10,000 |
| தானுக இயங்கும் வாகனங்கள் ... | 30,000 | 35,000 | 30,000 | 25,000 |
| சைக்கிள் ... | 5,30,000 | 5,50,000 | 5,30,000 | 5,00,000 |

[1] First Five Year Plan, pp. 446-50, Second Five Year Plan Draft Outline, p. 109, and Second Five Year Plan, pp. 58-61.

| தொழில் | நிறுவப்பட்ட வருடத் திறன் | | ஆண்டு உற்பத்தி | |
|---|---|---|---|---|
| | 1955–6 இலக்கு | 1955–6 உண்மை நிறைவேற்றம் | 1955–6 இலக்கு | 1955–6 உண்மை நிறைவேற்றம் |
| மின்சார மோட்டார்கள் (ஆயிரம் குதிரைச் சக்தி). | 300 | 377 | 320 | 240 |
| டிரான்ஸ்பார்மர்கள் (ஆயிரம் KVA) ... | 485 | 550 | 450 | 540 |
| தொழிலியல் இரசாயனப் பொருள்கள்— | | | | |
| கந்தக அமிலம் (ஆயிரம் டன்) ... | 221 | 268 | 200 | 170 |
| சலவைச் சோடா (ஆயிரம் டன்) ... | 86 | 90 | 78 | 80 |
| சோடாக் காரம் (ஆயிரம் டன்) ... | 37 | 46 | 33 | 36 |
| உரங்கள்— | | | | |
| அம்மோனியம் சல்பேட் (ஆயிரம் டன்) ... | 481 | 426 | 450 | 380 |
| சூபர் பாஸ்பேட் (ஆயிரம் டன்) ... | 209 | 228 | 180 | 120 |
| சர்க்கரை (ஆயிரம் டன்).... | 1,550 | 1,750 | 1,500 | 1,650 |
| சணல் உற்பத்திகள் (ஆயிரம் டன்) ... | 1,200 | 1,200 | 1,200 | 1,000 |

அட்டவணையிலிருந்து, சிமெண்ட், சர்க்கரை, துணி, துணி உற்பத்தி இயந்திரங்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள், புதுத் தொழில்கள்,—சைக்கிள்கள், டிரான்ஸ்பார்மர்கள் முதலியவைகளின் முன்னேற்றம் திருப்திகரமாய் இருப்பதையும் சில முக்கியத் தொழில்களான உரங்கள், சணல் முதலியன பின்தங்கிவிட்டதையும் நாம் அறிந்துகொள்ளமுடியும்.

1951 - 6ஆம் ஆண்டு, தொழில் துறையில் மிக முக்கிய நிகழ்ச்சி, மூன்று எண்ணெய் சுத்தம் செய்யும் தொழிற்சாலைகளை நிறுவியதாகும் (இரண்டு பம்பாயிலும், ஒன்று விசாகபட்டினத்திலும்). சில முக்கியக் கனிப்பொருள்களின் முன்னேற்றம் சிறப்பாகக் குறிப்பிட வேண்டியதாகும்; உதாரணமாக மைக்காவைவிட, மாங்கனீசத்தின் உற்பத்தி இரு மடங்காக இருந்தது. மாக்னசைட்டும், ஈயமும் 50 சதவீதத்திற்குமேல் அதிகரித்தன. பொறியியல், மின்சாரத் தொழில்கள் பகுதி திட்ட காலத்திலும், உற்பத்தியிலும் செயலாற்றும் எல்லையிலும் நல்ல முன்னேற்றம் கண்டன. இயந்திர சாதனங்கள் தொழிலில் உற்பத்தி, 1954ஆம் ஆண்டு 1,500 இயந்திரங்களிலிருந்து, 1955ஆம் ஆண்டு 1,800 இயந்திரங்களாக அதிகமாயிற்று. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களான சோப்பு, உப்பு, தீப்பெட்டி முதலியவற்றின் உற்பத்தியும் கணிசமாக அதிகரித்தது. பொதுத் துறையில் கீழ்வரும் நிறுவனங்கள் முக்கியமானவைகளாகக் கூறப்படவேண்டும்: (i) சிந்திரி இரசாயன உர உற்பத்திச் சாலை லிமிடெட் 1955ஆம் ஆண்டு 3,21,000 டன் அம்மோனியம் சல்பேட் உற்பத்தி செய்ததன் மூலம் இலக்கு மீறப்பட்டது. (ii) ஹிந்துஸ்தான் தந்திக் கம்பி வடங்கள் லிமிடெட் (Hindustan Cables Ltd.,) 1955 - 6 ஆம் ஆண்டின் இலக்கு 470 மைல்களாக இருக்க, உண்மையில் மதிப்பிடப்பட்ட உற்பத்தி 510 மைல்களாக இருந்தது. (iii) ஹிந்துஸ்தான் இயந்திரச் சாதனங்கள் லிமிடெட் (Hindustan Machine Tools Limited) 1954ஆம் ஆண்டு $8\frac{1}{2}''$ வேகமான லேத்தின் (lathe) உட்பகுதிகளை உற்பத்தி செய்ய ஆரம்பித்தது. (iv) ஹிந்துஸ்தான் கப்பல் கட்டும் தொழிற்சாலை லிமிடெட் (Hindustan Shipyard Limited) 1956ஆம் ஆண்டு வரை பல விதங்களிலும் அளவுகளிலும் கடலில் செல்லக்கூடிய 15 வகைக் கப்பல்களைக் கட்டியிருக்கிறது. (v) ஹிந்துஸ்தான் பூச்சி மருந்துச் சாலை லிமிடெட் (Hindustan Insecticides Ltd.) 1956 - 7ஆம் ஆண்டு தினந்தோறும் 2 டன் பூச்சி (கொல்லும்) மருந்தை உற்பத்தி செய்யும் என எதிர்பார்க்கப்பட்டது. (vi) ஹிந்துஸ்தான் ஆன்டிபையாட்டிக்ஸ் லிமிடெட் (Hindustan Antibiotics Ltd.) 1955 - 56ஆம் ஆண்டு 9 மிலியன் மெகா யூனிட்டுகளை (mega units) உற்பத்தி செய்தது; வெகு சீக்கிரத்தில் பிசில்லின் (bicillin), ஸ்டெரெப்டோமைசின் (streptomycin) முதலியவற்றை உற்பத்தி செய்யும். (vii) சித்தரஞ்சன் எஞ்சின் தொழிற்சாலை, பெரம்பூர் இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை (Integral Coach Factory at Perambur) நாகன் பவுண்டரி லிமிடெட் (Nahan Foundry Ltd.,), மத்தியப் பிரதேசத்திலுள்ள செய்தித்தாள் உற்பத்திச் சாலை முதலியன திட்ட காலத்தில் துவக்கப்பட்ட வெற்றிகரமான சில அரசாங்கத் தொழில்கள் ஏற்கெனவே இருக்கும் இரு

நிறுவனங்களான தேசீயக் கருவிகள் தொழிற்சாலையும் (National Instruments Factory), ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலை லிமிடெட்டும் (Hindustan Aircraft Ltd.) மேலும் வளர்ந்தன.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலவரையில் அரசாங்கம், பல அளவுகளில் உள்ள தொழில்களுக்கு மூலதனம் வழங்க, பல ஏற்பாடு களைச் செய்தது. சிறுபான்மைத் தொழில்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய, தேசீயச் சிறு தொழில்கள் கூட்டுக் கழகத்தையும் (National Small Industries Corporation), நான்கு வட்டாரச் சிறுதொழில் பணி நிறுவனங்களையும் அரசாங்கம் ஏற்படுத்தியது. 1955 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் அக் கூட்டுக் கழகம், இயந்திரங்கள், சாதனங்கள், இவைகளைத் தவணைகளில் சுலபமாக வாங்குந் திட்டத்தைப் புகுத்தி யது. நடுத்தரத் தொழில்களுக்கு, மூலதனம் முன்னால் கொடுப்ப தற்குப் பன்னிரண்டு மாநிலங்களில், நிதிக் கூட்டுக் கழகங்கள் (Finance Corporations) அமைக்கப்பட்டன. அக் கூட்டுக் கழகங் கள், தனிக் கடன்களாக ரூ. 5 இலட்சம்வரை கொடுக்கின்றன; 1956 ஆம் ஆண்டு மார்ச் மாத இறுதியில் அவைகள் கொடுத்த மொத்த முன்பணம் ரூ. 275·82 இலட்சம்.[1] பெரிய தொழில்களுக்கு அரசாங்கம், இந்தியத் தொழில் நிதிக் கூட்டுக் கழகத்தின் (Industrial Finance Corporation of India) மூலமாகப் பொருளாதார உதவி அளிக்கிறது. 1955·6 ஆம் ஆண்டு, கடன்களும், முன் அளித்த தொகையுமாகச் சேர்ந்து ரூ. 1,401 இலட்சம் இருந்தது. இந்தியத் தொழிற்கடன், முதலீடு கூட்டுக் குழு (The Industrial Credit and Investment Corporation of India) 1955 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பதிவு செய்யப்பட்டது; இது தனியார் துறையிலுள்ள தொழில்கள் ஒவ் வொன்றுக்கும், ரூ. 5 இலட்சத்திலிருந்து, ரூ. 1 கோடி வரை உதவி செய்யலாம். 1955 ஆம் ஆண்டு இறுதியில் இது பல தொழில்களுக்கு ரூ. 43 இலட்சம் கொடுத்திருக்கிறது.

1954 ஆம் ஆண்டு, தேசீயத் தொழில் முன்னேற்றக் கூட்டுக் குழுவை (National Industrial Development Corporation) தொழில் களின் வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்கு ஏற்படுத்தியது. அக் கூட்டுக் குழு, தொழில் செய்யக்கூடிய உதவிகளைப்பற்றியும் தனியார் கூட்டுறவுடன் திட்டங்களை நிறைவேற்றுவதைப்பற்றியும் ஆராயத் துவங்கியது.

**14. சிறுபான்மை, கிராமத் தொழில்கள்:** அத்தியாயம் 7-ல் கூறப்பட்டபடி சிறுபான்மைக் கிராமத் தொழில்களின் முன்னேற்றம்,

[1] Reserve Bank of India, Report on Currency and Finance, 1955-6, p. 178.

ஏழு வட்டாரக் குழுக்களின்கீழ் இருக்கின்றன. காதி உற்பத்தி 1950-51 ஆம் ஆண்டு ரூ. 1·3 கோடி பெறுமான அளவிலிருந்து, 1955-6 ஆம் ஆண்டு 34 மிலியன் சதுர கெஜம், அதாவது ரூ. 5 கோடி பெறுமான அளவிற்கு உயர்ந்தது; நூற்போரின் எண்ணிக்கை 1952-3-ல் 3·5 இலட்சமாக உயர்ந்தது. கைத்தறி உற்பத்தி, 1951 ஆம் ஆண்டு 843 மிலியன் கெஜத்திலிருந்து, 1955–6 ஆம் ஆண்டு 1,450 மிலியன் கெஜமாக ஆனது; 1955 - 6 ஆம் ஆண்டின் இலக்கு 1,700 கெஜம் ஆகும். கைத்தறித் துணிக் குழு (Handloom Board), நெசவாளர்களைக் கூட்டுறவுச் சங்கங்களின் அங்கத்தினர்களாகச் செய்வதற்காக முன்பணம் கொடுத்ததன் மூலம், 1954-5 ஆம் ஆண்டு 8·8 இலட்சம் நெசவாளர்கள் கூட்டுறவு இயக்கத்தில் சேர்க்கப்பட்டார்கள். அது ஏற்றுமதி விற்பனைக்காக ஒரு நிறுவனத்தையும், (அண்டை நாடுகள் பலவற்றில் விற்பனை அலுவலர்கள் இருக்கின்றனர்). அகில இந்தியக் கைத்தறித் துணி விற்பனைச் சங்கத்தையும் (All India Handloom Fabrics Marketing Society) ஏற்படுத்தியது. பட்டை (silk) நல்ல நிலையில் உற்பத்தி செய்யவும், சோதிக்கவும் நிலையங்களைக் கல்கத்தாவிலும், பெங்களூரிலும் அமைத்ததும் இத் துறையிலுள்ளோர் இந்தியாவிலும், ஜப்பானிலும் சிறந்த பயிற்சிபெற ஏற்பாடுகள் செய்ததும் அக் குழுவின் சாதனைகளாகும்.

கயிறு உற்பத்திக் குழு, கேரளாவில் கூட்டுறவுக் கயிறு உற்பத்திச் சங்கங்களுக்கு உதவி புரிந்துள்ளது. அதன் முயற்சிகளால், 119 துவக்கக் கூட்டுறவுச் சங்கங்களும், 24 உமி கூட்டுறவுச் சங்கங்களும், 2 மத்திய கயிறு விற்பனைச் சங்கங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

15. இருப்புப்பாதைகள்: முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இருப்புப்பாதைகள் ரூ. 432 கோடியை மறு சீரமைப்புக்கும், மற்ற அதிகரிப்புகளுக்குமாகச் செலவழித்துள்ளன; அவைகளின் இலக்கு ரூ. 400 கோடிதான்.[1] 380 மைல்களுக்குப் புது இருப்புப்பாதைகள் போடப்பட்டன; கீழ் வரும் இருப்புப்பாதைகளில் வேலை நடந்து கொண்டு இருக்கிறது; (i) சம்பா - கோர்பா நிலக்கரிச் சுரங்கங்கள் (Champa-Korba Coalfields), (ii) கொய்லான் - எர்ணகுளம்[2] (Quilon-Ernakulam), (iii) காண்ட்வா - ஹிங்கோலி (Khandwa-Hingoli), (iv) கோப்-கோட்கோலா (Gop-Kotkola). நம் நாட்டில் உற்பத்தி ஆகும் இருப்புப்பாதைகள், சாமான் ஏற்றிச் செல்லும் பெட்டிகள் முதலியவை ஆண்டுதோறும் ஏற்படும் தேவைகளைப்

[1] நடைமுறைத் தேய்மானத்திற்காக ரூ. 150 கோடியும் உள்ளடங்கியது. (Second Five Year Plan, p. 461.)

[2] 1956ஆம் ஆண்டு நவம்பரில் ஆரம்பிக்கப்பட்டுவிட்டது.

பூர்த்தி செய்யக்கூடியவையாக இருக்கின்றன; எஞ்சின்களைப் பொறுத்தவரை, வெகு சீக்கிரமாக நாம் சுய தேவைப் பூர்த்தியை அடைந்துவிடுவோம். நிர்வாகத் திறன், புகை வண்டிகள் குறிப்பிட்ட காலத்தில் செல்லுதல், பிரயாணிகளுக்கான வசதிகள் (குறிப்பாக மூன்றும் வகுப்புப் பிரயாணிகள்) முதலியவற்றில் நல்ல முன்னேற்றம் இருக்கிறது.

16. **சாலைகள்:** திட்ட காலத்தில் 97,000 மைல் சரளைக்கல் சாலைகளுடன், 10,000 மைல் புதிதாக மேற்பரப்பு அமைக்கப்பட்ட சாலைகள் போடப்பட்டன; 1,47,000 மைல் கல் பாவப்படாத சாலைகளுடன், 20,000 மைல் கீழ்ரகச் சாலைகளும் போடப்பட்டன. மேலும், தொடர்பு இல்லாத இடங்களில் 640 மைல்களுக்குச் சாலையும், 40 பெரிய பாலங்களும் மத்திய அரசாங்கத்தினால் நாட்டுப் பெருஞ்சாலை அமைப்புடன் கட்டப்பட்டு இருக்கின்றன.

17. **கப்பல் கட்டும் தொழில்:** கீழ் வரும் அட்டவணை முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் அதிகமாயிருக்கும் மொத்த டன்னைக் குறிக்கிறது.[1]

| | திட்டத்திற்குமுன் | திட்டத்தின் முடிவில் |
|---|---|---|
| கரையோரத்திற்கும் அதற்குச் சமீபமானதும் ... ... ... | 2,17,202[2] | 3,12,202 |
| கடல் தாண்டுவது .. ... | 1,73,505 | 2,83,505 |
| குறிப்பிட்ட வழி இல்லாதவை ... ... | — | — |
| டாங்கர்கள் ... ... | — | 5,000 |
| காப்பாற்றி இழுத்துச் செல்லுபவை ... | — | — |
| மொத்தம்... | 3,90,707 | 6,00,707 |

கப்பல் தொழிலுக்காக ஒதுக்கப்பட்ட செலவும், உண்மையான செலவும் திட்டத்தின்படியே இருந்தன. இப்பொழுது கரையோர வர்த்தகத்தில் 100 சதவீதமும், அண்டை நாடுகளுடன் வர்த்தகத்தில் 40 சதவீதமும், தூர நாடுகளுடன் வர்த்தகத்தில் 5 சதவீதமும் இந்தியக் கப்பல்களால் நடைபெறுகின்றன. கடல் கடந்த வாணி

1 Second Five Year Plan, p. 481.

2 இந்த மதிப்பீடு, 80 ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையின் திருத்தமாகும்.

கத்தில் ஆறு வழிகள் இந்தியக் கப்பல்களால் நடைபெறுகின்றன; நான்கு வழிகளில் அவைகள் சரக்கையும், மீதி இருக்கும் இரண்டு வழிகளில் அவை பிரயாணிகள், சரக்கு இரண்டையும் ஏற்றிச் செல்லு கின்றன.

18. **துறைமுகங்கள்:** நாட்டின் ஆருவது துறைமுகமாக கந்தலாத் துறைமுகம் சேர்க்கப்பட்டது, மொத்தம் சரக்கேற்றும் திறனை 20 மிலியன் டன்னிலிருந்து 25 மிலியன் டன்னிற்கு அதிகமாக்கிற்று. பெரிய எண்ணெய் டாங்கர்களைக்கூடத் தன்னிடம் கொள்ளும் படியாகப் பம்பாய்த் துறைமுகத்தில் ஓர் எண்ணெய் நிலையம் கட்டப் பட்டிருக்கிறது. கொச்சியில் நிலக்கரி, எண்ணெய் இறக்கும் சிறு துறைமுகமும், கல்கத்தாவில் 4,000 பணியாட்களுக்கான பெரிய குடி யிருப்பும் திட்ட காலத்தின் சில சாதனைகளாகும்.

19. **சிவில் விமானப் போக்குவரத்து:** இந்திய விமானக் கூட்டுக் குழு (Indian Airlines Corporation) இப்பொழுது சுமார் 100 விமானங்களை உடையதாய் இருக்கிறது. அது அநேக மாக எல்லா முக்கிய நகரங்களையும் இணைக்கிறது. அவை செல்லும் வழிகளின் மொத்த தூரம் 23,483 மைல்களாகும்.

20. **தபால் பணிகள்:** திட்ட இலக்கான, 10,000 புதுத் தபால் நிலையங்கள், சிறிது அதிகமாகவே நிறைவேற்றப்பட்டன; தபால் நிலையங்களின் தொகை 36,000த்திலிருந்து, 54,900க்கு அதி கரித்துள்ளது. இரண்டு மைல் எல்லைக்குள் இருக்கும் எல்லாக் கிராமத் தொகுதிக்கும், அத் தொகுதியில், 2,000 மக்கள் தொகை இருப்பின், அதற்கு ஒரு தபால் நிலையம் உண்டு; திட்ட காலத்தில் 1,800 கிராமத் தபால் நிலையங்கள் திறக்கப்பட்டன. ஆறு பெரிய நகரங் களில் சுற்றி வரும் தபால் நிலையங்கள் (mobile post offices) பணி யாற்றுகின்றன; உள்நாட்டு விமானத் தபால் பணி இந்தியாவின் எல்லா முக்கிய நகரங்களையும் இணைக்கிறது. திட்ட காலத்தில் தந்தி நிலையங்கள், 1,320லிருந்து 4,912 ஆக ஆயின. தொலைபேசிகளின் எண்ணிக்கை 1,68,000-த்திலிருந்து 2,70,000 ஆக ஆயிற்று. தொலை பேசியின் 539 பாகங்களில், 537 பாகங்கள் இப்பொழுது இந்தியா விலேயே செய்யப்படுகின்றன. கம்பியில்லாத் தந்தி தொலைபேசிச் சுற்றுக்கள் இப்பொழுது 17 நாடுகளில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

21. **கல்வி:** கல்வித் துறையில் ரூ. 161·5 கோடி மொத்தச் செலவிற்குப் பின் (திட்ட மொத்த முதலீட்டில் 95 சதவீதம்) கணிச மான அளவில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. பின் வரும் எண்கள் இம் முன்னேற்றத்தின் அளவைக் குறிக்கின்றன.[1]

[1] Second Five Year Plan, pp. 501-02

| | 1950 - 51 | 1955 – 6 |
|---|---|---|
| பல்வேறு வயதின் தொகுதியில் இருக்கும் குழந்தைகளுக்குப் பள்ளி வசதிகள் : | | |
| 6-11 ... ... | 1,86,80,000 (42 சதவீதம்) | 2,48,12,000 (51 சதவீதம்) |
| 11-14 ... ... | 33,70,000 (13·9 சதவீதம்) | 50,95,000 (19·2 சதவீதம்) |
| 14-17 ... ... | 14,50,000 (6·4 சதவீதம்) | 23,03,000 (9·4 சதவீதம்) |
| நிறுவனங்கள் : | | |
| முதல் நிலை / சிறிய ஆதாரப் பள்ளிகள் ... .. | 2,09,671 | 2,74,038 |
| சிறிய ஆதாரப் பள்ளிகள் ... | 1,400 | 8,360 |
| மத்திய / மேல் ஆதாரப் பள்ளிகள் ... ... | 13,596 | 19,270 |
| மேல் ஆதாரப் பள்ளிகள் ... | 351 | 1,645 |
| உயர்நிலை / உயர்நிலை இடைத் தரப் பள்ளிகள் ... | 7,228 | 10,600 |
| பல நோக்குப் பள்ளிகள் ... | — | 250 |
| உயர்நிலைப் பள்ளிகள், உயர் நிலை இடைத்தரப் பள்ளிகளாக உயர்த்தப்பட்டவை ... ... | — | 47 |
| சர்வ கலாசாலைகள் ... | 26 | 31 |
| பொறியியல் : | | |
| டிப்ளமா, பட்டம் தரும் நிறுவனங்கள் ... ... | 105 | 128 |
| பட்டதாரிகளும், டிப்ளமா பெற்றவர்களும் ... | 3,846 | 6,560 |
| பொறி நுட்பத்துறை (Technology) | | |
| டிப்ளமா, பட்டம் தரும் நிறுவனங்கள் ... ... | 61 | 61 |
| பட்டதாரிகளும், டிப்ளமா பெற்றவர்களும் ... | 830 | 1,130 |

22. சுகாதாரம்: கீழ் வரும் அட்டவணையில் முதல் திட்ட காலத்தின் முன்னேற்றம் காட்டப்பட்டுள்ளது.[1]

| | 1950 - 51 | 1955 - 6 |
|---|---|---|
| மருத்துவ நிறுவனங்கள் ... | 8,600 | 10,000 |
| படுக்கைகளின் எண்ணிக்கை ... | 1,13,000 | 1,25,000 |
| மருத்துவக் கல்லூரிகள் ... | 30 | 42 |
| ஆண்டுதோறும் சேர்க்கப்படும் மாணவர்கள் ... ... | 2,500 | 3,500 |
| மருத்துவர்கள் ... ... | 59,000 | 70,000 |
| நர்ஸ்கள் (துணை நர்ஸ்களும், மருத்துவப் பெண்களும் (midwives) உள்பட ... | 17,000 | 22,000 |
| மருத்துவப் பெண்கள் (mid-wives) ... ... | 18,000 | 26,000 |
| சுகாதாரப் பார்வையாளர்கள் ... | 600 | 800 |
| நர்ஸ் - dais and dais ... | 4,000 | 6,000 |
| சுகாதார உதவி அலுவலர்களும் சுகாதார மேற்பார்வையாளர்களும் ... ... | 3,500 | 4,000 |

ஓர் ஆயிரத்திற்கு இறப்பு வீதம் 16·1லிருந்து 13·4-க்குக் குறைந்திருக்கிறது; குழந்தைகளின் இறப்பு வீதம் 1950ஆம் ஆண்டு 127 லிருந்து, 1952ஆம் ஆண்டு 116க்குக் குறைந்திருக்கிறது; சராசரி வாழ்க்கைக் காலம், 1946ஆம் ஆண்டு 27லிருந்து, 1954 ஆம் ஆண்டு 32-க்கு அதிகமாகி இருக்கிறது.

23. தொழிலாளர்: தொழிலாளர்களுக்குத் திட்டம் கணிசமான நலன்களைக் கொடுத்தது. கீழே கொடுக்கப்பட்டுள்ள

[1] Second Five Year Plan, pp. 534-538.

அட்டவணையில் காட்டப்பட்டுள்ளபடி, அநேகமாக எல்லா மாநிலங்களிலும் தொழிலாளர்களின் வருடாந்தர சராசரிச் ஊதியத்தில் உயர்வு இருந்தது; இந்த உயர்வு ரூ. 200க்குக் குறைவாக ஊதியம் பெறுவோர்க்கு இருந்தது.[1]

| | 1951 | 1953 |
|---|---|---|
| பீகார் ... ... | ரூ. 1,240·8 | ரூ. 1,473·0 |
| பம்பாய் ... ... | 1,270·5 | 1,346·4 |
| சென்னை ... ... | 664·9 | 804·7 |
| உத்தரப் பிரதேசம் ... | 960·4 | 1,019·3 |
| டெல்லி ... ... | 1,292·6 | 1,311·6 |
| மேற்கு வங்காளம்... ... | 942·3 | 963·5 |

குறியீட்டு எண் காட்டுகின்றபடி, உண்மை ஊதியங்கள் (Real earnings) 1950-ல் 116·9 லிருந்து, 1953-ல், 135·8 ஆக உயர்ந்திருக்கின்றன.

வேலை வாய்ப்பு அளிப்பதில் மட்டும் சாதனைகள் ஏமாற்றம் அளிப்பவையாக இருக்கின்றன. உழைக்கக்கூடிய மக்கள் தொகையில் 9 மிலியன் அதிகமாயிருக்கும்பொழுது, திட்டம் 4 மிலியன் பேருக்குத்தான் அதிக வேலை அளிக்க முடிந்தது.

24. **இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்:** முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் சிறப்பியல்பு, அதனை உருவாக்கிய பொழுது இருந்த சூழ்நிலைகளைப் பொறுத்து அமைந்தது. டாக்டர் (Dr. John Matthai) அவர்களின் வார்த்தைகளில் கூறவேண்டுமானல், 'அது ஒரு தொடர்ச்சியற்ற முன்னேற்றத்திற்கான திட்டம். சமூதாய நல முன்னேற்றத் திட்டங்களைத் தவிர, மற்ற எல்லாத் திட்டங்களும், மக்களாட்சி அதிகாரத்திற்கு வரும் முன்னர், உருவாக்கப்பட்டும், ஓரளவு நிர்மாணிக்கப்பட்டுமிருந்தன. இரண்டாவது திட்டம், முதல் திட்டத்தைப் போலன்றி, ஓர் உண்மையான திட்டமாகவும், ஒரு முழுமையான திட்டமாகவும் பொருளாதாரத்தின் பல

[1] India, 1956, p. 330.

பிரிவுகளையும் ஓரினப்படுத்தும் திட்டமாகவும் உள்ளது. அது முதல் திட்டத்தைப்போல் தனிப்பட்ட திட்டங்களை ஒட்டுப்போட்ட வேலையன்று.'

முதல் திட்டம் முடிவடைவதற்குச் சில காலம் முன்பே, திட்டக் குழு இரண்டாம் திட்டத்தைப்பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிட்டது. 1956ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் திட்டத்தின் முன் வரைவு (draft) உருவாக்கப்பட்டு, 1956 ஆம் ஆண்டு மே மாதம், 15ஆம் நாள் லோக் சபை (Lok Sabha)யின் முன் சமர்ப்பிக்கப்பட்டது.

கீழ் வரும் நோக்கங்களைத் திட்டம் தெளிவாகக் குறிப்பிடுகிறது: (i) நாட்டு வருமானத்தில் கணிசமான உயர்வு (25 சதவீதம்); அதன் மூலம் வாழ்க்கைத்தரம் உயருதல் (ii) துரிதமான தொழில் வளர்ச்சி, அடிப்படைக் கனரகத் தொழில்களுக்கு முக்கியத்துவம் அளித்தல். (iii) தொழில் வாய்ப்புகள் மிகுதியாக விரிவாக்கப்படுதல் (10 மிலியன் அதிக வேலைகள்) (iv) வருமானத்தின் ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்தலும் பொருளாதார வளத்தைச் சமமாகப் பிரித்து அளித்தலும்.

**25. திட்டத்தின் மூலதனமும், அதன் அமைப்பும்:** அரசாங்கத் தனியார் துறைகள் இரண்டிலுமாகச் சேர்ந்து, ரூ. 7,200 கோடி முதலீடு செய்யப்பட இருக்கிறது. அரசாங்கத் துறையில் ரூ. 4,800 கோடி செலவழிக்கப்படும். அதில் ரூ. 3,800 கோடி லாபகரமான இருப்பினங்களை (productive assets) ஏற்படுத்துவதிலும், ரூ. 1000 கோடி முன்னேற்றத்திற்கான நடைமுறைச் செலவுக்கும் பயன்படுத்தப்படும்.[1] தனியார் துறையில் மொத்த முதலீடு ரூ. 2,400 கோடியாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. கீழ் வரும் அட்டவணைகள் அரசாங்கத் துறையில் பல தலைப்புகளின் கீழ் முதலீடு எவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டுகின்றன. முதல் அட்டவணை, பொருளாதார முன்னேற்றத்தின் பல கிளைகளில் முதலீடு எவ்வாறு மொத்தத்தில் பங்கீடு செய்யப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டுகிறது; முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் எண்களும், ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகக் கொடுக்கப்பட்டுள்ளன.[2]

[1] இந்த எண்கள், இதை எழுதும்பொழுது, கடைசியாக, அதிகார பூர்வமாகக் கிடைத்தவை ; இந்த அத்தியாயத்தின் 48 ஆம் பிரிவையும் காண்க.

[2] Second Five Year Plan, pp. 51-2.

| | முதல் ஐந்தாண்டுத் திட்டம் | | இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் | |
|---|---|---|---|---|
| | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் |
| விவசாயமும் சமுதாய நல முன்னேற்றமும் ... | 357 | 15·1 | 568 | 11·8 |
| விவசாயம் ... ... | 241 | 10·2 | 341 | 7·1 |
| விவசாயத் திட்டம் ... ... | 197 | 8·3 | 170 | 3·5 |
| கால்நடை பேணுதல்... ... | 22 | 1·0 | 56 | 1·1 |
| காடுகள் ... ... | 10 | 0·4 | 47 | 1·0 |
| மீன் பிடித்துறை ... ... | 4 | 0·2 | 12 | 0·3 |
| கூட்டுறவு ... ... | 7 | 0·3 | 47 | 1·0 |
| மற்றவை ... ... | 1 | — | 9 | 0·2 |
| தேசீய விஸ்தரிப்பும், சமுதாய நலத் திட்டங்களும் ... | 90 | 3·8 | 200 | 4·1 |

| இனம் | முதல் திட்டம் | | இரண்டாம் திட்டம் | |
|---|---|---|---|---|
| | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் |
| மற்ற திட்டங்கள் ... | 26 | 1·1 | 27 | 0·6 |
| கிராமப் பஞ்சாயத்துகள் ... | 11 | 0·5 | 12 | 0·3 |
| உள்ளூர் முன்னேற்றப் பணிகள் ... | 15 | 0·6 | 15 | 0·3 |
| நீர்ப்பாசனமும் மின்சாரமும் ... | 661 | 28·1 | 913 | 19·0 |
| நீர்ப்பாசனம் ... | 384 | 16·3 | 381 | 7·9 |
| மின்சாரம் ... | 260 | 11·1 | 427 | 8·9 |
| வெள்ளக் கட்டுப்பாடு, மற்ற திட்டங்கள், விசாரணைகள் முதலியன ... | 17 | 0·7 | 105 | 2·2 |
| தொழிலும், சுரங்கத்தொழிலும்... | 179 | 7·6 | 890 | 18·5 |
| பெரிய, நடுத்தரத் தொழில்கள். | 148 | 6·3 | 617 | 12·9 |
| கனிப் பொருள் வளர்ச்சி ... | 1 | — | 73 | 1·5 |
| கிராமச் சிறு தொழில்கள் ... | 30 | 1·3 | 200 | 4·1 |
| போக்குவரத்தும் செய்தித் தொடர்புகளும் ... | 557 | 23·6 | 1,385 | 28·9 |
| இருப்புப்பாதைகள் ... | 268 | 11·4 | 900 | 18·8 |
| சாலைகள் ... | 130 | 5·5 | 246 | 5·1 |
| சாலைப் போக்குவரத்து ... | 12 | 0·5 | 17 | 0·4 |
| துறைமுகங்கள் ... | 34 | 1·4 | 45 | 0·9 |
| கப்பல் கட்டுதல் ... | 26 | 1·1 | 48 | 1·0 |
| உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்து ... | — | — | 3 | 0·1 |
| சிவில் ஆகாயப் போக்குவரத்து ... | 24 | 1·0 | 43 | 0·9 |
| மற்ற போக்குவரத்துகள் ... | 3 | 0·1 | 7 | 0·1 |
| தபால் தந்திகள் ... | 50 | 2·2 | 63 | 1·3 |
| மற்ற செய்தித் தொடர்புகள் ... | 5 | 0·2 | 4 | 0·1 |

| இனம் | முதல் திட்டம் | | இரண்டாம் திட்டம் | |
|---|---|---|---|---|
| | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் | மொத்த ஒதுக்கீடு (ரூபாய்கள் கோடியில்) | சதவீதம் |
| ஒலி பரப்பு ... | 5 | 0·2 | 9 | 0·2 |
| சமூகப் பணிகள் ... | 533 | 22·6 | 945 | 19·7 |
| கல்வி ... | 164 | 7·0 | 307 | 6·4 |
| சுகாதாரம் ... | 140 | 5·9 | 274 | 5·7 |
| பின்தங்கிய வகுப்பினரின் நலன் ... | 32 | 1·3 | 120 | 2·5 |
| வீடு கட்டுதல் ... | 49 | 2·1 | 91 | 1·9 |
| சமூக நலன் ... | 5 | 0·2 | 29 | 0·6 |
| தொழிலாளர், தொழிலாளர் நலன் ... | 7 | 0·3 | 29 | 0·6 |
| மறுசீரமைப்பு ... | 136 | 5·8 | 90 | 1·9 |
| கற்ருேர் வேலையின்மையைப் பற்றிய சிறப்புத் திட்டங்கள் ... | — | — | 5 | 0 1 |
| மற்றவை ... | 69 | 3·0 | 99 | 2·1 |
| மொத்தம்... | 2,356 | 100·0 | 4,800 | 100·0 |

முதல் திட்டத்தில், மொத்தத்தில் 50 சதவீதம் அரசாங்கத் துறையுடையது; இரண்டாம் திட்டத்தில் மொத்தத்தில் 62 சதவீதம் அரசாங்கத் துறையுடையது. விவசாயம், சமூக நல முன்னேற்றம் ஆகிய துறைகளில் சதவீதம் சிறிது குறைக்கப்பட்டிருக்கிறது. (15·1 சதவீதத்திலிருந்து 11·8 சதவீதமாக) தொழில், சுரங்கத் தொழில் முதலியவற்றிற்கான முதலீடு கணிசமாக அதிகமாகி இருக்கின்றது; அதாவது 7 0 சதவீதத்திலிருந்து 18·5 சதவீதத்திற்கு அதிகரித்திருக்கிறது; போக்குவரத்து, செய்தித் தொடர்புகள் இவைகளுக்கான சதவீதம் 23·6லிருந்து 28·9க்கு உயர்த்தப்பட்டிருக்கிறது.

அடுத்துவரும் அட்டவணை முதலீட்டு எண்களையும் நடைமுறை முதலீட்டையும் தருகிறது:[1]

| இனம் | முதலீடு செய்யப் பட்ட மூலதனம் (ரூபாய்கள் கோடியில்) | நடைமுறை முதலீடு (ரூபாய்கள் கோடியில்) | மொத்த முதலீடு (ரூபாய்கள் கோடியில்) |
|---|---|---|---|
| விவசாயமும் சமூதாய நல முன்னேற்றமும் ... | 338 | 230 | 568 |
| விவசாயம் ... | 181 | 160 | 341 |
| தேசீய விஸ்தரிப்பும் சமூதாய நல முன்னேற்றமும் ... | 157 | 70 | 227 |
| நீர்ப்பாசனமும் மின்சாரமும் ... | 863 | 50 | 913 |
| நீர்ப்பாசனமும் வெள்ளக் கட்டுப்பாடும் ... | 456 | 30 | 486 |
| மின்சாரம் ... | 407 | 20 | 427 |
| தொழில்களும் சுரங்கத் தொழிலும் ... | 790 | 100 | 890 |
| பெரிய நடுத்தரத் தொழில்களும் சுரங்கத் தொழிலும். | 670 | 20 | 690 |
| கிராம, சிறுபான்மைத் தொழில்கள் ... | 120 | 80 | 200 |
| போக்குவரத்தும் செய்தித் தொடர்புகளும் ... | 1,335 | 50 | 1,385 |
| சமூகப் பணிகள் ... | 455 | 490 | 495 |
| மற்றவை ... | 19 | 80 | 99 |
| மொத்தம் ... | 3,800 | 1,000 | 4,800 |

[1] Second Five Year Plan, p. 56.

26. முதலீட்டுப் பிரிப்பு: மத்திய, மாநில அரசாங்கங்களிடையே முதலீடு கீழ்க்கண்ட முறையில் பிரிக்கப்பட்டிருக்கிறது.[1]

| இனம் | மத்திய அரசாங்கம் (ரூபாய்கள் கோடியில்) | மாநிலங்கள் (ரூபாய்கள் கோடியில்) | மொத்தம் (ரூபாய்கள் கோடியில்) |
|---|---|---|---|
| விவசாயமும் சமூக நல முன்னேற்றத் திட்டங்களும்... | 65 | 502 | 568[2] |
| நீர்ப்பாசனமும் மின்சாரமும் ... | 105 | 808[3] | 913 |
| தொழிலும், சுரங்கத் தொழிலும் ... | 747 | 143 | 890 |
| போக்குவரத்தும் செய்தித் தொடர்புகளும் ... | 1,203 | 182 | 1,385 |
| சமூகப் பணிகள் ... | 396 | 549 | 945 |
| மற்றவை ... | 43 | 56 | 99 |
| மொத்தம்... | 2,559 | 2,240 | 4,800[4] |

தனியார் துறையின் முதலீடு கீழ்க்கண்டவாறு, ரூ. 2,400 கோடியாக இருக்கும் என எதிர்பார்க்கப்பட்டது :

| | | |
|---|---|---|
| ஒழுங்குடன் அமைக்கப்பட்ட தொழிலும், சுரங்கத் தொழிலும் ... | ரூ. | 575 கோடி |
| தோட்டங்கள் (plantations), மின்சார அலுவல்கள், போக்குவரத்து (இருப்புப் பாதைகள் தவிர) ... | ரூ. | 125 கோடி |
| அமைப்பு வேலைகள் (construction) ... | ரூ. | 1,000 கோடி |
| விவசாயம், கிராமச் சிறுபான்மைத் தொழில்கள் | ரூ. | 300 கோடி |
| சேமிப்புகள் (stocks) ... | ரூ. | 400 கோடி |

1 Second Five Year Plan, p. 55.

2 மாநிலங்களில் தேசீய விஸ்தரிப்புக்கும், சமூக நல முன்னேற்றத்திற்கும் ஒதுக்கப்படாத ரூ. 1 கோடியும் இதில் சேர்ந்திருக்கிறது.

3 அந்தமான், நிக்கோபார் தீவுகள், வடமேற்கு எல்லை மாநிலம், பாண்டிச்சேரி முதலியனவும் உள்ளடங்கியவை.

4 தாமோதர் பள்ளத்தாக்குக் கூட்டுக் குழுவின் செலவும் சேர்க்கப்பட்டு இருக்கிறது.

**27. திட்டமும் நாட்டு வருமானமும்:** கீழ் வரும் அட்டவணையில் இரண்டாம் திட்ட காலத்தில் எதிர்பார்க்கப்பட்ட நாட்டு வருமானத்தின் உயர்வு காட்டப்பட்டு இருக்கிறது. நிலையான விலைகளின் அடிப்படையில், 1955-6 ஆம் ஆண்டு ரூ. 10,800 கோடியாக இருந்த நாட்டு வருமானம், 1960-61-ல் ரூ. 13,480 கோடியாக உயரும் என்பதைக் காணலாம். அதாவது 25 சதவீதம். முதல் திட்டத்தின் காலவரையில், தலா வருமானம் 11 சதவீதம் உயர்ந்திருப்பதற்குப் பதில் (ரூ. 253லிருந்து ரூ. 281க்கு உயர்ந்தது), இப்பொழுது 18 சதவீதம் (1955-6 ஆம் ஆண்டு ரூ. 281லிருந்து, 1960-61 ஆம் ஆண்டு ரூ. 331க்கு) உயரும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் இறுதியில் முதலீடு, உள்நாட்டுச் சேமிப்புகள், நுகர்ச் செலவு முதலியன எவ்வாறு இருந்தன என்பதை, 1950-51, 1955-56 ஆண்டுகளின் நிலைகளுடன், ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.[1]

| இனம் | 1950-51 | 1955-56 | 1960-61 |
|---|---|---|---|
| (1) நாட்டு வருமானம் ... | 9,110 | 10,800 | 13,480 |
| (2) நிகர முதலீடு ... | 448 | 790 | 1,440 |
| (3) அயல் நாட்டு வளங்களின் நிகர வரவு ... | — 7 | 34 | 130 |
| (4) நிகர உள்நாட்டுச் சேமிப்புகள் (2—3) ... | 455 | 756 | 1,310 |
| (5) நுகர்ச்சிச் செலவு (1—4) ... | 8,655 | 10,044 | 12,170 |
| (6) நாட்டு வருமானத்தில் முதலீட்டின் சதவீதம் (2, 1ன் சதவீதமாக) ... | 4·94 | 7·31 | 10·68 |
| (7) உள்நாட்டுச் சேமிப்புகள், நாட்டு வருமானத்தின் சதவீதமாக (4, 1ன் சதவீதமாக) ... | 4·98 | 7·00 | 9·7 |

நாட்டு வருமானத்தைவிடப் பொருளாதார அமைப்பின் சராசரி நுகர்ச்சித் தரம் சிறிது குறைவான வேகத்துடன்தான் முன்னேறும்;

[1] Second Five Year Plan, p, 74-5. எண்கள் ரூபாய்களைக் கோடியில் குறிக்கின்றன. அவை 1952-3 விலைகள் அடிப்படையில் கணக்கிடப்பட்டிருக்கின்றன.

ஏனெனில் அந்த அளவுக்கு உள்நாட்டு உற்பத்தி சேமிக்கப்பட்டு, முதலீடு செய்யப்படவும் வேண்டும். வெளிநாட்டு வளங்கள் ரூ. 1,100 கோடிக்குக் கிடைக்குமென வைத்துக்கொண்டாலும், முதலீடு செய்யத் திட்டத்தில் உள்நாட்டுச் சேமிப்புகள் 7 சதவீதத்திலிருந்து 10 சதவீதத்திற்கு உயர்த்தப்படுவது அவசியமாகும். இந்த எடுகோள்களின் அடிப்படையில் முதல் திட்டத்தில் நுகர்ச்சி 17 சதவீதத்திலிருந்து 21 சதவீதமாக அதிகரிக்கும்.

பல்வேறு துறைகளில் ஏற்படும் முன்னேற்றத்தை அடிப்படையாகக்கொண்டு, நாட்டு வருமானத்தில் எதிர்பார்க்கப்படும் உயர்வைக் கீழ்வரும் அட்டவணை காட்டுகிறது.[1]

| இனம் | 1950-51 | 1955-56 | 1960-61 | கீழ்க்கண்ட வருடங்களில் அதிகமான சதவீதம் | |
|---|---|---|---|---|---|
| | | | | 1951-56 | 1956-61 |
| விவசாயமும் அதைச் சார்ந்த தொழில்களும் ... | 4,450 | 5,230 | 6,170 | 18 | 18 |
| சுரங்கத் தொழில் ... | 80 | 95 | 150 | 19 | 58 |
| தொழிற்சாலை நிறுவனங்கள் ... | 590 | 840 | 1,380 | 43 | 64 |
| சிறு தொழில்கள் ... | 740 | 840 | 1,085 | 14 | 30 |
| அமைப்புகள் (Constructions) | 180 | 220 | 295 | 22 | 34 |
| வாணிகம், போக்குவரத்து, செய்தித் தொடர்புகள் ... | 1,650 | 1,875 | 2,300 | 14 | 23 |
| தொழில்களும், பணிகளும் அரசாங்க நிர்வாகம் உள்பட. | 1,420 | 1,700 | 2,100 | 20 | 23 |
| மொத்த நாட்டு உற்பத்தி ... | 9,110 | 10,800 | 13,480 | 18 | 25 |
| தலா வருமானம் (ரூபாயில்) ... | 253 | 281 | 331 | 11 | 18 |

[1] Second Five Year Plan, p. 73. எண்கள் 1952-3 விலைகளில் ரூபாய்களைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

**28. உற்பத்தி இலக்குகள்:** அரசாங்க, தனியார் துறைகள் இரண்டிலுமாக, திட்ட காலத்தில் செய்யப்படும் முதலீடு காரணமாக, அடையவேண்டிய முக்கிய உற்பத்தி, முன்னேற்றத்திற்கான இலக்குகள் கீழ் வருமாறு:[1]

| இனம் | 1950 - 51 | 1955 - 56 | 1960 - 61 | 1955-6ஆம் ஆண்டைவிட 1960-61ஆம் ஆண்டு அதிகரிக்கும் சதவீதம் |
|---|---|---|---|---|
| விவசாயமும், சமூக நல முன்னேற்றத் திட்டங்களும்: உணவுப் பொருள்கள் (மிலியன் டன்கள்) ... | 54·0[2] | 65·0 | 75·0 | 15 |
| பருத்தி (மிலியன் பேல்) ... | 3·0 | 4·2 | 5·5 | 31 |
| எண்ணெய் வித்துகள் (மிலியன் டன்) ... | 5·1 | 5·5 | 7·0 | 27 |
| சர்க்கரை, சுத்தமாக்கப்படாத வெல்லம் (மிலியன் டன்) ... | 5·6 | 5·8 | 7·1 | 22 |
| சணல் (மிலியன் பேல்) ... | 3·3 | 4·0 | 5·0 | 25 |
| தேயிலை (மிலியன் பவுண்டு) ... | 613·0 | 644·0 | 700·0 | 9 |
| சமுதாய நல முன்னேற்றத் தொகுதிகள் ... | — | 622·0 | 1,120·0 | 80 |
| தேசீய விஸ்தரிப்புத் திட்டங்கள்.. | — | 500·0 | 3,800·0 | 660 |
| தேசீய விஸ்தரிப்பு, சமூக நல முன்னேற்றத் திட்டங்களால் பணியாற்றப்படும் மக்கள் தொகை (மிலியன் மக்கள்) ... | — | 80·0 | 325·0 | 306 |
| கிராமப் பஞ்சாயத்துகள் (ஆயிரம்) ... | 83·0 | 118·0 | 200·0 | 70 |

[1] Second Five Year Plan, pp. 58-61.
[2] In 1949-50.

| இனம் | 1950 - 51 | 1955 - 56 | 1960 - 61 | 1955-6 ஆம் ஆண்டைவிட 1960 - 61 ஆம் ஆண்டு அதிகரித்த சதவீதம் |
|---|---|---|---|---|
| **நீர்ப்பாசனமும் மின்சாரமும்** | | | | |
| நீர்ப்பாசனம் செய்யப்பட்ட நிலப்பரப்பு (மிலியன் ஏக்கர்) ... | 51·0 | 67·0 | 88·0 | 31 |
| மின்சாரம் (நிர்மாணிக்கப்பட்ட திறன், மிலியன் கிலோவாட்) ... | 2·3 | 3·4 | 6·9 | 103 |
| **கனிப்பொருள்கள்** | | | | |
| இரும்புத் தாதுப் பொருள்கள் (மிலியன் டன்) ... | 3·0 | 4·3[1] | 12·5 | 191 |
| நிலக்கரி (மிலியன் டன்) ... | 32·3[2] | 38·0[2] | 60·0[2] | 58 |
| **பெருவாரித் தொழில்கள்** | | | | |
| முழு எஃகு (மிலியன் டன்) ... | 0·9 | 1·3 | 4·3 | 231 |
| வார்ப்படத் தொழிற்சாலைகளுக்கு விற்கப்படும் வார்ப்பு இரும்பு (மிலியன் டன்) ... | 0·4 | 0·4 | 0·8 | 97 |
| அலுமினியம் (ஆயிரம் டன்)... | 3·7 | 7·5 | 25·0 | 233 |
| கன ரக எஃகு கொல்லுலை விற்பனைக்காக (ஆயிரம் டன்) ... | — | — | 12·0 | — |
| கன ரக எஃகு வார்ப்படங்கள் விற்பனைக்காக (ஆயிரம் டன்) ... | — | — | 15·0 | — |
| எஃகு அமைப்புகள் (ஆயிரம் டன்) ... | n. a. | 180·0 | 500·0 | 178 |
| படிகளாகப் பிரிக்கப்பட்ட இயந்திரச் சாதனங்கள் ... | 31·8 | 75·0 | 300·0 | 300 |
| சிமெண்ட் இயந்திரங்கள் (லட்ச ரூபாய்) ... | n. a. | 56·0[1] | 200·0 | 257 |
| சர்க்கரை இயந்திரங்கள் (லட்ச ரூபாய்) ... | n. a. | 28·0[1] | 250·0 | 779 |
| துணி இயந்திரங்கள், பருத்தி சணல் (லட்ச ரூபாய்) ... | n. a. | 412·0 | 1,950·0 | 373 |
| காகித இயந்திரங்கள் (லட்ச ரூபாய்) ... | — | — | 400·0 | — |
| **பெருவாரித் தொழில்கள்—தொடர்ச்சி** | | | | |
| விசை அழுத்தத்தால் இயங்கும் குழாய்கள் (ஆயிரம்)... | 34·0 | 40·0 | 86·0 | 115 |

[1] 1954 ஆம் ஆண்டில்

[2] காலண்டர் வருடங்களைக் குறிக்கிறது.

| இனம் | 1950 - 51 | 1955 - 56 | 1960 - 61 | 1955-6 ஆம் ஆண்டைவிட 1960-61 ஆம் ஆண்டு அதிகரித்த சதவீதம் |
|---|---|---|---|---|
| டீசல் எஞ்சின்கள் (ஆயிரம் குதிரைச் சக்தி) ... | n. a. | 100·0 | 205·0 | 105 |
| தானுக இயங்கும் வாகனங்கள் ... | 16,500·0 | 25,000·0 | 57,000·0 | 128 |
| இருப்புப்பாதை எஞ்சின்கள் ... | 3·0 | 175·0 | 400·0 | 129 |
| டிராக்டர்கள், 20-30 குதிரைச் சக்தி ... | — | — | 3,000·0 | — |
| சிமெண்ட் (மிலியன் டன்) ... | 2·7 | 4·3 | 13·0 | 202 |
| உரங்கள்— | | | | |
| அம்மோனியம் சல்பேட் (ஆயிரம் டன்) ... | 46·0 | 380·0 | 1,450·0 | 282 |
| பாஸ்பேட்டிக்ஸ் (ஆயிரம் டன்) ... | 55·0 | 120·0 | 720·0 | 500 |
| கந்தக அமிலம் (ஆயிரம் டன்) ... | 99·0 | 170·0 | 470·0 | 176 |
| ஆஷ் சோடா (ஆயிரம் டன்) ... | 45 0 | 80·0 | 230·0 | 188 |
| காஸ்டிக் சோடா (ஆயிரம் டன்) ... | 11·0 | 36·0 | 135·0 | 275 |
| பெட்ரோலியம் சுத்தம் செய்தல் (மிலியன் டன்) ... | — | 3·6 | 4·3 | 19 |
| மின்சார டிரான்ஸ்பார்மர்கள் 33 KV, அதற்குக் குறைவானதும் (ஆயிரம் KVA) ... | 179·0 | 540·0 | 1,360·0 | 151 |
| மின்சாரக் கேபிள், ACSR கடத்திகள் (டன்) ... | 1,420·0 | 9000·0 | 18,000·0 | 100 |
| மின்சார மோட்டார்கள் (ஆயிரம் குதிரைச் சக்தி)... | 99·0 | 240·0 | 600·0 | 150 |
| பருத்தித் துணிகள் (மிலியன் கஜம்) ... | 4,618·0 | 6,850·0 | 8,500·0 | 24 |
| சர்க்கரை (மிலியன் டன்) ... | 1·1 | 1·7 | 2·3 | 35 |

| இனம் | 1950-51 | 1955-56 | 1960 61 | 1955-6 ஆம் ஆண்டை விட 1960-61 ஆம் ஆண்டு அதிகரிக்கும் சதவீதம் |
|---|---|---|---|---|
| காகிதம், காகித அட்டை (ஆயிரம் டன்) ... | 114·0 | 200·0 | 350·0 | 75 |
| சைக்கிள் (ஆயிரம்)[1] ... | 101·0 | 500·0 | 1,000·0 | 82 |
| தையல் இயந்திரங்கள்[1] (ஆயிரம்). | 33·0 | 110·0 | 220·0 | 100 |
| மின்சார விசிறிகள் (ஆயிரம்) ... | 194·0 | 275 0 | 600·0 | 118 |
| போக்குவரத்தும் செய்தித் தொடர்புகளும். | | | | |
| இருப்புப் பாதைகள்— | | | | |
| பிரயாணிகளின் புகைவண்டி மைல்கள் (மிலியன்) ... | 95·0 | 108·0 | 124·0 | 15 |
| சரக்குகள் (மிலியன் டன்). | 91·0 | 120·0 | 181·0 | 51 |
| சாலைகள்— | | | | |
| நாட்டில் உள்ள பெருஞ்சாலைகள் (ஆயிரம் மைல்) ... | 12·3 | 12·9 | 13·8 | 7 |
| தளம் பரப்பப்பட்ட சாலைகள் (ஆயிரம் மைல்) ... | 97·0 | 107·0 | 125·0 | 17 |
| கப்பல் தொழில்— | | | | |
| கரையோரமும் அதைச் சார்ந்ததும் (லட்சம் டன்)[2] ... | 2·2 | 3·2 | 4·3 | 34 |
| கடல் கடந்து செல்பவை (லட்சம் டன்)[3] ... | 1·7 | 2·8 | 4·7 | 68 |
| துறைமுகங்கள்— | | | | |
| கையாளும் திறன் (மிலியன் டன்) ... | 20·0 | 25·0 | 32·5 | 30 |
| தபால் தந்திகள்— | | | | |
| தபால் நிலையங்கள் (ஆயிரம்). | 36·0 | 55·0 | 75·0 | 36 |
| தந்தி நிலையங்கள் (ஆயிரம்) ... | 3·6 | 4·9 | 6·3 | 28 |
| தொலைபேசிகள் (ஆயிரம்) ... | 168·0 | 270·0 | 450·0 | 67 |

[1] ஒழுங்காக நிர்மாணிக்கப்பட்ட பகுதி மாத்திரம்.

[2] டாங்கர்கள் உள்பட.

[3] சுற்றிவரும் கப்பல்களின் டன் உள்பட.

| இனம் | 1950-51 | 1955-56 | 1960-61 | 1955-6 ஆம் ஆண்டை விட 1960-61 ஆம் ஆண்டு அதிகரிக்கு சதவீதம் |
|---|---|---|---|---|
| **கல்வி—** | | | | |
| பள்ளி செல்லும் குழந்தைகள், அந்த வயதின் தொகுதியிலிருந்தும் குழந்தைகளின் வீதமாக : | | | | |
| முதல்நிலை (6-11 வயதின் தொகுதி) ... | 42·0 | 51·0 | 63·0 | — |
| நடுத்தர நிலை (11-14 வயதின் தொகுதி) ... | 14·0 | 19·0 | 22·5 | — |
| உயர்நிலை இடைநிலை (14-17 வயதின் தொகுதி) ... | 6·4 | 9·4 | 12·0 | — |
| ஆரம்ப / ஆதாரப் பள்ளிகள் (லட்சம்) ... | 2·2 | 2·9 | 3·5 | 19 |
| முதல்நிலை / நடுத்தர இடைநிலைப் பள்ளிகளில் உள்ள ஆசிரியர்கள் (லட்சம்) ... | 7·4 | 10·3 | 13·4 | 30 |
| ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகள் | 835·0 | 1,136·0 | 1,412·0 | 24 |
| ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளில் சேருவோர் (ஆயிரம்) | 75·6 | 103·5 | 134·2 | 30 |
| **சுகாதாரம்—** | | | | |
| மருத்துவ நிறுவனங்கள் (ஆயிரம்) ... | 8·6 | 10·0 | 12·6 | 26 |
| மருத்துவ மனைப்படுக்கைகள் (ஆயிரம்) ... | 113·0 | 125·0 | 155·0 | 24 |
| மருத்துவர்கள் ... | 59·0 | 70·0 | 82·5 | 18 |
| நர்ஸ்கள் (ஆயிரம்) ... | 17·0 | 22·0 | 31·0 | 41 |
| மருத்துவப் பெண்கள் (mid (wives)-ஆயிரம்) ... | 18·0 | 26·0 | 32·0 | 23 |
| நர்ஸ் - தாய் (dais), தாய் (dais) (ஆயிரம்) ... | 4·0 | 6·0 | 41·0 | 583 |
| சுகாதார அலுவலர், சுகாதார மேற்பார்வையாளர் (ஆயிரம்) ... | 3·5 | 4·0 | 7·0 | 75 |

**29. வளங்கள் :** கீழ்வரும் அட்டவணையில் திட்டத்திற்கு வேண்டிய நிதிக்கான வளங்களின் மதிப்பீடு கொடுக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், 1955-6 வரிவிதிப்பு வீதங்களின் அடிப்படையில் மத்திய, மாகாண அரசாங்கங்களின் வரவு ரூ. 5,000 கோடி என எதிர்பார்க்கப்படுகிறது. மொத்தச் செலவு ரூ. 4,650 கோடி என மதிப்பிடப்பட்டு இருப்பதால் மீதி ரூ. 350 கோடி முன்னேற்றக் காரியங்களுக்காகச் செலவிடப்படலாம். அதிக வரிவிதிப்பினால் வரும் வருமானத்தின் இலக்கு ரூ. 450 கோடியாகும்; இதில் மத்திய மாநில அரசாங்கங்கள் ஒவ்வொன்றும் ரூ. 225 கோடி அளிக்கும். இந்த மூலத்திலிருந்து கிடைக்கும் மொத்தத் தொகை ரூ. 800 கோடியாகும். இது நாட்டு மொத்த வளங்களில் ஆறில் ஒரு பாகத்தையே குறிக்கிறது. எனினும் இது போதாது; பற்றுக்குறை நிதியாக்கத்தைக் குறைக்கக் கடன்கள் மூலமும், வரிவிதிப்பின் மூலமும் அதிகப் பணம் திரட்ட வேண்டும். முதல் திட்ட காலத்தில் இருந்த உயர்ந்த கடன் வாங்கும் நிலையை வைத்துக்கொண்டு பார்க்கும் பொழுது, பொதுமக்களிடமிருந்து கடன் ரூ. 700 கோடி கிடைக்கும்

| | | | |
|---|---|---|---|
| நடைமுறை வருமானங்களிலிருந்து உபரி | ... | 800 | |
| 1955—6 வரி வீதங்களில் | ... | | 350 |
| அதிக வரி விதிப்பு | ... | | 450 |
| பொது மக்களிடமிருந்து வாங்கிய கடன்கள் | ... | 1,200 | |
| சந்தைக் கடன்கள் (market loans) | ... | | 700 |
| சிறு சேமிப்புகள் | ... | | 500 |
| மற்ற வரவு செலவுத் திட்ட மூலங்கள் | ... | 400 | |
| இருப்புப் பாதைகளின் பங்கு | ... | | 150 |
| வருங்கால வைப்பு, மற்ற வைப்புகள் | ... | | 250 |
| வெளியிலிருந்து திரட்டப்படும் வகைகள் | ... | 800 | |
| பற்றுக்குறை நிதியாக்கம் | ... | 1,200 | |
| மற்ற நடவடிக்கைகளால் துண்டு விழும் பகுதிகளை நிரப்புதல் | ... | 400 | |
| | | 4,800 | |

என மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இக் காரியத்திற்குச் சமூகக் காப்புத்திட்டங்களை விரிவாக்குவதும், ஆயுள் காப்புத் திட்டத்தைத் தேசீய மயமாக்குதலும் நல்ல வளங்களைத் தரும் எனத் தெரிகிறது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் அனுபவத்தைக் கொண்டு, சிறு சேமிப்புத் திட்டத்தின் இலக்கு ரூ. 500 கோடியாக இருக்கிறது. இருப்புப்பாதைகளின் பங்கு வேண்டுமென்றே ரூ. 150 கோடியாக, குறைந்த அளவில் வைக்கப்பட்டது. அதிகத் தேய்மானத்திற்கும் முன்னேற்ற செலவுகளுக்கும் இடமளிக்கவே அவ்வாறு செய்யப் பட்டது. ஆனால் உண்மையில் இப் பங்கு கணிசமான அளவு அதிக மாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. வருங்கால வைப்பும், மற்ற வைப்புகளும் ரூ. 250 கோடி கிடைக்கும். அதில் ரூ. 150 கோடி, வருங்கால வைப்புவழியாகவும், ரூ. 100 கோடி முன்னதாகக் கொடுத்த கடன்களைத் திருப்பிப் பெறுவதாலும், இதர மூலதன வரவுகள் வழி யாகவும் கிடைக்கும். வருங்கால வைப்பைப் பொறுத்தமட்டில், ஒவ்வொரு வருடமும் சேர்க்கப்படும் வீதம் ஓரளவிற்கு அதிகமாகும், எனத் திட்டம் அனுமானிக்கிறது; அதாவது ரூ. 23·6 கோடியிலிருந்து ரூ. 30 கோடிக்கு மீதியிருக்கும். முதலீடு வெளி உதவியாலும் (ரூ. 800 கோடி), பற்றுக்குறை நிதியாக்கத்தாலும் (ரூ. 1,200 கோடி), அதிக நாட்டு வளங்களாலும் (ரூ. 400 கோடி) நிரப்பப்படும்.

இப்பொழுது நாம் திட்ட சம்பந்தமான சில முக்கிய காரியங்களை, கிராமச் சிறுபான்மைத் தொழில்களிலிருந்து ஆய்வுரை செய்வோம்.

**30. கிராமச் சிறுபான்மைத் தொழில்கள்:** (இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்) குழு[1] 1955ஆம் ஆண்டு ஜூன் மாதம் 28 ஆம் நாள், திட்டக்குழுவின் தீர்மானத்தினால் இக் குழு அமைக்கப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய பாகமாகிய சிறுபான் மைத் தொழில்களுக்கு ஒதுக்கப்பட்ட வளங்களை உபயோகிக்கத் திட்ட மிடுவதற்காக அக் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. கீழ் வருவன அதன் முக்கிய நோக்கங்கள்: (i) திட்ட காலத்தில் சாதாரணமாக எல்லோராலும் வாங்கப்படும் நுகர்ச்சிப் பொருள்களின் அதிக உற்பத்தியில் ஒரு பெரும் பங்காவது கிராமச் சிறுபான்மைத் தொழில் களால் அளிக்கப்படவேண்டும் (ii) இந்தத் தொழில்களால் கொடுக் கப்படும் வேலை வாய்ப்புகள் படிப்படியாக அதிகமாகவேண்டும். இந்தத் தொழில்களில் உற்பத்தியும் விற்பனையும் முக்கியமாகக் கூட்டுறவு அடிப்படையில் அமையவேண்டும். கீழ் வரும் மூன்று பிரிவுகளில் (31 லிருந்து 33 வரை) 1955 ஆம் ஆண்டு அக்டோபர்

[1] *அதன் தலைவர் பேராசிரியர் டி. ஜி. கார்வே* (Professor D. G. Karve) *அவர்களின் பெயரால் கார்வே குழு என அழைக்கப்படுகிறது.*

மாதம் வெளியிடப்பட்ட குழுவின் அறிக்கையைச் சுருக்கமாகத் தருகிறோம்.[1]

31. அடிப்படை அணுகுநெறி: குழு தனது அறிக்கையில் குறிக்கும் முதல் கருத்து, இனியும் பொறிநுட்பத் துறையில் வேலையின்மை இருக்கக் கூடாது என்பதுதான். அக் குழு குறிப்பிட்டபடி, நவீன பொறி நுட்பங்களை வேகமாகப் புகுத்துவதின் மூலம், மொத்த வேலையின்மீதான சரியீடு இந்தியாவிலுள்ள தனிப்பட்ட சூழ்நிலையில் உடனே கிடைக்காது. அக் குழு மேலும் கூறியதாவது: நாட்டிலுள்ள பெரிய அளவினதான வேலையின்மையும், வேலைக் குறைவும் மிகச் சிக்கலானதொரு பிரச்சினையை உண்டாக்குவதால், முன்னேற்றத்திற்கான எந்தத் திட்டமும் இதைச் சரி செய்ய முயல வேண்டும். அரசாங்கத்தின் நிதி அல்லது நிர்வாக வளங்கள், இப் பிரச்சினையைச் சமாளிப்பதற்காகத் துயருதவி அல்லது சமூகக் காப்புத் திட்டத்தை அமைத்து அளிக்கப் போதுமானவையாக இல்லை. சிறுபான்மைத் தொழிலில் ஈடுபட்டு இருக்கும் கிராம மக்கள் மத்தியில் கடுமையான வேலையின்மை நிலவுகிறது. ஆகவே, அவர்களுடைய வழக்கமான தொழில்களில் அளிக்கப்படும் துயருதவியே மிகச் சிறந்தது எனக் கருதலாம். மேலும், நாட்டில் ஏற்கெனவே மூலதனத்துக்கும், பயிற்சி பெற்ற தொழிலாளர்களுக்கும் பற்றாக்குறை உள்ளதால், ஏற்கெனவே உள்ள தொழிலாளர்களையும் மூலதன அமைப்பையும் அப்படியே உபயோகப்படுத்துவதுதான் நல்லது; நாட்டில் அதிக அளவில் இயலாத மூலதன வளங்களை, நவீன சாதனங்களை வாங்குவதிலும், தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதிலும் உபயோகப்படுத்துவது நல்லது அன்று.[2] நுகர்வோர் பொருள்கள் உற்பத்தியில் நவீன முறைகளை மிக அதிகமாகப் பின்பற்றுவதானது பொருளாதாரப் பொதுச் செலவுகளை அதிகமாக்குவதுடன், புறச் சிக்கன அமைப்பை ஏற்படுத்தவேண்டிய அவசியத்தையும் உண்டாக்குகிறது. ஆனல் அத்தகையதோர் ஏற்பாடு, நாடு ஏற்றத்தாழ்வுள்ள முன்னேற்றப் பாதையில் செல்வதைக் தடுக்கவும், அயல் நாடுகள்மீது தொடர்ந்து நுகர்வோர், பொருள்கள் அளிப்பிற்காகச் சார்ந்திருப்பதை நிறுத்துவதும் அவசியமாகும்; அது வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்க்கவும் பெரிதும் உதவும். ஏற்கெனவே இருக்கும் உற்பத்தி அலகுகளை முழுவதும் உபயோகிக்கும் இத் திட்டத்தைச் செயலாற்றுவதில் வருங்காலப் பொருளாதார முன்னேற்றம் அறிவுப்

[1] Report, அத்தியாயங்கள் 3, 4, 5 பக்கங்கள் 14 - 32.

[2] ஒரு மதிப்பீட்டின்படி, நுகர்வோர் பொருள்களை உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலையில் வேலைக்கு அமர்த்தப்படும் ஒவ்வொரு புதிய ஆளுக்கும், சுமார் பத்து அல்லது பன்னிரண்டு ரூபாய் மதிப்புள்ள முதலீடு செய்ய வேண்டியதாக இருக்கிறது.

பாதையில் செல்வதற்கு எவ்விதத் தடையுமில்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். புதிதாக மூலதன முதலீடுகள் செய்யும்பொழுது அவைகளை முன்னேற்றமடைந்த சாதனத்திலோ, ஏற்கனவே இருக்கும் சாதனத்தை மாற்றி அமைத்து அல்லது அதனுடன் சில வற்றைச் சேர்த்து முன்னேற்றமடையச் செய்வதிலோ செலவழிக்க வேண்டும். முன்னேற்றத்தில் சில படிகளைத் தாண்டிய உடனேயே பழையதாகிவிடும் சாதனத்தைத் தவிர மற்றவையில்தான் முதலீடு செய்யவேண்டும்.

பன்முகப் படுத்தப்பட்ட பொருளாதார அமைப்புடன் இத் திட்டம் இணைக்கப்படல் வேண்டும். தொழில் முறைகளில் செய்யும் மாற்றங்கள், நாடு முழுவதும் சிதறிக் கிடக்கும் சில அலகுகளிலும் மேற்கொள்ளக் கூடியதாக இருத்தல் வேண்டும். இப்பொழுது இருக்கும் நிலையை உறுதிப்படுத்தவும், சிறுபான்மைக் கிராமத் தொழில்களின் உற்பத்தித் திறனை முழுவதும் உபயோகிக்கவும், குழு பொதுவாக இப்பொழுது இருக்கும் பெருவாரித் தொழில்களின் திறனை அதிகரிப்பதைத் தடுக்குமாறு பரிந்துரைத்தது. சிறுபான்மைத் தொழிலின் உச்சத் திறனிற்கு மேல் தேவைகள் செல்லுமாயின், தொழில் முறைகளில் முன்னேற்றம் காண்பது அவசியமாகிறது. அதன் மாற்றம் எவ்வாறு இருக்குமெனில், சிறிய தொழில், முன்னேற்றமடைந்த, நவீன, ஆனால் பன்முகப்படுத்தப்பட்ட தொழிலாக மாறும்; அதன் அமைப்பு இடத்திற்கோ, சமூக அமைப்பிற்கோ எவ்வித இடையூறும் இராது. நகரங்களில் கூட்டமாக அமைந்திருக்கும் தொழில்களுக்கு, தொழிலாளர்களைச் செல்லும்படிச் செய்யும் பொழுது ஏற்படும் அதிகமான சமூக, பொருளாதாரச் செலவு இவ்விதமாகத் தவிர்க்கப்படலாம்.

**32. கோட்பாடுகளும் கொள்கைகளும், (i) பன்முகப்படுத்துதல்:** கிராமத்திலோ அல்லது கிராமத்தைச் சார்ந்த பகுதிகளிலோ, நிலத்தின் மீது அதிக மக்கள் தொகை நெருக்கடியைத் தீர்க்கச் சுலப மானவழி என்னவெனில், விவசாயத்தைத் தவிர, மற்ற பயன் தரும் வேலைகளை அளிப்பதாகும். இது கிராம மக்கள் தங்கள் திறமைகளையும், வளங்களையும், அமைப்பையும் முன்னேற்றிக் கொள்ள வேண்டிய அவசியத்தை உண்டாக்குகிறது. ஆகவே தொழில் உற்பத்தியில் அதிகத் திறம் உடைய முறைகளைப் புகுத்தும் பொழுது, கிராமத்தில் ஏற்கெனவே வேலையில் இருப்போர் இம் முறைகளை முதலில் புகுத்த வாய்ப்பளிக்க வேண்டும். இல்லையெனில் நகரங்களின் நலனுக்காக, கிராமங்களின் நலன் பயன்படுத்தப்படும்.

சிறிய தொழில் அலகுகளைப் பெரிய கிராமங்கள், சிறிய நகரங்கள், இவற்றின் பகுதிகளில் பரப்புவதின் மூலம், கிராமத் தொழில்களின்

வளர்ச்சியையும், அவை நவீன முறைகளில் அமைவதையும், மிகச் சிக்கனமாக அடைய முடியும். பல கிராமங்கள் சேர்ந்து ஒரு தொகுதியாக மாறி, ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு தொழில் மையமும், நகர மையமும் அமைவதுதான், படிப்படியாக வரவேண்டிய தொழில் நடவடிக்கைகளின் அமைப்பாகும். அதைப்போல், இச் சிறிய நகர மையங்கள், பெரிய மையங்களுடன் இணையப்பெறுதல் வேண்டும்; இவ்வாருகச் செழித்தோங்கிய கிராமப் பொருளாதாரத்தின் அடிப்படையில் ஒரு வகையான பிரமிட்டை (pyramid) எழுப்ப வேண்டும்.[1]

(ii) **கிராம மின்சார வசதி :** பன்முகப்படுத்தப்பட்ட பொருளாதாரத்தின் அமைப்பு நோக்குகளும், பொருளாதார நோக்குகளும், குறைந்த செலவில் கிடைக்கும் மின்சாரத்தைப் பொறுத்தே இருக்கின்றன. தற்பொழுது மின்சாரச்சுங்கம், அநேகமாகச் சிறிதளவில் நுகர்வோரைவிடப் பெரிதளவில் நுகர்வோருக்கு அனுகூலம் காட்டுகிறது; கிராமத்திலிருக்கும் நுகர்வோரைக் காட்டிலும் நகரத்திலிருக்கும் நுகர்வோருக்குச் சலுகை காட்டுகிறது. பன்முகப்படுத்தும் கோட்பாட்டை மனத்தில் வைத்துக் கொண்டு, மின்சார உற்பத்தி, மின்சாரப் பங்கீடு, மின்சாரத்தை விற்றல் முதலியவைகளைப் பற்றிய கோட்பாட்டை மாற்றியமைத்தல் வேண்டும். மின்சாரம் அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்; ஆகையால் அதனைத் துவக்குவது, செயல் படுத்துவது பற்றிய கோட்பாடு, லாபம் அல்லது இழப்பு என்ற வியாபார நோக்கில் செல்லக்கூடாது.

(iii) **அனுமதி வழங்குதல் :** கிராம, சிறுபான்மைத் தொழில்கள் சம்பந்தப்பட்ட முன்னேற்ற திட்டங்களைப் பாதிக்கக்கூடிய, நுகர்ச்சிக்குத் தயாராக்கும் தொழில்கள், தொழில் நிறுவனங்கள் முதலியவற்றிற்கு அனுமதி வழங்கக்கூடிய அதிகாரத்தை மாநில அரசாங்கங்களுக்கு அளித்தல் வேண்டும். எல்லா அனுமதி வழங்கும் குழுக்களிலும் கிராம, சிறுபான்மைத் தொழில்கள் போதிய அளவில் பிரதிநிதித்துவம் பெற வேண்டும்.

(iv) **திட்டமிடப்பெற்ற அளிப்பு:** வாங்கும், விற்கும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாக, உற்பத்தியாளருக்கு வேண்டிய கச்சாப் பொருள்கள், சாதனங்கள், துணைக் கருவிகள் முதலியன அவர்களுக்குக் கிடைக்க வழி செய்ய வேண்டியது அவசியம். கிராம, சிறு

[1] 'சிறுபான்மை, இலக்குத் தொழில்கள், சிறிய நகரங்களைப் பெருவாரியாக அமைக்க ஏற்படுகின்றன. அவை நகரத்திற்கும், நடுவே தொடர்பை அமைக்கவும் தொழிலின் அளவை அதிகரிக்கவும், சிறப்பாக, கிராம இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தை ஊக்குவிக்கவும் பயன்படும்.' (Memorandum of Panel of Economists, 1955, Para 28).

பான்மைத் தொழில்களின் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்ய, வாங்கும், விற்கும் ஆரம்பச் சங்கங்கள் கூட்டுறவு அமைப்பின் ஒரு பகுதியாக ஆகவேண்டும். இந்தக் கூட்டுறவு முறை, விவசாய விற்பனை முறை, பொதுக் கூட்டுறவு கடன் வழங்கும் முறைகளுடன் நெருங்கி இணைக்கப்படல் வேண்டும். சிறுபான்மைத் தொழில்களின் உற்பத்திக்கு, ஓரளவுக்கு இலாபம் நிச்சயம் கிடைக்கவும், விற்பனைச் சந்தை உறுதியாகக் கிடைக்கவும், கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு நிலையான விலையில் உற்பத்தியை வாங்க உறுதி அளிக்கவேண்டும். ஆரம்ப கட்டத்தில் அவைகள் இவ்வாறு செயலாற்ற அரசாங்க உறுதிமொழி அவசியமாகும்.

ஒரு கூட்டுறவு முன்னேற்ற சேமிப்புக் கிடங்கு கூட்டுக் குழு (Co-operative Development and Warehousing Corporation), அமைக்கத் தேவையான சட்டம் இயற்றியபின், கிராம சிறுபான்மைத் தொழில்களின் உற்பத்திக்கான விற்பனைக்கு ஓர் ஏற்பாட்டையும் அதில் சேர்க்கவேண்டும்.

(v) **நிதி மூலங்களும், வழிகளும்:** ஆரம்ப நிலையில் கிராம, சிறுபான்மைத் தொழில்களுக்கு வேண்டிய போதுமான அளவு நிலை முதல் பொருள்களும், நடைமுறை மூலதனமும் அரசாங்கம் அளிக்க வேண்டும். அரசாங்க நிதிக் கூட்டுக் குழுக்கள் (State Finance Corporations), சிறுபான்மைத் தொழில்களுக்கு நீண்ட காலக் கடன்கள் அளிக்க உபயோகப்படுத்தப்படல் வேண்டும். இக் கூட்டுக் கழகங்களும் கூடியவரையில், (அ) உதவிக்காகச் செய்யப்படும் விண்ணப்பங்களின் தகுதியை ஆராய, (ஆ) தொடர்புகளை ஏற்படுத்த, (இ) கடன் திரும்பிப் பெற ஏற்பாடு செய்ய, கூட்டுறவு நிறுவனங்களை உபயோகித்தல் வேண்டும். கிராம முன்னேற்றத்திற்காகக் கடன் வழங்கும் திட்டம், ஒரு கோர்வையான பணியாதலால், விவசாய நிதிக்கும், தொழில் நிதிக்கும் ஒரே கூட்டுறவு நிறுவனத்தை உபயோகிக்கலாம். கூட்டுறவு அடிப்படையில் இயங்கும் சிறு உற்பத்தியாளர்களின் நிதி நிலை, அத் திட்டத்தின் விவசாய முன்னேற்றத்திற்கான பகுதியுடன் இணைந்து செல்வது பொதுக் கொள்கையாக இருத்தல் வேண்டும். சாதாரணமாக, தொழில் கூட்டுறவுகளின் தேவைகளை, அவைகளுக்கு மிக அருகே இருக்கும் கூட்டுறவு நிதி நிறுவனங்களால் பூர்த்தி செய்ய முடியாத பொழுது இந்திய அரசாங்க பாங்கின் (State Bank of India) வளங்கள் உபயோகிக்கப்படல் வேண்டும். இக் காரியத்தைத் திறமையான முறையில் செய்ய, இந்திய அரசாங்கப் பாங்கிற்கும் கூட்டுறவு நிறுவனங்களுக்கும் இடையே நிரந்தரமான செய்தித் தொடர்பும், ஆலோசனையும் இருந்துகொண்டே இருக்கவேண்டும். கிராம, சிறுபான்மைத் தொழில்களுக்கு நிதியுதவி அளிப்பதில் ரிசர்வ் பாங்கு,

இந்திய அரசாங்கப் பாங்கு, அரசாங்க நிதி கூட்டுக் குழுக்கள், மத்தியக் கூட்டுறவும் பாங்குகள் ஆகியவை யாவும் சேர்ந்து ஒரு திட்டமான கொள்கையை வரையறை செய்யவேண்டும். எனினும், நல்ல இணைக்கப்பட்ட அமைப்புடன் ஏற்படுத்தப்பட்ட நிறுவனங்கள் கடன் வாங்கும் வரை, அரசாங்கம் நேரடி உதவி அளிப்பது தேவை. நிதி விவசாயக் கூட்டுறவைவிட, தொழில் கூட்டுறவுகளின் மூலதனப் பங்குகளை அரசாங்கமும் எடுத்துக்கொள்ளுவது மிக அவசியமானது. கிராமக் கடன் மதிப்பீட்டு அறிக்கை (Rural Credit Survey Report), நாட்டு விவசாயக் கடன் நிதி (National Co-operative Development Fund) ஆகியவற்றைக் கூட்டுறவு அடிப்படையில் அமைத்த குடிசைத்தொழில்களை வளர்க்க உபயோகிக்கலாம் எனக்கருதுகிறது. சாதாரணமாக நிதியுதவி செய்யக் கூடிய நிறுவனங்கள், இந்திய அரசாங்கப் பாங்கு, அரசாங்க நிதியுதவிக் கூட்டுக்குழுக்கள், வாணிக பாங்குகள் உள்பட, சிறு தொழில் உற்பத்தியாளருக்குக் கடன் வசதிகளை விரிவாக்க வழி வகைகளைக் காண முயலவேண்டும்.

**33. ஆலோசனை நடவடிக்கைகளின் வரைச் சட்டம்:** கார்வே குழுவின் பரிந்துரைகளின் முதல் தொகுதி, பன்முகப்படுத்தப்பட்ட சிறுபான்மைத் தொழில்கள், எந்த நிலையான இடத்தை ஆதரமாகக் கொண்டு துவக்க வேண்டும் என்பதைப் பற்றியது. பல காலமாக இயங்கிவரும் சிறுபான்மைத் தொழில்களின் பக்கத்தில், நிறைந்த தொழிலாளர்கள் வேலை செய்யும் புதுமையான தொழில்களும் இருக்குமாயின், அச் சிறு தொழில்கள் சீரமைக்கப்பட்டுப் புதுப்பிக்கப்படும் வரையாவது புதுமைத் தொழில்கள் ஒரு நிலைக்கு மேல் விரிவாகிச் செல்லுவதைத் தடுக்க வேண்டும்.[1] அப்பொழுதும் கூட தற்காலப் பெருவாரித் தொழில்களைவிட, முன்னேற்றமடைந்த பன்முகப்படுத்தப்பட்ட அலகுகளையே விரிவாக்குதல் வேண்டும். எந்தெந்த இடங்களில் நெடுங்காலத் தொழில் அலகுகள் இல்லையோ, அங்கெல்லாம். பெருவாரித் தொழில்களுக்கு அனுமதி வழங்குவதற்குப் பதிலாக, பன்முகப்படுத்தப்பட்ட தொழில் முறைகளில் திறமை வாய்ந்த அலகுகளையே நிறுவ வேண்டும்.

பரிந்துரைகளின் இரண்டாம் தொகுதி, பழங்காலத் தொழிலாளர்களின், நிதி நிலை, தொழில்முறை, தொழிலாளர் அமைப்புகள் ஆகியவைகளைப்பற்றியதாகும்.

[1] கிராம, சிறுபான்மைத் தொழிலுக்குச் சில பொருள்களின் உற்பத்தியை ஒதுக்கிக்கொடுக்கும் யோசனைக்குக் கார்வே குழு ஆதரவு அளிக்கவில்லை ; ஏனெனில் நடைமுறை உற்பத்தியில் இவ்வாறு பிரித்தளிப்பது முடியாதது ஆகும். ஒரு நிலையில் ஒதுக்கிடு செயவது பொருத்தமாயிருக்கலாம். இன்னொரு நிலையில் பொருத்தமற்றதாய் இருககலாம். இரண்டாவதாக உற்பத்தி, விஸதரிப்பு இவை இரண்டையும் கட்டுப்படுத்துவதன் மூலமும், புது நிறுவனங்களுக்கு அனுமதி வழங்குவதைக் கட்டுப்படுத்துவதின் மூலமும் ஒதுக்கிடு செய்வதின் பலனை அடையமுடியும்.

மூன்றுவதாக, சலுகை காட்டி வாங்குதல் நிச்சயமான சந்தைகள், விலை வேறுபாட்டுயர்வு முதலியவைகளின் மூலமாய்ப் போதுமான அளவு ஊக்கமளித்து உற்பத்தி இலக்குகளைப் பூர்த்தி செய்ய ஆவன செய்யவேண்டுமென்று குழு கூறியது.

அக் குழு பெருவாரித் தொழில்கள் மீது ஆயத்தீர்வைகள் விதிப்பதை வரவேற்றது. ஏனெனில் அது, அதே பொருள்களை உற்பத்தி செய்யும் சிறுபான்மைப் தொழில்களுக்கு ஊக்கமளிக்கும் இத் தீர்வைகளுக்கு மூன்று நோக்கங்கள் இருத்தல் வேண்டும்; (i) சிறுபான்மைத் தொழில்களின் மறுசீரமைப்பிற்காக நிதி திரட்டுதல் (ii) அரசாங்கத்தின் உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் கொள்கையாலும், அதன் விளைவாக ஏற்படும் போட்டிக் குறைவாலும், விலை உயர்வாலும், பெருவாரித் தொழில் உற்பத்தியாளர்களுக்குக் கிடைக்கும் உபரி லாபத்தை எடுத்துவிடல் (iii) சிறுபான்மைத் தொழில்களுக்குச் சாதகமாக விலை வேறுபாட்டு உயர்வுகளை ஏற்படுத்துதல்.

கடைசியாக, சமூகப் பொருளாதாரப் பொதுச் செலவுக் (overhead)காகவும், திறமையான போக்குவரத்து, நிதி, கடன் வசதி, தண்ணீர், மின்சார வசதி, தொழில் முறைப் பயிற்சி, ஆலோசனைகள் இவைகள் அடங்கிய புறச்சிக்கனங்களுக்காவும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தல் அவசியம்.

சுருங்கக் கூறின், சிறுபான்மைத் தொழில்களை ஆதரிக்கும் கொள்கைக்கான காரணங்கள் பின்வருமாறு: (i) முதற் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கள், நிறைய முதலீடு செய்வதுடன், உற்பத்தி செய்யாத நுகர்வோர் பொருள்களின் தேவையையும் அதிகரிக்கின்றன. அதே சமயத்தில் அடிப்படைத் தொழில்களான போக்குவரத்து, சுரங்கத் தொழில் முதலியவற்றில் எவ்வளவு இயலுமோ, அந்த அந்த அளவு முதலீடு செய்வது அவசியம். நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் தொழில்களில் எவ்வளவு குறைவாக முதலீடு செய்ய இயலுமோ, அவ்வளவு குறைவாகச் செய்ய வேண்டும். நுகர்வோர் பொருள்களுக்குத் தேவை அதிகமாகும்பொழுது, அந்த உற்பத்தி, மூலதனம் குறைவாக இருக்கவேண்டும் அல்லது சிறுபான்மைத் தொழில்களின் கைகளில் விடப்படவேண்டும். (ii) சிறுபான்மைத் தொழில்கள் நாடு முழுவதும் சிதறிக் கிடக்கின்றன. உற்பத்திப் பெருக்கமும், வாங்குந் திறனும் சிதறிக் கிடக்கின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்காகக் கொடுக்கப்படும் ஊக்கம் தானாகவே நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பரவிவிடும்; கிராமப் புறங்களும், சிறு நகரங்களும் குடிசைத் தொழில்களுக்கு அளிக்கும் ஊக்கத்தினால் மிகுந்த பயன் அடையும். நகரத்திற்கும் கிராமத்திற்கும் இடையேயுள்ள பொருளாதார ஏற்றத்

தாழ்வுகள் மறையும்; பொருளாதார வளங்களின் சர்வாதீனமும், ஒருமுகச்செறிவும் குறையும். அல்லது வேறுவிதத்தில் கூறவேண்டுமாயின், சமூதாயம் சோஷலிச அமைப்பை ஏற்றுக் கொள்ளத் துவங்கும்.[1]

34. டாக்டர் பி. கே. மடான், கார்வே அறிக்கையைப்பற்றிக் கூறியவை (Dr. B. K. Madan on the Karve Report): டாக்டர் பி. கே. மடான் கார்வே குழுவின் அறிக்கையைப்பற்றிய குறிப்பில் இக் கருத்துகளைக் கூறுகிறார்: (i) குழு, வேலை நிறைவைக் கொள்கையின் முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கிறது; முன்னேற்றமடைந்த முறைகளை மேற்கொள்வதையும், உற்பத்தியைப் பெருக்குவதையும், வேலைக்கு எவ்விதக் குறைபாடும் வராத அளவிற்குத்தான் ஏற்றுக் கொள்கிறது.

(ii) முன்னேற்றமடைந்த முறைகள் வேலையைச் சிக்கனம் செய்வதால், தற்காலீகமாகச் சில தொழில்களில் வேலையின்மை ஏற்படலாம்; ஆனால் குறிப்பிட்ட துறைகளில் வேலையைக் காப்பாற்றுவதை விட, முன்னேற்றத் திட்டத்தில் வேலையைப்பற்றிய எல்லா இடைச்சிக்கல்களையும் ஒன்றாகச் சேர்க்க வேண்டும்.

(iii) நாம் உடனே வேலைக்கு ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றிய எண்ணத்தில் ஆழ்ந்து இருப்போமாகில் நுகர்வோர் பொருள்கள் உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு, ஒப்புமையில் திறம் குறைந்த முறைகளை அனுமதிக்கிறோம்; அது உற்பத்தி, வருமானம் இவைகளின் அதிகரிப்பைத் தடுக்கிறது. மேலும் வளரும் வருமான நிலையில் முன்னேற்றத்திற்கான வழியையும் கருத்தையும் வகுத்துக் கொடுப்பன, பலவகைப்படுத்தப்பட்ட உற்பத்தியும், வேலையுமே; அவற்றையும் இது தடுக்கிறது.

(iv) குழு ஆதரித்த ஆலோசனையாகக் கூறும் இன்னொரு கருத்து, பழங்காலத் தொழிலாளர் இருக்கும் இடத்திற்கே வேலையை அனுப்புவதாகும். இது பாட்டாளி இடம் பெயராமையை (Immobility of labour) எவ்விதத்திலும் சரி செய்யப்போவதில்லை; தொழிலாளர்களைத் திறமை மிகுந்த புதுவழிகளைக் கடைபிடிக்கத் தூண்டப் போவதுமில்லை.

(v) இந்தியாவின் தனிப்பட்ட நிலையில் நவீன தொழில் முறைகளைப் புகுத்துவதால், மொத்த வேலையில் ஏற்படும் சரியீட்டு விளைவுகள் உடனே ஏற்படா என்று தனது கூற்றை அலசிப் பார்க்காமல், விளக்காமல் அக் குழு கூறுகிறது. ஆனாலும் இந்தத் தனிப்

[1] கொள்கையை உருவாக்குவதில் முக்கியப் பங்கு எடுக்கும். ஆனால் அதிகமாகப் பேசப்படாத இன்னொரு கருத்து, காந்தியத்தின் மிகச் சிறந்த சமுதாய நோக்கு ஆகும்; இந் நோக்கு பன்முகப்படுத்துதல், கிராமச் சுய தேவைப் பூர்த்தி, இயந்திரத் தொழில்களை எதிர்த்தல் ஆகியவற்றை ஆதரிப்பதாகும்.

பட்ட இந்திய நிலையின் அடிப்படையில் அக் குழு, திறமை மிகுந்த தொழில் முறைகளைக் கையாளும் தொழில்களுக்கு உச்சவரம்பு விதிக்கவும், விஸ்தரிப்பைத் தடுக்கவும் வேண்டுகிறது; இது சாதாரண முன்னேற்ற வழியினின்று அடிப்படையில் மிக விலகியதொரு கருத்தாகும்.

(vi) நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் பெருவாரித் தொழில்கள் மீது உச்ச வரம்பு விதிப்பதின் நோக்கம், நுகர்வோர் பொருள்களுக்கு ஏற்படும் அதிகத் தேவைகளை சிறுபான்மைத் தொழில்களின் உற்பத்தி திருப்தி செய்யும்படி விட்டுவிடுவது ஆகும். சந்தைகள், அளிப்பு, நிதி, வீடுகள் முதலியவற்றை அமைத்துச் சிறுபான்மைத் தொழில்களை வளர்க்க வேண்டுமெனவும், கைத்தொழில்களுக்கு நிதியுதவிகளையும், கடன்களையும் அளிப்பதன் மூலம் முன்னேற்றமடைந்த முறைகளைக் கைக்கொள்ள உதவவேண்டுமெனவும் அக் குழு பரிந்துரைத்துள்ளது. அக் குழுவின் பரிந்துரைகளுள் இப்பகுதி பலவீனமானது. இந்த விளைவை ஏற்படுத்தத் தேவையான முயற்சி மிக அதிகமானது.

(vii) பெருவாரித் தொழில்கள்மீது உச்சவரம்பு விதிப்பதானது, சிறு தொழில்களில் திறமை குறைந்த முறைகளைக் கையாளுவதை நீடிக்கச்செய்யும். உண்மையில் பெருவாரித் தொழிலின் கட்டுப்படுத்தப்பட்ட விரிவு, கைத்தொழிலின் முன்னேற்றத்தையும், திறமையையும் ஊக்குவிக்கும். பெருவாரித் தொழில்களின் திறமைக்கு இன்றியமையாத தூண்டுகோலான போட்டி மனப்பான்மை விரிவின் மூலந்தான் கிடைக்கும்.

(viii) சிறு தொழில் பிரச்சினையில் வேலைத் துயருதவி நோக்கானது, அத்தொழில் தனது உற்பத்தியை விற்பனை செய்ய, விற்போரின் பாதுகாக்கப்பட்ட சந்தையைச் செயற்கையாக ஏற்படுத்த முயல்கிறது. அத்தகைய தொரு நோக்கு, நாம் வாழ்ந்து முன்னேற வேண்டிய போட்டி நிலையை மறந்துவிடுகிறது.

(ix) இக் குழுவின் பரிந்துரைகளைச் செயல்படுத்துவோமாகில், நமது அந்நியச் செலாவணி நெருக்கடி இன்னும் அதிகமாகும். ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றிக்கு அடிப்படையான இயந்திர இறக்குமதி முதலியவற்றைச் செய்வது மிகக் கடினமாக இருக்கும்.

(x) இரண்டாம் திட்டத்தின்கீழ், முன்னேற்ற வேலைகளில் ஒரு பகுதி, நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் தொலில்களுக்குத் தேவையான இயந்திரங்களை உற்பத்தி செய்வதாகும். இத் தொழில்கள் தங்களை விரிவாக்கிக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை என்றால், இயந்திரங்களை உற்பத்தி செய்து, அவைகளைக் காலவரையின்றி உபயோகிக்காது வைத்திருப்பதின் பயன் என்ன?

(xi) வருமானம் அதிகமாகும்பொழுது நுகர்வோரின் தேவைப் பட்டியல் மாறுகிறது. உதாரணமாக கைத்தறித் துணிகளைவிட மேன்மையான துணிவகைகளுக்குத் தேவை அதிகமாகும். இக் காரியத்தைப்பற்றிக் குழு கவனிக்கவே இல்லை.

(xii) சிறுபான்மைத் தொழில்களின் நுணுக்கமான அமைப்பை எதிர்பார்த்துப் பெருவாரித் தொழில்கள் மேல் உச்சவரம்பு விதிப்பது நாட்டின் நீண்டகால வளர்ச்சியைப் பாதிக்கும்.

(xiii) குழுவின் ஆலோசனைகளின்படி வேலை இலாபங்கள் மிகைப் படுத்தப்பட்டிருக்கின்றன. உதாரணமாக வேலைக் கணக்கீட்டின்படி, இப்பொழுதிருக்கும் ஆலை அரிசி உற்பத்தி நிலையை அதிகமாக்க அனுமதி இல்லை என்றால், 6·6 மிலியன் டன் அதிக நெல் உற்பத்தி, கைக்குத்தல் அரிசியாக மாறும் ; அதற்கு இணையாக வேலை விளைவு களும் இருக்கும் என அனுமானிப்போம். ஆனால் உமி நீக்கும் அலகுகள் மேலும் தங்கள் வேலையைத் தொடராமல் இருக்கச் செய்வது நடைமுறையில் முடியாத காரியமென்றே கூறலாம். திட்ட காலத் தில் தேவைப்படும் அதிகத் துணி முழுவதையும் கைத்தறியிலேயே உற்பத்தி செய்யும் திட்டத்திற்கும் இது பொருந்தும். நாடு முழுவதும் சிதறிக் கிடக்கும் மிலியன் கணக்கான நெசவாளர்களுக்கு நூல், சாதனங்கள், நிதி முதலியவற்றை வழங்க ஓர் அமைப்பை ஏற்படுத்து வதும் அவைகளின் உற்பத்தியைச் சந்தையில் விற்பதும் பிரம்மாண்ட மான காரியங்கள்.

(xiv) குழுவின் ஆலோசனைகளுக்கு அடியில் சுயதேவையைப் பூர்த்தி செய்யும் கிராமப்புறப் பொருளாதாரக் கருத்தும் இருந்தது. சிறப்புத் தேர்ச்சி, வாணிகமயமாக்குதல் முதலியன அதிகமாக வளருவது இன்றியமையாதது ஆகும். இல்லையென்றால் நம் வளர்ச்சி யுறும் பெரிய மக்கள்தொகை வாழ முடியாது.

(xv) நுகர்வோர், பொருள்களை நேரடியாக உற்பத்தி செய்வோர் நவீன முறைகளைக் கையாளுவது உடனே முடியாத காரியம் எனக் குழு கருதியது. இதற்குக் காரணம் பொருளாதாரப் பொதுச் செலவு களைச் செய்ய முன்னேற்பாடு எதுவும் கிடையாது. ஆனால் இதைக் கூறும்பொழுது, ஏற்கெனவே ஓர் அகன்ற பொருளாதாரப் பொதுச் செலவுகளின் வலைப்பின்னல் ஏற்படுத்தப்பட்டு வருகின்றது என்பதை அக் குழு பார்க்கவில்லைபோலும்.[1]

[1] கார்வே குழுவே போதுமான அளவு சமூகப் பொருளாதாரப் பொதுச் செல வுக்கு ஏற்பாடு செய்ய நடவடிக்கைகள் எடுக்குமாறு வற்புறுத்தியிருக்கிறது; ஆனால் அவை முழுதும் உபயோகப் படுத்தப்படாத நிலையில் ஒரு முன்னேற்றத் திட்டத்தை அது பரிந்துரைக்கிறது.

**35. கிராம சிறுபான்மைத் தொழில்களின் கொள்கையைப் பற்றி மேலும் சில கருத்துரைகள் :**

நாம் டாக்டர் மடான் அவர்களின் கருத்துக்களை ஒப்புக்கொள்ளுகிறோம்; கிராம, சிறுபான்மைத் தொழில்களைப்பற்றிய தற்போதைய அரசாங்கக் கொள்கை நமது தொழில் முன்னேற்றத்தை வெகுவாய்ப் பாதிக்குமாதலால், அதை மாற்றியமைக்கும்படி அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறோம். வேறு எந்தப் பொருளாதார அமைப்பிலும் (திட்டமிடப்பட்டது அல்லது திட்டமிடப்படாதது), வேலைத் துயருதவிக்காக வேண்டுமென்றே உயர்ந்த தொழில் முறைகளைவிடத் திறமையற்ற தொழில் முறைகள் சேர்ந்தெடுக்கப்படவில்லை. பொருளாதார முன்னேற்றம் மிக நவீனமான தொழில் முறைகளைப் பின்பற்றுவதுடன் இணைந்திருக்கிறது. ஏதாவது வேலையின்மை ஏற்பட்டால், அது ஒரு தனிப்பட்ட தீமையாக கருதித் தீர்க்கப்படவேண்டும்.[1]

குறைந்த செயலாற்றும் திறனுடைய முறைகளை, அதிக செயலாற்றும் திறனுடைய முறைகளால் மாற்றிக்கொண்டே செல்லும்பொழுது அதிகச் செல்வம் ஏற்படுகிறது. ஆகவே அதிக வேலை வாய்ப்புகளும் ஏற்படுகின்றன. நவீன முறைகளைப் புகுத்துவதாவது தற்காலிகமாகச் சில தொழிலாளர்களை வேலையற்றவர்களாக ஆக்கலாம். அவ்வாறு வெளியேற்றப்பட்ட தொழிலாளர் அளவிற்கு முயற்சி மீதமாகிறது; புதிய மூலதனம் உண்டாகிறது. தாற்காலிகமாக வெளியேற்றப்பட்ட தொழிலாளர், அதிக மூலதன அளிப்பின் காரணத்தால் வரும் புதிய நிறுவனங்களில் பின்பு சேர்த்துக்கொள்ளப் படுகின்றனர். இவ்விதமாகப் பல்வேறுபட்ட அபரிமிதமான உற்பத்தியினுல் சமுதாயமே செழிப்படைகிறது. இவைகளையெல்லாம் பொருளாதாரத்தின் அடிப்படைப் புத்தகங்களிடையே காணலாம்; இவைகளின் உண்மை பொருளாதார வளர்ச்சியும் தொழில்

[1] தொழில் துறையில் முன்னேற்றமடைந்த நாடுகளில், தாஞக இயங்கும் வாகனங்கள் பிரச்சினையும், அதனுல் விளையும் தொழில்முறைத் துறை வேலையின்மையும் எவ்வாறு கையாளப்படுகின்றன என்பதைக் கவனிப்போம். சமீபத்தில் (1956) சோவியத் யூனியனில் அரசாங்கம் இதை எல்லாத் தொழில் கிளைகளிலும் புகுத்தத் தீர்மானித்திருக்கிறது. இவ்வாறு தாஞக இயங்கும் வாகனங்களின் தொழில்துறை நிபுணர்களின் தேவையைப் பூர்த்தி செய்ய இரண்டு மிலியன் பேர்கள் பயிற்சி பெறவிருக்கிறார்கள். இங்கிலாந்தில், விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சி அரசாங்கத் துறை தாஞக இயங்கும் வாகனங்களைப்பற்றி ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளது. அதில் இதை மேற்கொள்ளப்போகும் நிறுவனங்களை, மனிதத் திறன் தொழில்முறைக் கொள்கை இவைகளை நன்கு திட்டமிடவும், தொழிற் சங்கங்களை, ஒவ்வொரு நிலையிலும் கலந்து ஆலோசிக்கவும், தொழிலாளர்கள் எவ்வாறு பாதிக்கப்படுவர் என்பதை அவர்களுக்கு நன்கு உணர்த்தவும் யோசனை கூறியது. இவைகளில் எல்லாம் அடங்கி இருக்கும் உட்கருத்து என்னவெனில் திறமை குறைந்த முறைகளிலிருந்து திறமை மிகுந்த முறைகளுக்கு மாறுவதை எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ, அவ்வளவு சீக்கிரமாகச் செய்தல்வேண்டும்

முன்னேற்றமும் படைத்த எந்த நாட்டின் அனுபவத்திலும் காணக் கிடைக்கிறது.

எனினும் கொஞ்சகாலத்திற்கு வேலையின்மை என்பது, அமைதிக் குலைவையும் மனிதர்களுக்குத் துன்பத்தையும் அளிக்கும். பழைமைக்குக் கட்டுப்பட்ட பொருளாதார வாதிகளின் உணர்ச்சியற்ற தலையிடாக் கொள்கை (laissey faire)யும் கைத்தொழில்கள் மேலும், தொழில் முறை வேலையின்மை மேலும் முன்னைய அரசாங்கங்கள் காட்டிய போக்கும் வன்மையாகக் கண்டிக்கப்படவேண்டியவை. இந்தியா ஒரு பொது நல நாடு என்பதை நிலைநாட்டத் துன்பம் எவ்வகையில் வந்தாலும் அதைத் தீவிர முயற்சிகளால் துடைப்பது அவசியம் என்பது சொல்லாமலே விளங்குகிறது. கவலையற்ற தொழிலாளர்கள் பயிற்சி அளிக்கப்பட்டுப் புதிய நல்ல நிறுவனங்களில் வேலைபெறத் தயாராக்கப் பட வேண்டும்; அதுவரை துயருதவி (dole) கொடுத்தல் வேண்டும். அவர்கள் தங்களுக்கே உதவி புரிந்துகொள்ள அரசாங்கம் உதவி புரியவேண்டும். அவர்களுடைய ஊக்கத்தையும் தன்னம்பிக்கையையும் பாதிக்காவண்ணம் அவர்களுடைய துன்பங்களைத் தணிக்க வேண்டும்.

ஆகவே இப் பிரச்சினையைத் தீர்க்கும் வழி பழைய உற்பத்தி முறைகளைத் தொடர்ந்து பின்பற்றுவதும், தொழிலில் முன்னேற்ற மடைந்த பகுதிகளை விரிவாக்காமல் தடுப்பதும் அல்ல. தொழில் முறை வேலையின்மையால் ஏற்படும் துன்பத்தைக் குறைக்க ஏதாவதொரு துயருதவி ஏற்பாடோ அல்லது சமூகக் காப்புத் திட்டமோ வரவேண்டும்.[1] அரசாங்கத்திடம் துயருதவி அமைக்கவோ சமூகக் காப்புத் திட்டம் அமைக்கவோ, போதுமான நிர்வாக, நிதி வளங்கள் இல்லை என அக் குழு கருதுவது நம்பத் தகுந்ததாக இல்லை. கிராமத் தொழில்களை வாழச் செய்வதில் இருக்கும் பெரிய நிர்வாக, நிதிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட அரசாங்கத்திற்கு, ஒரு சமூகக் காப்புத் திட்டத்தை அமைப்பது அதன் திறமைக்கு அப்பாற்பட்டது அன்று. நுணுக்கமாகப் பார்க்கும்பொழுது இரு வேலைகளுமே சமமான துன்பம் உடையவைதான். அப்படியிருக்க அரசாங்கம் ஒன்றை உற்சாகத்துடன் ஏற்றுக்கொள்ளும் பொழுது இன்னொன்றிடமிருந்து ஏன் விலகிச்செல்லவேண்டும் என்பது விளங்கவில்லை. ஏற்கெனவே பல தொழிலாளர்கள் வேலையின்றியும் பாதிவேலை செய்தும் இருக்கின்றனர் என்பது தொழிற் செறிவு முறைகள் (Labour intensive methods)

[1] *மிலியன் கணக்கான அகதிகளுக்கு வெற்றிகரமாக மறுவாழ்வு அளித்தது. அரசாங்கத்திற்குத் தொழில் முறை வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்ப்பதில் நம்பிக்கை அளிக்கவேண்டும்.*

வேண்டுமென்பதைக் காட்டவில்லை. இந்தப் பிரச்சினை (i) அதிக உழைப்பும் குறைந்த மூலதனமும் அல்லது (ii) குறைந்த உழைப்பும் அதிக மூலதனமும் இவைகளில் எது வேண்டுமெனின், இப்பொழுதிருக்கும் சூழ் நிலைகளில் எது அதிக பலனைத் தருமோ அதுதான். இப்பொழுதிருக்கும் நிலைகளில் நிறைய உழைப்பும் குறைந்த மூலதனமும் மிகுந்தது இலாபகரமானது என விவாதிக்கலாம்; அல்லது மூலதனச் செறிவு முறைகள் எவ்வளவு இலாபகரமாக இருந்தாலும், மூலதனக் குறைவு காரணமாக நாம் அதை மேற்கொள்ளமுடியாது எனவும் விவாதிக்கலாம். இவை இரண்டுமே முழுதும் சரியல்ல என்பது நமது கருத்து. நம்முடைய மூலதன வளங்கள் குறைந்தவை என்பதில் ஐயமில்லை; ஆனால் இப்பொழுது தீர்மானிக்கப்படவேண்டிய காரியம் அதைச் சில பெருவாரித் தொழில்களில் ஈடுபடுத்துவதனால் உற்பத்தி உச்சநிலை அடையுமா அல்லது ஒப்புமையில் திறமையற்ற சிறுபான்மைத்தொழில் அலகுகளில் ஈடுபடுத்துவதால் உச்சநிலை அடையுமா என்பதுதான். நாட்டின் மூலதனக் குறைவு அதை நவீன, பெருவாரித் தொழில்களில் ஈடுபடுத்துவதைவிட ஏற்கெனவே இருக்கும் சிறுதொழில்களின் மூலதன அமைப்புகளில் ஈடுபடுத்த ஒரு காரணமாக உபயோகப்படுத்தப்படுகிறது.[1] முதலில் ஏற்கெனவே இருக்கும் பெருவாரித் தொழில்களின் உற்பத்தி ஏன் வரையறுக்கப்பட வேண்டும் எனக் கூறவில்லை. சிறுபான்மைத் தொழில்களுக்கு அளிக்கப்படும் உதவிக்கொடைகளும் மற்ற உதவிகளும் அதிகச் செலவை ஏற்படுத்துகின்றன. பழைய வழிகளையும் முறைகளையும் உயிருடன் காப்பாற்றும்பொழுது முதலாக்கம் (capital formation) தடைப்படுகின்றது. இதனால் மறைமுக இழப்பு நேரிடுகிறது. இவைகளையெல்லாம் நோக்கும்பொழுது அவைகளை 'முதலீடு குறைந்தவை' என அழைக்கத் தயங்குகிறோம். இந்தச் செலவை, திறமை மிகுந்த இயந்திரங்கள் உள்ள அலகுகளில் உபயோகப்படுத்துவதின் மூலம் அதிக உற்பத்தியையும், மூலதனச் சேர்ப்பு வீத அதிகரிப்பையும் அடையலாம்.

பொருளாதாரத் துறையைப் பன்முகப்படுத்துதல் என்னும் கருத்து, பொருளாதார, சமூக, பாதுகாப்பு நோக்குகளில் பார்க்கும்

[1] கிராமத் தொழில்களின் உபயோகமற்ற திறனைப்பற்றிப் பேசுவது தவறாகும். இத் தொழில்கள் இவைகளைவிட அதிகத் திறமையுள்ள தொழில்களால் வேலையற்றவையாக ஆகிவிட்டதால், அவைகளுடைய சாதனங்கள் இலாபகரமாக மறுபடியும் உபயோகப்படுத்தப்படலாம் எனக் கூறுவதும் தவறு. அவ்வாறு அது அதிக செயலாற்றல் உள்ள வேறொன்றால் இடம் பெயர்க்கப்பட்டிருந்தால், அதை அழிக்க வேண்டுமேயன்றி, இன்னொன்றைத் தியாகம் செய்து மீண்டும் உபயோகப்படுத்துவது வேண்டியதில்லை.

(See C. N. Vakil and P. R. Brahmanand, Planning for an Expanding Economy, p. 141)

பொழுது, ஊக்கம் அளிக்கத் தகுந்ததே.[1] ஆனால் அதே சமயத்தில் குவிப்பு முறையில் உள்ள சில பயன்களுக்கும் அவைகளுக்கேற்ற முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். குவிப்பு முறை அளவுக்கு மீறி இருக்க முடியுமானல், அதேபோல் பன்முகப்படுத்தலில் அகலப் பரப்புதலும் அளவுக்கு மீறி இருக்கமுடியும். இவைகள் ஒவ்வொன்றின் நியாயமான வரம்புகளையும் காணுவதே நடைமுறைப் பிரச்சினை யாகும். பன்முகப்படுத்துதல் கொள்கை என்றால், சிறுபான்மைத் தொழில்களே எப்பொழுதும் பரவலாக அமைக்கப்படவேண்டும் என்பது இல்லை.

கிராமங்களில், பழங்காலத் தொழில்களில் ஈடுபட்டிருப்போருக்கு அந்த இடத்திலேயே துயருதவி அளிப்பது நல்லதாகத் தெரிகிறது. ஏனெனில் முதலாவதாகத் துயருதவி பெறுவோருக்கு இது சௌகரியமாக இருக்கிறது. இரண்டாவதாகப் பன்முகப்படுத்துதல் என்னும் நோக்கிற்கு இணைந்ததாக இருக்கிறது. ஆனால் இன்னொரு விதத்தில், நீக்கப்படவேண்டிய தடை என நாம் அறிந்த மக்களின் இடம் பெயராத் தன்மைக்கு இது ஒரு பரிசளிப்பாகிறது. நவீன முறையில் அமைந்த நுகர்வோர் பொருள் உற்பத்தி செய்யும் பெருவாரித் தொழில்கள் மூலமாகத்தான், இந்தியாவில் இதுவரை பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது; இது கிராமங்களிலுள்ள உபரி மக்கள் தொகை நகரங்களுக்குச் செல்வதை ஆரம்பித்து வைத்திருக்கின்றது. மொத்தமாகப் பார்க்குங்கால் இது ஒரு விரும்பத்தக்க போக்கு. இதை வேண்டுமென்றே மாற்றி அமைக்க விரும்பும் கொள்கையை ஆதரிப்பது சுலபமன்று. இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் கிராம, சிறுபான்மைத் தொழில்கள் கொடுக்கப்பட்டிருக்கும் உற்பத்தி இலக்குகளைப் பூர்த்தி செய்யவில்லையானல், திட்டத்தின் வெற்றியையே பாதிக்கும் குழப்பநிலை ஏற்படும். மேலும் பணவீக்கம் என்னும் வெள்ளம் பாய வழிகோலும். ஏற்கெனவே, உயரும் விலைகள், குறையும் ஏற்றுமதிகள், உள்நாட்டு நுகர்ச்சிக்கான துணியின் குறைவு முதலிய பிரச்சினைகளைச் சமாளிக்க அரசாங்கம் சில முக்கிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டியிருந்தது. (ஏற்றுமதித் தேவைகளை ஓரளவிற்காவது பூர்த்தி செய்ய 14,600 தானுகை இயங்கும் தறிகளுக்கு அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.) கிராமச் சிறுபான்மைத் தொழில்கள் திட்டத்தின் இலக்குகளைப் பூர்த்தி செய்ய முடியவில்லையானல்,

[1] தொழில்களைப் பன்முகப்படுத்துவதின் மூலம் வீட்டு வசதி, போக்குவரத்து, சமூக நலம் முதலியவற்றிற்கான செலவு குறையுமென்பது பொதுவான பொருளாதாரக் கருத்து. ஆனால், இதைக் கருத்தில் கொண்டு, ஏற்கெனவே இருக்கும் பெருவாரி அலகுகளின் உற்பத்தி அதிகரிப்பதைத் தடுப்பது நியாயமற்றது; அல்லது அதிகப் பொதுச் செலவு இல்லாமல் நிறுவப்படும் பெருவாரி அலகுகளைத் தடுப்பதும் நியாயமன்று.

எண்ணிக்கையில் அதிகமாயுள்ள பெருவாரித் தொழில்களின் உபரித் திறனை உபயோகப்படுத்தி, குறைபாட்டைச் சரிக்கட்ட முடியும். ஆயினும் பெருவாரித் தொழில்கள்மீது அரசாங்கத்தின் மனப் பான்மை உதவி அளிப்பதாகவும், அனுதாபம் கொண்டதாகவும் மாற வில்லையானல், உபரித்திறன் இருந்துகொண்டே இருக்கும் எனக் கூறுவதற்கில்லை.

கிராம, சிறுபான்மைத் தொழில்கள் உதவிக் கொடைகளாலோ மற்ற விதங்களாலோ காப்பாற்றப்படும்வரை அவை வேலை அளிப்ப தாகக் கூறமுடியாது. உண்மையைக் கூறின், அதில் ஈடுபட்டிருப்ப வர்கள் தங்கள் ஊதியத்தைச் சம்பாதிக்கவில்லை. ஆனல் அவர்கள் துயருதவியைக் கொடையாகப் பெறுகிருர்கள். இவ்வாறு நாட்டை, நமக்குத் தெரிந்த அளவில் ஒரு பெரிய நிரந்தரமான பஞ்ச நிவா ரணப் பாசறையாக மாற்றுவதால், வேலையின்மையைப் போக்க முடி யாது. சிறு தொழில்களைச் சீரமைக்கும் அரசாங்கத் திட்டத்தின் முக்கியப்பகுதி பலவீனமுள்ளதாயும், தெளிவற்றதாயும் இருக்கிறது; அதன் வெற்றியில் நம்பிக்கை வைப்பது கடினமாயிருக்கிறது. தொழில் துறையில் மிகவும் முன்னேறிய நாடுகளில்கூட, கைத் தொழில்கள், அவைகளின் பொருளாதாரத்தில் ஒரு முக்கிய அங்கம் வகிக்கின்றன என்பது உண்மையே.[1] இதற்குக் காரணம், அவை களில் அநேகமாக எல்லா நாடுகளிலும் சில சாதகமான காரணங்கள் இருக்கின்றன; உதாரணமாகச் சந்தைகள் பக்கமாக அமைந்திருக்க லாம்; நுகர்வோரின் தேவைகளைப்பற்றி நெருங்கிய நுண்ணறிவு இருக்கலாம்; தேவைகளின் குணுதிசயங்களைப்பற்றி நன்கு அறிந்தி ருக்கலாம் (உதாரணமாக நல்ல கலைவேலைப்பாடு அமைந்த பொருள் களுக்கான தேவை அல்லது தனிப்பட்டோரின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் தேவைகள்); ஒன்று அவைகளுக்குப் போட்டியே இல்லை அல்லது அவைகள் போட்டி போடத் தயங்குவது இல்லை. தானே இயங்கக்கூடிய, இயல்பாய் அமைந்த திறன் உள்ள சிறு தொழிலுக்கு தற்காலீகமாக உதவி அளிப்பது நியாயமானது. ஆனல் தற் போதைய சூழ்நிலையில், இயங்கமுடியாத பழைய தொழில்கள் அழிந் தொழிய வேண்டும்; அவைகள் எவ்வளவு துரிதமாக அழிகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. சீர் குலைவையும், துன்பத்தையும் குறைவுபடுத்த, அவைகள் அழியும் வேகத்தை மட்டுப்படுத்தவேண் டும் எனக் கூறுவதும் உண்டு; ஆனல் வெளியுதவியால் அவைகளைக் காப்பாற்ற வேண்டுவதில்லை; அவைகள் அவ்வாறு இருக்கும்பொழுது

[1] உதாரணங்களுக்கு, 1956ஆம் வருடம் ஜனவரி மாதம், Indian Economic Journal என்ற சஞ்சிகையில் திரு. எம். எல். டாண்ட்வாலா (Sri. M. L. Dantwalas) அவர்கள் எழுதிய 'கிராம சிறுபான்மைத் தொழில்கள்' என்ற கட்டுரையைப் பார்க்கவும்.

நாட்டின் பொருளாதாரத்தின்மீது மைல் கற்களை நிறையச் சுமத்தி அழுத்துவதுபோல் ஆகும்.

கார்வே குழு, தொழில்முறை வேலையின்மையைத் தவிர்க்கும் பொழுதும் ஏற்கெனவே இருக்கும் உற்பத்தி அலகுகளை முழுதும் பயன்படுத்தும்பொழுதும், நாட்டின் வருங்காலப் பொருளாதார முன்னேற்றம் எவ்வகையிலும் பாதிக்கப்படக்கூடாது என எச்சரிக்கை செய்கிறது. புதிய முதலீடுகள் செய்யும்பொழுது, அவைகளைப் புதிய, முன்னேற்றமடைந்த சாதனங்களிலோ, அல்லது பழைய சாதனங்களைக் கூட்டியோ, மாற்றி அமைத்தோ முன்னேற்றவோ பயன்படுத்த வேண்டும் எனப் பரிந்துரைத்துள்ளது மேலும் அப் புது முன்னேற்றங்கள் சிறிது காலத்திற்குப் பின் பயனற்றவையாகப் போகா வண்ணமும், அவைகள் இன்னும் உயர்ந்ததொழில்முறைகளில் உபயோகிக்கத் தகுந்தவையாயும் இருக்கவேண்டும். இவைகளை யெல்லாம் கூறுவது எளிது; ஆனால் செய்வது கடினம். நடைமுறையில், ஒரு புது முன்னேற்றம் இத்தகைய குணநலன்களைக் கொண்டு அமைவது முடியாது என்று சொல்லாவிட்டாலும், மிகக் கடினமானது; மாற்றங்களும் முன்னேற்றங்களும் அநேக சமயங்களில் ஆள்குழு நலங்கள் (vested interests) கையில் சிக்கியிருக்கின்றன.

சார்பற்ற முறையில் முன்னேற்றம் அமைய வேண்டுமாயின், அது மெதுவாகத்தான் முடியும். அதுபோல, 'அரசாங்கக் கொள்கையின் நோக்கம் பன்முகப்படுத்தப்பட்ட பகுதி தானாக இயங்கக்கூடிய அளவிற்கு வலுவுறச் செய்து, அதைப் பெருவாரித் தொழிலுடன் இணைக்க வேண்டும்' எனக் கூறுவது உபயோகமற்றது; ஏனெனில் பன்முகப்படுத்தப்பட்ட பகுதிக்குத் தெரிந்தெடுக்கப்பட்ட தொழில்கள் நாளடைவில் தாங்களாகவே இயங்கக் கூடும் எனக் கூற எவ்விதச் சான்றும் தெரியவில்லை. மேலும் சிறுபான்மைத் தொழில்களின் நிலையை எளிதாக்க, பெருவாரித் தொழில்களின்மீது தடை விதித்தலை 'ஒருமைப்பாடு' எனக் கூறமுடியாது. சிறு தொழில்கள் நமது பொருளாதார முன்னேற்றத்தில் முக்கிய பாகம் வகிக்கின்றன என்பது உண்மை; ஆனால் அவற்றில் சிலவற்றை ஊக்கமளிப்பதற்காகத் தெரிந்தெடுக்கும் பொழுது, இன்னும் கொஞ்சம் அடிப்படைச் சிந்தனைக்கும், இப்பிரச்சினையைத் தீர்ப்பதில் இன்னுமதிகமான கற்பனை சக்திக்கும், திறமைக்கும் இடமிருக்கிறது. மிகக் குறைந்த எதிர்ப்புள்ள வழியையே பின்பற்றுவதும், எண்ணிக்கையில் அதிகமான மக்கள் பழைய முறைகளில் அமைந்த தொழில்களில் ஈடுபட்டிருப்பதால் அவைகளை ஆதரிப்பதும் நாட்டின் சக்திகளைப் பயனுள்ள வழிகளிலிருந்து திருப்பிவிடுவதாகும். வேண்டுமென்றே தரம் குறைந்த தொழில் முறைகளைப் பின்பற்றுவதும்; அவைகள் மெதுவாக, நிலையற்ற விதத்தில் கண்டுபிடிப்புக்களைப் பின்பற்றி முன்னேறும்வரை

காத்திருப்பதும், ஏற்கெனவே வழக்கில் இருக்கும் தரம் உயர்ந்த தொழில் முறைகளை விஸ்தரிக்காமல் இருப்பதும் தவருன வழியில் செல்லுதாகும்.

பெருவாரித் தொழில்கள்மீது தடைகளை விதிப்பதை விட, அவைகளின் உச்சநிலை வளர்ச்சிக்கு உதவுவதே கொள்கையாக இருக்க வேண்டும். சிறு தொழில்கள் பெருவாரித் தொழில் நிறுவனங்களுக்குத் தேவைப்படும் உபகரணங்களை உற்பத்திசெய்யும் துணை அலகுகளாக இருக்க நிறைய இடமுண்டு. சிறு தொழில்கள், பெருந்தொழில்கள் ஆகிய இரண்டும் இவ் வழியில் விரிவாகும்பொழுது வேலை வாய்ப்புகள் கிடைக்கும். மின்சாரம், போக்குவரத்து, செய்தித் தொடர்புகள் ஆகியவற்றில் நாட்டின் தேவைகள் எல்லையற்று இருக்கின்றன. ஆகவே இத் தேவைகளைப் பூர்த்திச் செய்யவும், அதிக வேலை வாய்ப்புகள் அளிக்கவும், பொது வேலைகள் ஆரம்பித்தால் அது நியாயமானதே.

சாதாரணமாக, தனியார் துறையில் இலாபநோக்கு முக்கியமானது. ஆனல் நாட்டு முன்னேற்றத்தைத் தீர்மானிக்கும்பொழுது, இலாபம் என்ற குறுகிய மனப்பான்மையை விட்டு, நாட்டின் பொது நலத்தையே நமது குறிக்கோளாக எடுத்துக்கொள்ள வேண்டும். இதற்கு, ஒவ்வொன்றையும் தனியே பார்க்கும்பொழுது திட்டவட்டமில்லாத, ஆனல் ஒவ்வொன்றும் அதனதன் எல்லைக்குள் ஓரளவு உண்மையான, பல மாறுபட்ட கருத்துக்களிடையே உள்ள வேற்றுமையை அகற்றி, அவைகளை ஒன்றுபடச் செய்யவேண்டும். உதாரணமாகக் குவிப்புமுறையில் உள்ள சிக்கனங்களைப் பன்முகப் படுத்தும் முறையிலுள்ள சமூகச் செலவுகளுடன் சம நிலையில் வைக்க வேண்டும். செலவு, சிக்கனம் ஆகியவற்றின் அளவு மதிப்பீடு, இவை இரண்டில் ஒன்றைத் தெரிந்தெடுப்பதற்கு முன் செய்யப்படவேண்டும். முடிவு எடுக்கும்பொழுது, அம் முடிவு சார்புள்ளதாகவோ மனத்திற்கு இயைந்த கருத்தால் வசீகரிக்கப்பட்டதாகவோ இருத்தலாகாது. இரண்டாம் திட்டத்தின் கீழான சிறு தொழில்களைப்பற்றிய செயல் திட்டம் சார்பற்றது எனவோ, சம்பந்தப்பட்ட காரியங்கள் அனைத்தையும் ஆராய்ந்தபின் வரையப் பட்டது என்ருே கூறமுடியாது. மற்ற நாடுகளின் முன்னேற்ற அமைப்பிலிருந்து வெகுவாய் மாறுபடும் இக் கொள்கை எவ்வளவு அறிவாழம் உள்ளது என்பது சந்தேகத்திற் குரியது.

**36. வேலையின்மையின் தன்மையும் அளவும்:**[1] இரண்டாம் திட்டத்தின் ஒரு முக்கிய நோக்கத்தைத் திட்ட வரைவின் வார்த்தைகளில் கூறவேண்டுமாயின், 'வேலையின்மையை, எவ்

[1] *இப் பிரிவு இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின், 5 ஆம் அத்தியாயத்தை அடிப்படையாகக் கொண்டது.*

வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில், பத்து ஆண்டு களுக்கு மேற்படாவண்ணம் ஒழிக்கவேண்டும்' என்று கூறலாம். வேலைவாய்ப்புகளை உண்டாக்கத் திட்டம் மூன்றுவித முறைகளை எடுத்துக்கொள்ளுகிறது; ஆனால் இது மூன்று வகை மக்களைப் பாதிக் கிறது : (i) தற்பொழுது நகரங்களிலும் கிராமங்களிலும் வேலையின்றி இருப்பவர்கள் (ii) ஒவ்வொரு வருடமும் மக்கள் தொகையில் தொழிலாளர்கள் 2 மிலியன் அதிகமாவதால், மொத்தத்தில் ஐந்து வருடங்களில் அதிகமாகும் 10 மிலியன் தொழிலாளர்கள் (iii) விவ சாயத்திலும் வீட்டு வேலைகளிலும் குறைவாக வேலை செய்பவர்கள் (underemployed).

இந்தியாவில் பிராந்தியத்திற்குப் பிராந்தியம் (i) பணச் செயல் அளவு (ii) சுயதேவைப் பூர்த்தி, பொருளாதார நடவடிக்கைகளின் வேகம், இவைகளின் அளவு முதலியன மாறுபடுகின்றன. மேலும், (iii) கிராமப்புறப் பொருளாதாரத்திற்கும் நகர்ப்புறப் பொருளாதாரத் திற்கும் தன்மையில் மாறுபாடு உள்ளது. சிறப்பாக ஒரு பக்கத்தில் நன்கு அமைக்கப்பட்ட தொழில், நிதி, வாணிகத் துறைக்கும், மறு பக்கத்தில் விவசாயம், கைத்தொழில், துறைக்கும் இம் மாறுபாடு அதிகம் உள்ளது. கடைசியாக, (iv) நமக்கு எண்ணிக்கையில் அதிக முள்ள, பரந்து சிதறிய பொருளாதார நடவடிக்கைகளின் அலகுகள் உள்ளன. இவைகளில் சிறு நிறுவனங்களும், தானகே வேலை தேடிக் கொண்ட தொழிலாளர்களும் உள்ளனர்.

ஆகவே வேலை நிலை, அதன் கொள்கைகள் முதலியன, தொகுதி தொகுதியாகப் பிரிக்கப்பட்டு அமைக்கப்படவேண்டும்; அதன் விளைவு களை ஒருமைப்படுத்துவதை அதன்பின் செய்யலாம்.[1] கற்றோர் வேலை யின்மையை நீக்க ஒரு சிறப்புக் கையாளு முறை வேண்டும். மிகவும் பின் தங்கிய, தாழ்த்தப்பட்ட பிரதேசங்களுக்குச் சிறப்புத் திட்டங்கள் வேண்டும்; இத் திட்டங்கள் அவ்வட்டார மக்களின் விருப்புகள், தன் னம்பிக்கை முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண் டும்; மேலும் அவ் வட்டாரத்தில் கிடைக்கக் கூடிய மனித, பொருள் வளங்களைப்பற்றிய கருத்துடன் சேமிக்கப்பட்ட முழு விவரங்களையும் மதிப்பீடுகளையும் முன்பாகவே வைத்திருக்க வேண்டும். வேலையின் மைப் பிரச்சினையைத் தீர்க்கக் கொள்கைகளை அமைப்பது என்பது, இந்தியாவைப் பொறுத்தமட்டில் இருட்டில் தடுமாறித் தடவுவதைப் போலாகும். ஏனெனில் வேலையின்மையின் தன்மை, அளவு முதலி யவைகளைப்பற்றிப் போதுமான விவரங்கள் இல்லை; மேலும் அதற்கா கச் செய்யப்படும் முதலீடுகளின் பலன்களைப்பற்றியும் விவரங்கள் கிடை

[1] *இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட சம்பந்தமான தாள்கள், பொருளாதாரத் துறையினர் குழு, 1955. பக்கம். 223.*

யாது. வேலைத் தகவல் நிலையங்கள் தரும் தகவல்கள் நகர்ப்புறங்களில் வேலையற்றவர்களைப்பற்றிய தாகும்; அது ஈடுபட்டிருக்கும் நிலப் பரப்புக் குறுகியது என்பதைத் தவிர மற்ற குறைகளும் உண்டு. உதாரணமாக, வேலையற்றவர்களில் பலர் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்வதில்லை. பதிவு செய்துகொள்வோரில் சிலர் உண் மையில் வேலையற்றவர்கள் அல்லர்; ஆனால் இன்னும் உயர்ந்த வேலை தேடிக்கொண்டிருப்பவர்கள். எனினும் வேலைத் தகவல் நிலையங் களின் விவரங்களின்படி, முதல்திட்ட காலத்தில் வேலையற்றோரின் தொகை தொடர்ச்சியாக அதிகரித்தது. ஆகவே இக் கோணத்தி லிருந்து பார்க்கும்பொழுது அது ஒரு தோல்வி ஆகும். திட்டக் குழுவின் ஆலோசனையின்பேரில் நாட்டு மாதிரி மதிப்பீடு (National Sample Survey), நகர்ப்புற வேலையின்மையைப்பற்றி எடுத்த மதிப் பீட்டின்படி, இப்பொழுது நகரங்களில் வேலையின்மையின் அளவு 2·8 மிலியனாக இருக்கிறது. இதிலிருந்து 'பொருத்தமில்லா வேலையின்-மையை'க் (Frictional unemployment) கழித்துவிட்டோமானால் நகர வேலையின்மையை நிகரமாக 2·5 மிலியன் எனக் கூறலாம். அடுத்த ஐந்து வருடங்களில் இப்பொழுதிருக்கும் நகர வேலையற்றோர் எண் ணுக்கு (2·5 மிலியன்) இன்னும் 3·8 மிலியன் சேர்க்கப்படுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

விவசாயத் தொழிலாளர் விசாரணையின்படி (Agricultural Labour Enquiry) 1950-51 ஆம் ஆண்டு கிராம வேலையற்றோர் எண்ணிக்கை 2·8 மிலியன் ஆகும். இன்னும் இதே எண்ணை உண்மையானது என ஒப்புக்கொள்ளலாம். ஏனெனில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் கிராம முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் கொடுத்ததால், கிராமங்க ளில் இப்பொழுதிருக்கும் வேலையின்மை நிலை இன்னும் மோசமாவ தைத் தடுத்தாவது இருக்கும் என நினைக்கலாம். வேலையின்மையை முழுவதும் நீக்கவேண்டுமானால், இரண்டாவது திட்ட காலத்தில் உண்டாக்கவேண்டிய வேலை வாய்ப்புகளின் நிலையைக் கீழ்வரும் அட்டவணை சுருக்கமாகக் காட்டுகிறது :

| | நகர்ப் புறங்கள் (மிலியன்) | கிராமப் புறங்கள் (மிலியன்) | மொத்தம் (மிலியன்) |
|---|---|---|---|
| புதிதாக வருபவர் களுக்கு | 3·8 | 6·2 | 10·0 |
| நிகரமாக வேலையற்றவர் களுக்கு ... | 2·5 | 2·8 | 5·3 |
| மொத்தம் ... | 6·3 | 9·0 | 15·3 |

**37. இரண்டாவது திட்டத்தின்கீழ் வேலை வாய்ப்புகளின் மதிப்பீடு:** மாநிலங்களின் அரசாங்கங்கள், மத்திய அமைச்சரகங்கள் கொடுத்த வேலைபற்றிய விவரங்களையும், தனியார் துறைக்கான இலக்குகளின் அடிப்படையிலும், இரண்டாவது திட்ட காலத்தில் உண்டாகும் என எதிர்பார்க்கப்படும் அதிக வேலை, கீழ்வருமாறு [1]:

| | |
|---|---|
| அமைப்பு வேலைகள் ... ... ... ... | 21,00,000 |
| நீர்ப்பாசனமும் மின்சாரமும் ... ... ... ... | 51,000 |
| இருப்புப் பாதைகள் ... ... ... ... | 2,53,000 |
| மற்ற போக்குவரத்துகள், செய்தித் தொடர்புகள் ... | 1,80,000 |
| தொழில்களும், கனிப் பொருள்களும் ... ... ... | 7,50,000 |
| குடிசை, சிறுபான்மைத் தொழில்கள் ... ... ... | 4,50,000 |
| காடுகள், மீன் பிடித்துறை, தேசீய விஸ்தரிப்புத் திட்டம், அதைச் சார்ந்த திட்டங்கள் ... ... | 4,13,000 |
| கல்வி ... ... ... ... | 3,10,000 |
| சுகாதாரம் ... ... ... ... | 1,16,000 |
| மற்ற சமூகப் பணிகள் ... ... ... ... | 1,42,000 |
| அரசாங்கப் பணிகள் ... ... ... ... | 4,34,000 |
| மற்றவை, வாணிகமும் வர்த்தகமும், உட்பட மொத்தத்தில் 52% ... ... ... | 27,04,000 |
| மொத்தம் ... ... | 79,03,000 |

வேலையின்மையை முழுவதும் நீக்கத் தேவையான வேலை வாய்ப்புகள் [2] 15 மிலியன்களுக்கு மேல் இருக்க, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் 8 மிலியன் புது வேலைகளையே கொடுக்கும்.

[1] Second Five year Plan. p. 115.

[2] 'வேலை வாய்ப்புகள்' என்பது கூலிக்கோ சம்பளத்திற்கோ அல்லது தானாகச் செய்துகொள்ளும் வேலைக்கோ, எல்லாவற்றிற்கும் பொருந்தும். 'திட்டத்தின் அதிகரித்த பொருளாதார நடவடிக்கைகள் காரணமாக வாணிகத்திலும் மற்றப் பணிகளிலும் தானாக வேலை செய்யும் வேலையாட்களின் தொகை அதிகரிக்கும்' என எதிர்பார்க்கப்படுகிறது. பொது நிர்வாகத்திலும், சமூகப் பணிகளிலும் ஊதியத்திற்கு வேலை செய்வோரின் தொகையும் அதிகரிக்கும். மேலும் தற்செயலாக இது நாட்டில் கற்றோர் வேலையின்மையைப் போக்கும் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

திட்டத்தில் புதிதாக நீர்ப்பாசனத்திற்குக் கொண்டுவரப்பட்ட நிலங்கள், கிராமத் தரத்தின்படி முழு நேர வேலை வாய்ப்புகள் சிலவற்றை இவை அளிக்கும். மனித உழைப்பால் நிலத்தைச் சீராக்குவது, மத்திய டிராக்டர் நிறுவனம், மற்ற நிறுவனங்கள், (Central Tractor Organisation and other Organisations), தோட்டங்களின் (plantations) விரிவு, அவைகளின் முன்னேற்றம், தோட்டக் கலையின் முன்னேற்றம் முதலியனவும் இதே விளைவுகளைப் பயக்கும். இப்படியாக முழு நேர அதிக வேலை 1·6 மிலியன் பேர்களுக்குக் கிடைக்கும் என மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. தொழிலாளர் கூட்டத்தில் சேரப்போகும் 10 மிலியன் புது ஆட்களுள், பெரும்பான்மையினர் நிலத்தைச் சார்ந்த குடும்பங்களிலிருந்து வருகின்றனர். இங்குள்ள பிரச்சினை புது வேலைகள் வேண்டும் என்பதன்று; ஆனால் வருமானத்தை அதிகமாக்கத் தேவையான அதிக வேலை. தாங்களாகவே நிலத்தைப் பயிரிடுவோரில் பாதிக்கு மேல், தங்கள் பயிர்த் தொழிலிலிருந்து கிடைகும் சொற்ப வருமானத்துடன் போதுமான அளவு இல்லாத கூலி வரவையும் சேர்த்து வாழ்க்கை நடத்துகின்றனர். சரியான இடத்திலும் சமயத்திலும் இவர்களுக்கு அதிக வேலை வாய்ப்புகள் கொடுக்க முடிந்தால் அல்லது நேரடியாக வருமானம் தரக்கூடிய வேலையைக் கொடுத்தால், இந்த வகுப்பினருக்கு உதவியாயிருக்கும். விவசாயத் தொழிலாளர்கள், சிறு தொழில்களில் ஈடுபட்டோர்கள் இவர்கள் உள்பட, மொத்த வேலை செய்யும் தொழிலாளர் தொகையில் இத்தொகுதி 80 சதவீதமிருக்கிறது. இந்த வகுப்பினருள் ஒரு பெரிய வீதம் 'மறைந்த வேலையின்மையால்' (disguised unemployment) துன்புறுகின்றனர்; அதாவது தங்கள் வாழ்க்கைச் செலவிற்கு அவர்கள் ஒன்றும் சம்பாதிப்பதில்லை. உதாரணமாக நிலத்தில் ஈடுபட்டுள்ள பலரில், சிலர் அதன் உற்பத்திக்கு எவ்விதத்திலும் உதவுவதில்லை. இத்தகைய வேலைக் குறைவு அல்லது 'மறைந்த வேலையின்மை', 1951ஆம்ஆண்டின் குடிக் கணக்கில் 'சம்பாதித்தும் மற்றவர்களைச் சார்ந்திருப்போர்'[1] என்னும் வகுப்பினர் நிறைய இருப்பதாகக் குறிப்பிடப்பட்டதிலிருந்து மிக அதிக நிலைப்பாட்டுடன் இருப்பதாகத் தெரிகிறது. வேலைக் குறைவைப் பற்றிய அளவு பெரும்பாலும் ஊகமாகவே இருக்கவேண்டும். ஆனால், உற்பத்தி வருமானம் இவைகளின் விவரங்களை அடிப்படையாகக் கொண்டு, நாட்டின் வேலைக் குறைவை மதிப்பிட்டபொழுது, அது 49 இலட்சம் மனித ஆண்டுகளுக்குச் சமமாக இருக்கிறது எனக் கருதினர்.

[1] சம்பாதித்தும் மற்றவர்களைச் சார்ந்திருப்பவன் யாரெனில் முழுவதும் தன் சம்பாத்தியத்தாலேயே தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியாமல், ஓரளவிற்கு மற்றவர்கள்மேல் சார்ந்திருப்பவன்.

இந் நாட்டில் இருக்கும் வேலையின்மையில் பெரும்பகுதி 'மறைந்த வேலையின்மை'யாக இருப்பதால் இப் பிரச்சினையின் அளவு நமக்குச் சரியாகத் தெரியவில்லை; அதேபோல் வேலையின்மையை நீக்க எடுக்கும் நடவடிக்கைகளின் விளைவுகளும் சரியாகத் தெரியவில்லை. இருந்தாலும், வேலை அளிப்பதில் இரண்டாவது திட்டம் நிச்சயமாக முன்னேற்றத்தை அடையும் எனக் கூறலாம். அதே சமயத்தில் நாம் எவ்வளவு முயன்றாலும் வேலையின்மையை முழுவதும் நீக்கமுடியாது என்பதும் நிச்சயம். நம்மிடம் இருக்கும் குறைவான வளங்களையும், மற்றும் பல துன்பங்களையும் பார்க்கும்பொழுது, இரண்டாவது திட்ட கால இறுதியில் நிலைமை இன்னும் மோசமாகாமல் இருந்தால், நம்மை நாமே பாராட்டிக் கொள்ளலாம்.

**38. கற்றோர் வேலையின்மை:** ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பதிலிருந்து தொடங்கும் பத்தாண்டுகளில் இருந்த மந்த காலத்தைவிட, இப்பொழுது கற்றோரிடையே நகரங்களில் வேலையின்மை அதிகமாகியிருக்கிறது. 1955 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் திட்டக் குழு ஓர் ஆராயும் குழுவை (Study group) கற்றோரிடையே இருக்கும் வேலையின்மையைத் தணிக்கக் குறிப்பிட்ட திட்டங்களை வரைய நியமித்தது. கற்றோர் யார் எனில், மெட்ரிகுலேஷன் அல்லது அதற்குச் சமமான தேர்வில் வெற்றி பெற்றோர் அல்லது அதற்கும் உயர்ந்த நிலைகளில் உள்ளோர் ஆவர்; அக் குழு, 1955—60 ஆகிய ஐந்து வருடங்களில் 14·5 இலட்சம் பேர்கள் இத் தொழிலாளர் குழுவுடன் சேர்க்கப்படுவார்கள் என மதிப்பிட்டது. இப்பொழுதிருக்கும் கற்றோர் வேலையின்மை 5·5 இலட்சமாகும். ஆகவே இரண்டாம் திட்டத்தின் ஐந்து ஆண்டுகளில் வேலையின்மையை நீக்க 2 மிலியன் வேலை வாய்ப்புகள் (14·5 இலட்சம்; மேலும் 5·5 லட்சம்) தேவையாகும். இரண்டாம் திட்டத்தில் இருக்கும் பல திட்டப்பணிகள் ஒரு மிலியன் வேலை வாய்ப்புகளை அளிக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது. தனியார் துறை ஏறக்குறைய இரண்டு இலட்சம் பேர்களுக்கு வேலை அளிக்கும். இப்பொழுது வேலையிலிருப்போர் வயதின் காரணமாக ஓய்வு பெறும்பொழுது, அடுத்த ஐந்து ஆண்டுகளில் 2·4 இலட்ச வேலைகள் காலியாகும். ஆகவே 1 மிலியன், 2 இலட்சம், 2·4 இலட்சம், இவைகளைக் கூட்டியபின் துண்டு விழுவது 5·6 இலட்சமாகும். வேறு விதத்தில் கூறினால், கற்றோரிடையே வேலையற்றவரின் தொகை இரண்டாம் திட்டத்தின் முதலிலிருந்தது போலவே இறுதியிலும் இருக்கும்.

வேலையின்மைப் பிரச்சினையைப்பற்றி ஆராயும்பொழுது எவ்வகையான கல்விக்கு வேலை வாய்ப்புகள் ஏற்படவேண்டும் என்பதைத் திட்டமாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இப் பிரச்சினையில்

இரு பாகங்கள் இருக்கின்றன; பிராந்திய நோக்கு, தொழில் நோக்கு ஆகிய இரண்டும் தனித்தனியே ஆலோசிக்கப்படவேண்டும்.

கற்றோரிடையே கூடச் சிலர், தங்கள் நிலப்பரப்பைவிட்டு வெளியே சென்று வேலை தேட விரும்புவதில்லை. இதனால் சில வேலைத் தகவல் நிலையங்களில், சிலவகைப் பயிற்சியும், கல்வியும் உள்ளவர்கள் உபரியாகவும், அதே வகுப்பினர் இன்னும் சில வேலைத் தகவல் நிலையங்களில் பற்றுக்குறையாகவும் இருக்கின்றனர். ஆகவே ஒரு பிரதேசத்தில் உபரியாக உள்ளவர்களை மற்ற பிரதேசங்களுக்குப் போகச் செய்வதற்கு வேண்டிய ஊக்கமும் வசதியும் அளிப்பது இன்னொரு பிரச்சினை. தொழில் நோக்கைப் பொறுத்தவரை, அது போன்றவர்களுக்கு உள்ள தேவையை மதிப்பிடுவதிலும் அவர்களின் அளிப்புக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதிலும் மிகுந்த கவனத்துடன் இருக்கவேண்டும்.

39. **ஆராயும் குழுவின் ஆலோசனைகள்:** இந் நிலையை மனதில் வைத்து, ஆராயும் குழு கற்றோருக்கான சில வேலை வாய்ப்புகளைப்பற்றி ஆலோசனைகள் அளித்தது. கற்றறிந்தோரில் பெருந் தொகையினருக்கு வேலை வழங்க, உற்பத்தியிலும் பங்கீட்டிலும் கூட்டுறவு நிறுவனங்களைப் பலமுள்ளதாக ஆக்கவேண்டுமென அக் குழு பரிந்துரைத்தது. அதே காரியத்திற்காகச் சில சிறுபான்மைத் தொழில்களை நிறுவ வேண்டுமென ஆலோசனை கூறியது. (உதாரணமாகக் கைக்கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில்கள், பந்தய் விளையாட்டுச் சாமான்கள், தட்டுமுட்டுப் பொருள்கள் உற்பத்தி செய்யும் தொழில்கள் முதலியன; மற்றத் தொழில்கள் இயங்க உதவி புரியும் வார்ப்படச் சாலைகள், தானுக இயங்கும் வாகனங்களை விற்கும் கடைகள், மின் முலாம் பூசும் கடைகள் முதலியன ; மோட்டார் சைக்கிள் முதலியன ; பழுதுபார்க்கும் பணித் தொழில்கள் முதலியன). அக் குழு ஆதரித்த இன்னொரு கருத்து, கூட்டுறவுப் பண்டங்களின் போக்குவரத்துக்கான ஒரு திட்டமாகும்; இதில் ஓர் அலகுக்கு 5 வாகனங்கள் வீதம் 1,200 நகரத்திற்குள் செயலாற்றும் அலகுகளும், ஓர் அலகுக்கு 25 வாகனங்கள் வீதம் 240 நகரங்களிடையே செயலாற்றும் கூட்டுறவு அலகுகளும் இருக்கும். கற்றோர்க்கு உடல் உழைப்பின்மேல் விருப்பம் ஏற்படவும், தனியாரின் விருப்பங்களை அறிந்துகொள்ளவும், கல்வி அடிப்படையில் பயிற்சி முகாம்களை (Orientation Camps) அமைக்க வேண்டும்.

பின் பக்கத்தில் வரும் அட்டவணை, பல திட்டங்களின் நிதிப் பொறுப்புகளையும், வேலைவாய்ப்புத் திறனையும் காட்டுகிறது.[1]

[1] Second Five year Plan, p. 123.

அரசாங்கப் பணிக்கு ஆட்களை நியமிக்கும் முறையில் முன்னேற்றம் இருக்கவேண்டும் என ஆலோசனை கூறியது. குறிப்பிட்ட காலங்களில், ஒரே மாதிரித் தகுதிகள் வேண்டிய வேலைகளுக்கு பொதுத் தேர்வு வைக்கவேண்டும்; ஒரு தகுதிப் பட்டியலை வைத்துக் கொண்டு வேலையாட்களை நியமித்தல் வேண்டும். அப் பட்டியலில் சேர்க்கப்படாதவர்கள் தங்களுக்கு அவ் வேலை கிடைக்காது எனத் தெரிந்து கொண்டு, அவ் வேலைக்கே தொங்கிக் கொண்டிருப்பதை விட்டு, வேறு வேலைகளைப்பற்றி நினைக்கத் தொடங்குவார்கள். நிறையத் தகுதிகள் பெற்றவர்கள் தங்களுக்கு ஒத்த இடங்களில் வேலை பெறப் பல்கலைக்கழக வேலைத் தகவல் தரும் நிலையங்களை (University employment bureaux) ஏற்படுத்த வேண்டும்; வேலை தேடித் தூரத்திலிருக்கும் நகரங்களுக்குச் செல்வோருக்கு உணவு, தங்க வசதிகள், குறைந்த செலவில் அளிக்க வேண்டும்.

| திட்டங்கள் | மதிப்பிடப் பட்ட மொத்தம் முதலீ (ரூ. கோடியில்) | திரும்பப் பெறும் இனங்கள் (ரூ. கோடியில்) | நிகரச் செலவு (ரூ. கோடியில்) | வேலைத் திறன் (எண்ணிக்கை) |
|---|---|---|---|---|
| சிறுபான்மைத் தொழில்கள் [1] | 84·0 | 58·3 | 25·7 | 1,50,000 |
| கூட்டுறவுப் பண்டங்களின் போக்குவரத்து | 20·0 | 18·0 | 2·0 | 32,000 |
| மாநில அரசாங்கங்களின் திட்டங்கள் | 19·0 | 9·5 | 9·5 | 53,000 |
| வேலை, பயிற்சி முகாம்கள் | 7·1 | nil | 7·1 | nil |
| மொத்தம் ... | 130·1 | 85·8 | 44·3 | 2,35,000 |

கற்றோர் வேலையில்லாமல் இருப்பதற்குக் காரணம், நமது கல்வி முறை அரசாங்க அலுவலர்களையும், எண்ணிக்கையில் மிக அதிகமான குமாஸ்தாக்களையும் உற்பத்தி செய்வதை நோக்கமாகக் கொண்டிருப்பதுதான். அத்தகையோர் தேவைக்கு மேல் மிக அதிகமாக

[1] கிராமத் தொழில்களிலிருந்து மாறுபட்டவை.

இருக்கின்றனர்.[1] 1924 ஆம் ஆண்டு முதல் மத்தியதர வகுப்பினர் வேலையின்மையைப்பற்றி ஆலோசித்த அநேக குழுக்கள், நமது கல்வி முறை இலக்கியத்தன்மை வாய்ந்ததாக உள்ளது எனவும், ஒரு சில வாழ்க்கைத் தொழில்களுக்கே அது பயிற்சி அளிப்பதாகவும் புகார் கூறுகின்றன.[2] கல்வித்திட்டம் பல்வேறு மாறுபட்ட விதங்களில் இருந்திருந்தாலும், கற்றோருக்கான வேலைவாய்ப்புகள் சமீப காலம் வரை மிகக் குறைவாக இருந்தன. இப்பொழுது நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைப் பல வகைப்படுத்தும் முயற்சிகள் உறுதியாக நடைபெற்றுக் கொண்டிருப்பதால், கல்வியை, முன்னேறிக்கொண்டு வரும் பொருளாதாரத்தின் தேவைகளுடன் நெருங்கி இணைப்பது உடனே செய்யவேண்டியதாகும்; கல்வி கற்ற, பொருத்தமற்றோரை அல்லது தகுதியற்றோரை உற்பத்தி செய்வதும் நிறுத்தப்பட வேண்டும்.

ஆராயும் குழு பரிந்துரைத்த சில திட்ட வகைகளை மாதிரி முன் திட்டங்களாக (pilot project) ஆரம்பித்து, அவைகளால் ஏற்படும் உணர்ச்சிகளை அறியத் தீர்மானித்தனர். சிறுபான்மைத் தொழில்களில் இது ஏற்கெனவே ஆரம்பித்துவிட்டது. இத் திட்டம், ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் ஆண்டில் 10,000 கல்வி கற்றோருக்கு வேலை அளிக்கும். முதலில் 1,000 வாலிபர்களுக்கு வேலை, பயிற்சிப் பாசறைகள் ஆரம்பிக்கப்பட்டன; கூட்டுறவுப் பொருள்கள் போக்குவரத்துத் திட்டம், 500 வாகனங்களுடன் துவக்கப்படவிருக்கிறது. கார்வே குழுவின் பரிந்துரைகளை நிறைவேற்ற ஏற்கெனவே தற்காலிகமாக ஒதுக்கப்பட்டிருக்கும் நிதி, சிறு பான்மைத் தொழில்களின் மாதிரி, முதற் திட்டங்களுக்காகப் பயன்படும். இந்தப் பயிற்சிப் பாசறைகள், கூட்டுறவுப் பொருள்கள், போக்குவரத்து முதலியவற்றிற்கான நிதி,

[1] 'பல்கலைக் கழகக் கல்வி பெறும் மாணவர்களின் எண்ணிக்கை 1931ஆம் ஆண்டு 74,000-விருந்து, 1951ஆம் ஆண்டு 4,44,000 ஆக அதிகரித்தது; உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் எண்ணிக்கை 18 இலட்சத்திலிருந்து 57 இலட்சத்திற்கு அதிகரித்தது. இந்த வகுப்பினருக்கு ஏற்ற வேலைகள் எண்ணிக்கையில் நிச்சயமாக அதிகரிக்கவில்லை'. (1955 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 16ஆம் விவசாயப் பொருளாதார மாநாட்டில் பேசிய ரிசர்வ் பாங்கு கவர்னர் திரு. ராமா ராவ் உரையிலிருந்து எடுக்கப்பட்டது.) 108ஆம் பக்கத்திலுள்ள எண்கள் உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கை 1951-ல் 48 இலட்சம் என்றும் 57 இலட்சம் அன்று எனவும் காட்டுகின்றன. எனினும் திரு. ராமராவ் அவர்களின், 'வேலைகளின் எண்ணிக்கை... வீதப்படி அதிகரிக்கவில்லை' என்னும் உரை உண்மையே.

[2] 1925 ஆம் ஆண்டு வங்காள வேலையின்மைக் குழு (The Bengal Unemployment Committee) கல்வித் திட்டத்தைக் கீழ்க்கண்டவாறு வர்ணித்தது : 'அது ஒரு மூங்கிலைப் போன்றது. ஒவ்வொரு கணுவும் ஒரு தேர்வு ஆகும். அதன் அடியிலிருந்து அநேகமாக உச்சி வரை குறுக்களவு ஒரே மாதிரி இருக்கின்றது. அதற்குக் கிளைகள் கிடையா; உச்சியில் அது மிகக் குறைந்த பரப்பு உடையது. நமக்கு வேண்டுவது, உச்சியில் இல்லாமல், அடிமரத்திலிருந்தே கிளைகள் எல்லா இடங்களிலும், எவ்வளவு திக்குகளில் முடியுமோ, அவ்வளவு திக்குகளிலும் படர்ந்து வளர வேண்டும்.

கற்ேருர் வேலையின்மையை நீக்க மேற்கொள்ளும் சிறப்புத் திட்டங்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் மொத்தத் தொகை ரூ. 5 கோடியிலிருந்து எடுத்துக் கொள்ளப்படும்.

40. **பற்ருக்குறை நிதியாக்கம்:** 'திட்டமிட்ட முன்னேற்றத்தை மேற்கொண்ட ஒரு பொருளாதார அமைப்பில், திட்டமிட்ட முன்னேற்றத்தின் செலவில் ஒரு பகுதி நடைமுறை உற்பத்தியை அதிகரித்துக் காட்டும். ஆகவே மொத்த உற்பத்தி சிறிது அதிகமாயிருக்கிறது; இஃதன்றிச் சமூகத்திற்குள் பண அளிப்பை அதிகரிக்க முடியாது.'[1] பற்ருக்குறை நிதியாக்கத்தின் பயன்களைப்பற்றிய இக் கருத்தை (வளங்களின் குறைபாடு எனக் கருதாமல், பணத்தின் குறைபாடு எனக் கருதி அதை நீக்க முயலும்பொழுது) எல்லோரும் ஒப்புக் கொள்ளுகின்றனர். ஆயினும் பணவீக்கத்தின் பயமின்றி எந்த அளவுக்குக் கடன்களை ஏற்படுத்தலாம் என்பதற்கு எந்த ஒரு சூத்திரமும் கிடையாது. முதலீட்டுச் செலவு வருமானத்தை அதிகரிக்கிறது; அதில் ஒரு பகுதி மக்களிடத்தில் இருக்கும் அதிகரித்த ரொக்க இருப்பில் சென்றுவிடுகிறது. பற்ருக்குறை நிதியாக்கமும், கடன்களை ஏற்படுத்துதலும், முதலீட்டுக்குப் பின் நிகழும் அதிகரித்த உற்பத்தி வீதம், ரொக்க இருப்புக்கு அதிகமாக ஏற்பட்டிருக்கும் தேவை இவைகளுக்கு மேல் செல்லக்கூடாது. பொதுப்படையாக நாம் எந்த அளவிற்குப் பற்ருக்குறை நிதியாக்கம் அனுமதிக்கப்படலாம் எனக் கூறினுலும், ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் பொருளாதார அமைப்பு சரியாக இயங்க, கடன்கள் எவ்வளவு உண்டாக்கப்பட வேண்டும் என்பதைத் திட்டமாகக் கூறமுடியாது. இந்தக் காரியத்தில் நாம் பொருளாதாரத் துறையினர், வர்த்தகர்கள், பாங்கர்கள் முதலியோருடைய அனுபவம் வாய்ந்த கருத்துக்களைத்தான் நம்பவேண்டும். ஆனுல் துரதிருஷ்டவசமாக இதைப்பற்றி ஒரு முடிவுக்கு வரக்கூடிய இவர்கள் பல்வேறு விதமாகப் பேசுகிருர்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் பற்ருக்குறை நிதியாக்கத்தைப்பற்றிப் பல வகைக் கருத்துகள் கூறப்பட்டதே இதைக் காட்டுகிறது. பன்னுட்டு நாணய நிதி (International Monetary Fund) நிபுணர்கள் திட்டத்தில் கண்டுள்ள ரூ 1,200 கோடி பற்ருக் குறை நிதியாக்கம் மிக அதிகமானது எனக் கருதினர்; அவர்கள் ரூ. 300 கோடியிலிருந்து ரூ. 400 கோடி வரைதான் அனுமதிக்கக் கூடிய உச்சத் தொகை எனக் கருதுகின்றனர். அவர்களின் கருத்துப்படி, திட்டத்தில் கண்டுள்ள அளவு பற்ருக்குறை நிதியாக்கம், ஒவ்வொரு வருடமும் பத்துச் சத

[1] Memorandum of Panel of Economists, 1955, பிரிவு 10. இந்தியாவில் பற்ருக்குறை நிதியாக்கத்தைச் செய்யும் வழி, அரசாங்கம் ரிசர்வ் பாங்கிலிருந்து கடன் வாங்கவேண்டும்; அதனுடனே அல்லது தனியாகவோ ரொக்க இருப்பைக் குறைக்கவேண்டும்.

வீதம் அதிகரிக்கிறது; இதில் பாங்குகளின் கடன்மேல் இரண்டாந்தர மோதுதல் இல்லை எனவே வைத்துக் கொண்டாலும் மேற்கூறியது உண்மை. இத்தகையதோர் அதிகரிப்பு ஐந்து வருட காலத்தில் பணவீக்கத்தை உண்டாக்கும்.

இரண்டாம் திட்டத்தின் பொதுத்துறைத் திட்டங்கள், ஐந்து ஆண்டுகளில் முடிக்கமுடியாத அளவிற்கு மிக அதிகமாய் இருக்கின்றன என உலக பாங்குக் குழு (The World Bank Mission) வின் தலைவர் திரு. தாமஸ் மிக்கிட்ரிக் (Mr. Thomas McKittrick) கருதுகிறார். பற்றுக்குறை நிதியாக்கத்தை உபயோகிப்பதில் இந்திய அரசாங்கத்திற்கு அதிகக் கவனம் வேண்டுமென்றும் அவர் கூறினர். இன்னொரு நிபுணர், திரு. நிக்கோலாஸ் கால்டர் (Mr. Nicholas Kaldor) அவர்கள் கூறியபடி, 'ஒரு வருடத்தில் நாட்டின் பொருளாதாரம் தாங்கக்கூடிய பற்றுக்குறைச் செலவு ரூ. 150 கோடிக்குமேல் இருக்கமுடியாது.'[1] பேராசிரியர் பி. ஆர். ஷெனுய் (Prof. B. R. Shenoy), பாதுகாப்பு வரம்பை இன்னும் குறைந்ததாக ஆக்கினர் (உதாரணமாக ரூ. 320 கோடி). பற்றுக்குறை நிதியாக்கம் மிகக் குறைவாகவும், மிகுந்த கவனத்துடனும் உபயோகப்படுத்த வேண்டும் என்பது பொதுவான கருத்து. மேலும் தொடக்க நிலையிலிருக்கும் பணவீக்கத்தை உடனே சரியாக்கத் தகுந்த ஆயுதங்களைத் தயாராக வைத்திருக்கவேண்டும். இந்தியாவைப் பொறுத்தமட்டில் வியாதி வந்தபின் குணமாக்குவதைவிட, அது வராமல் தடுப்பதே நல்லது; ஏனெனில், முன்னேற்றமில்லாத நமது நாட்டைப்போன்ற ஒன்றில் பணவீக்கம் ஆரம்பித்தால், கருவூல அல்லது நிதிக் கொள்கைகள் அதை அடக்கமுடியாது.

ஆகவே நாம் பெரும்பாலும் வரிகள், கடன்கள் இவற்றையே உபயோகித்து, பற்றுக்குறை நிதியாக்கத்தை மிகக் குறைந்த அளவில் உபயோகிக்கவேண்டும். பணவீக்க ஆபத்திலிருப்பதைவிட, நமது முன்னேற்றத்தின் இலக்குகளைக் குறைத்துக்கொள்ளலாம்; அல்லது அவைகளை நீண்ட காலத்திற்கானவைகளாக ஆக்கலாம்.

இச் சமயத்தில் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் இலக்குகள் மிகுந்த பேரவாவைக் காட்டுகின்றன எனச் சில பொறுப்புள்ளோர் குறை கூறுவதையும் சிந்திக்கவேண்டும். முதல் திட்டத்தின் இறுதியில்விட (1955-6), 1960-61 ஆம் ஆண்டு இறுதியில் இரண்டாந் திட்டத்தில் கூறியுள்ளபடி நிகர மூலதன ஆக்கம் 62 சதவீதம் அதிகமாக இருக்கும். அதாவது ஒவ்வொரு வருடமும் 12 சதவீதத்திற்கும் அதிகமாக உயரும். முதல் திட்ட காலத்தில் நாட்டு வருமானம்

[1] Kaldor Report, p. 1.

ஒவ்வோர் ஆண்டும் 2·5 சதவீதத்திற்கும் குறைவாக உயர்ந்ததை நோக்கும்பொழுது, இரண்டாம் திட்ட காலத்தில் நாட்டு வருமானம் ஒவ்வோர் ஆண்டும் 5 சதவீதம் அதிகரிக்கும் என எதிர்பார்ப்பதும் நிறைவேறாத பேரவா ஆகும்.[1] நாம் இலக்குகளை நிர்ணயம் செய்யும் பொழுது, நமது குறைந்த சேமிப்புத் திறன், அதனால் வரும் சாதாரண முதலீட்டு வீதம் முதலியவற்றை மறந்துவிடக் கூடாது. இரண்டாவது திட்டத்தில் கூறப்பட்டுள்ளதைவிட இன்னும் குறைவான முன்னேற்ற வீதத்தில் நாம் திருப்தி அடையவேண்டும். முன்னேற்றத்திற்கான செலவுகளை நாம் கண்காணித்துக் கொண்டிருப்பது அவசியம்; அது நமது கையிலிருக்கும் அல்லது நமக்குக் கிடைக்கப்போகும் நிதி வளங்களுக்குமேல் செல்லக்கூடாது.[2]

பற்றாக்குறை நிதியாக்கத்தின் உடனடியான விளைவு என்னவென்றால் மக்கள் கையில் அதிகப் பணத்தைக் கொடுப்பதாகும்; அதன் விளைவாக விலைகளின் ஏற்றமும், நுகர்வோர் பொருள் உற்பத்தியில் அதிகரிப்பும் ஏற்படுகின்றன. ஒரு பகுதியின் விலையேற்றம் மற்றப் பகுதிகளுக்கும் பரவுகின்றது. இதனால் நாட்டின் திட்டங்களுக்கு முதலில் மதிப்பிடப்பட்ட செலவுகள் பாதிக்கப்பட்டு, அதிகப் பணம் அவைகளுக்குக் கொடுக்கவேண்டும். உற்பத்தியில் அதிக தாமதமோ அல்லது குறைவோ ஏற்பட்டால் பணவீக்கத்தின் நன்கு தெரிந்த தீமைகள் உடனே வரும். அத்தகைய தீமைகளாவன: இருப்புகளில் அதிக முதலீடு செய்தல், உண்மைச் சொத்து (முக்கியமாக நகரத்திலிருக்கும் சொத்து), அயல்நாட்டு வாணிக மாற்று இருப்புகள் இவற்றில் அதிக முதலீடு செய்வது; முதற் கருவிப் பொருள்களுக்குப் பதில், நுகர்வோர் பொருள் உற்பத்திப் பொருள்களில் தவறாக முதலீடு செய்தல்;[3] நிலையான மதிப்பு உடைய பொருள்களை, உதாரணமாகத் தங்கத்தைப் பதுக்கும் போக்கு அதிகமாதல்; வெளிநாட்டுக் கொடுப்பல் நிலையைப் பற்றிய துன்பங்கள்.[4]

1 Note of Dissent to the Memorandum of the Panel of Economists, April, 1955, by Professor B. R. Shenoy, para. 10.

2 நிதியமைச்சர், திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி (Sri T. T. Krishnamachari), பன்னாட்டு மறுசீரமைப்பு, முன்னேற்றப் பாங்கின் (International Bank for Reconstruction and Development) தலைவர் திரு. யூஜின் பிளாக்கிற்கு (Mr. Eugene Black) எழுதிய கடிதத்தில் இந்தியச் சூழ்நிலையில் சமூக உறுதிப்பாடு (நிதி உறுதிப்பாட்டைவிட முக்கியமானது) இருப்பது நாட்டின் முன்னேற்றம் செல்லும் வேகத்தை முழுவதும் பொறுத்ததாகும் எனக் குறிப்பிட்டார்.

8 பணவீக்கம் அநேகரின் உண்மைச் சம்பாதிப்பைக் குறைக்கிறது; சிலருக்குத் தாங்கள் சம்பாதிக்காமலேயே பொருள் சேர்கிறது; அவர்கள் அதைப் போகப் பொருள்கள்மீது அதிகமாகச் செலவு செய்கின்றனர். ஆகவே திட்டமிடப்பட்ட முன்னேற்றத்திற்குக் குறைந்த மூலதனம் கிடைக்கிறது.

4 பணவீக்கத்தினால் விலைகள் உயருவது ஏற்றுமதி வாணிகத்தைப் பாதிக்கும்; அயல்நாட்டுச் செலாவணி வரவு குறையும்; இது முன்னேற்றத்திற்கு வேண்டிய சாதனங்களையும், பொருள்களையும் இறக்குமதி செய்வதைக் கடினமாக்கும்; அயல் நாட்டு மூலதனத்தை நமது நாட்டுக்கு ஈர்ப்பதும் கடினமாகும்.

பற்றுக்குறை நிதியாக்கத்தினுல் விளையும் பணவீக்கத்தைத் தவிர்க்கவேண்டுமானுல், அதிகமான பணம், பணச் சுழற்சியில் சிக்காமலும், அல்லது விலைவாசி நிலைமீது தனது முழு பலத்தையும் செயலாற்ருவண்ணம் பார்த்துக்கொள்ளவேண்டும். ஆனுல் மக்களின் அடிப்படைத் தேவைகள்கூடப் பூர்த்தியாகாத இந்தியா போன்ற ஒரு நாட்டில் இத்தகைய முறைகளைக் கையாளுவது சுலபமன்று. வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளையே பூர்த்தி செய்யமுடியாமல் வாடும் மக்கள், தாங்களாகவே செலவைக் குறைத்துக் கொள்வார்கள் என எதிர்பார்ப்பது வீண்.[1] விலைக் கட்டுப்பாட்டு முறையை உபயோகிப்பதும் சுலபமன்று; ஏனெனில், மற்ற காரணங்களுக்காக இல்லாவிட்டாலும், நிர்வாகக் காரணத்திற்காவது, கட்டுப்பாடுகள் பொதுவானவையாக ஆகமுடியாது. ஒரு பகுதியில் விலையைக் கட்டுப்படுத்தினுல், மற்ற பகுதிகளில் அது ஏறும்; முடிவில் எல்லாப் பொருள்களும் பாதிக்கப்படும்.

**41. 1948 ஆம் ஆண்டுத் தொழிற் கொள்கைத் தீர்மானம்:** சுதந்தரம் அடைந்ததற்குப் பின்னர், இந்திய அரசாங்கத்தின் தொழிற் கொள்கை, 1948 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6 ஆம் தேதி பிரகடனம் செய்யப்பட்ட தொழில் கொள்கைத் தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டது. இத் தீர்மானத்தின் உடனடியான நோக்கம், கல்வி வசதிகளை அளிப்பது, சுகாதாரப் பணிகள் அளிப்பது, நாட்டின் வளங்களை நன்கு பயன்படுத்தி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது, உற்பத்தியைப் பெருக்குவது, எல்லோருக்கும் வேலை வாய்ப்பு அளிப்பது முதலியன.

அரசாங்கம் தொழில் வளர்ச்சியில், நாம் விரும்பும் அளவிற்குச் செயலாற்ற அதன் அமைப்புகளையும், வளங்களையும் அனுமதிக்காவிட்டாலும், அது ஒரு முக்கியப் பங்கு எடுத்துக்கொள்ளும். இன்னும் கொஞ்ச காலத்திற்கு அரசாங்கம் எங்கெங்கெல்லாம் நடவடிக்கைகள், எடுத்துக்கொண்டிருக்கிறதோ, அந் நடவடிக்கைகளை விரிவாக்கி, மற்றத் துறைகளில் உள்ள தொழில்களை எடுத்துக் கொள்வதைவிட, புது உற்பத்தி அலகுகள்மீது கவனஞ் செலுத்தி, நாட்டின் செல்வம் பெருக வழி செய்யும். அரசாங்கத்தின் சர்வாதீனத்திலிருக்கும் தொழில்களாவன: (i) போர்க் கருவிகளும், பொருள்கள் உற்பத்தியும், (ii) அணுசக்தியின் உற்பத்தியும், கட்டுப்பாடும், (iii) இருப்புப் பாதைப் போக்குவரத்தின் உடைமையும் நிர்வாகமும், (iv) அவசர காலத்தில், நாட்டின் பாதுகாப்பிற்கு முக்கியமான தொழில், பின்

[1] பணவீக்கத்தின் விலை உயர்வைத் தடுக்க வெளிநாடுகளிலிருந்து நிறையப் பொருள்களைப் பெற ஏற்பாடுகள் செய்யலாம். ஆனுல் இதற்கு வேண்டிய அளவு அயல்நாட்டுச் செலாவணி இல்லாமல் இருக்கலாம்.

வரும் தொழில்களைப் பொறுத்தமட்டில், புது நிறுவனங்களை ஏற்படுத்துவது என்பது, அரசாங்கம் நாட்டு நலனுக்காகத் தனியார் துறையின் ஒத்துழைப்பையும் பெறுவது அவசியம் எனக் கருதினுலொழிய, அரசாங்கத்தின் தனிப் பொறுப்பாகும்: (i) நிலக்கரி (இந்திய நிலக்கரிச் சுரங்கங்கள் குழுவின் ஆலோசனைகளைப் பொதுவாகப் பின்பற்றும்.), (ii) இரும்பும் எஃகும், (iii) விமான உற்பத்தி, (iv) கப்பல் கட்டுதல், (v) ரேடியோ உற்பத்தி தவிர, தொலைபேசி, தந்தி, கம்பியில்லாத் தந்தி முதலியவற்றை உற்பத்தி செய்வது, (vi) கனிப் பொருள், எண்ணெய்கள் ஏற்கெனவே மேற் கொள்ளப் பட்டிருக்கும் தொழில் உடன்பாடுகள் பத்து ஆண்டுகளில் வளர்ச்சியுற அனுமதிக்கப்படும்; அதன் முடிவில் இது திரும்பச் சரிபார்க்கப் படும். சரியீட்டு உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிக்கப்படும்.

மின்சார உற்பத்தி, பங்கீட்டைத் தவிர (இதற்குத் தனியாகக் கட்டுப்பாடு இருந்தது), தொழில் துறையில் மற்றவை, தனியார் துறையாலும் எடுத்துக் கொள்ளப்படலாம்; ஆனுல் அதில் நல்ல முன்னேற்றம் இருக்கவேண்டும் என ஒரு நிபந்தனை இருக்கிறது. தொழிலில் ஒரு பகுதியான 'முக்கிய அடிப்படைத் தொழில்களை' மத்திய அரசாங்கமே திட்டமிட்டுக் கட்டுப்படுத்தும். ஏனெனில் அவைகளுக்கு அதிக முதலீடும், உயர்ந்த தொழில் முறைத் திறமையும், அவைகளின் அமைப்பில் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடும் வேண்டும். இத் தொழில்களாவன: உப்பு, தானுக இயங்கும் வாகனங்கள், டிராக்டர்கள், இயந்திர சக்தி உற்பத்திச் சாதனங்கள், மின்சாரப் பொறியியல், கனரக இயந்திரங்கள், இயந்திர சாதனங்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள், உரங்கள், மருந்து உற்பத்தித் தொழில், மின்சார இரசாயனத் தொழில்கள், இரும்பு கலவாத உலோகங்கள், ரப்பர் உற்பத்தி, தொழில், விசைச் சாராயம், பருத்தி, கம்பளித் துணிகள், சிமெண்ட், சர்க்கரை, காகிதம், செய்தித்தாள் காகிதம், ஆகாய, கடல் போக்குவரத்து, கனிப் பொருள்கள், பாதுகாப்பு சம்பந்தப்பட்ட தொழில்கள். பல நோக்குத் திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பு அரசாங்கத்திடமே இருக்கிறது. அரசாங்கம், கலவை எண்ணெய் (synthetic oil), முக்கிய மருந்துகள் உற்பத்தி செய்யும் தொழில்களையும் எடுத்துக்கொள்ளும் நோக்கத்துடன் இருக்கிறது.

இக் கொள்கையில் முக்கிய மாறுபாடுகளும் இருக்கின்றன. உதாரணமாகப் புது இரும்பு, எஃகு ஆலைகள் அமைப்பது, வேண்டிய மூலதனம் திரட்ட வசதி உள்ள தனியாரிடம் விடப்பட்டிருக்கிறது. மேலும் தனியார் தொழில்கள், சில உறுதியளிப்பதற்குப்பின் எண்ணெய் சுத்தம் செய்யும் தொழிலையும் மேற்கொள்ளலாம். அவ்வாறு

மேற்கொள்ளப்பட்ட எண்ணெய் சுத்தம் செய்யும் தொழில்கள், 25 ஆண்டுகளுக்குத் தேசீயமயமாக்கப்படா என அரசாங்கம் உறுதி மொழி கொடுத்திருக்கிறது. மேலும் அதிகாரபூர்வமான அறிக்கைகள், தேசீயமயமாக்கும் பயமுறுத்தல் இப்பொழுது அவ்வளவு இல்லை என்பதைக் காட்டுகின்றன.

**42. தொழில் (முன்னேற்ற, கட்டுப்பாடு) சட்டம், 1951:** 1951 ஆம் ஆண்டின் தொழில் (முன்னேற்ற, கட்டுப்பாடு) சட்டம், 1952 ஆம் ஆண்டு, மே மாதம் 8 ஆம் தேதி செயலுக்கு வந்தபொழுது, நாட்டின் எல்லா முக்கியத் தொழில்களையும், தோட்டத் தொழிலைத் தவிர, (except plantation industries) அரசாங்க மேற்பார்வையின்கீழ்க் கொண்டு வந்தது. இது கீழ்க்கண்ட 37 குறிக்கப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களின்மேல் செயலாற்றியது: விமானங்கள், போர்க் கருவிகளும் பொருள்களும், நிலக்கரி, இரும்பு, எஃகு, தொலைபேசிகள், தந்தி, கம்பியில்லாத் தந்தி, கணித விஞ்ஞானக் கருவிகள், பெட்ரோலியம் பொருள்கள், கப்பல்கள், சர்க்கரை, சணல், பருத்தி, கம்பளித் துணிகள், தானுக இயங்கும் வாகனங்கள், சிமெண்ட், மின்சார விளக்குகள், விசிறிகள், மோட்டார்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள், கனரக இயந்திரங்கள், இருப்புப்பாதை எஞ்சின்கள், இயந்திரச் சாதனங்கள், மின்சார இயந்திரங்கள், இரும்பு கலவாத உலோகங்கள், காகிதம், மருந்து உற்பத்தி, தொழில் விசைச் சாராயம், ரப்பர்ப் பொருள்கள், தோல், தோலால் செய்யப்பட்ட பொருள்கள், தாவர எண்ணெய்கள், விவசாயச் சாதனங்கள், பாட்டரிகள், சைக்கிள்கள், அரிக்கேன் விளக்குகள், உள்ளுக்குள் எரியும் எஞ்சின்கள் (internal combustion engines), குழாய்கள், ரேடியோக்கள், தைக்கும் பின்னும் இயந்திரங்கள், சிறு சாதனங்கள், கண்ணுடி, மண்பாண்டத் தொழில். இது (i) இப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் உடைமையாளர்கள் அரசாங்கத்தில் பதிவு செய்யவேண்டுமெனக் கூறியது. (ii) சில நிபந்தனைகளுடன் அரசாங்கம் கொடுக்கும் அனுமதியின்றிப் புது நிறுவனங்களை ஏற்படுத்துவதையும், ஏற்கெனவே இருக்கும் நிறுவனங்களைக் கணிசமான அளவு விரிவாக்குவதையும் தடைசெய்தது. (iii) மத்திய அரசாங்கத்திற்குக் கீழ்க்கண்ட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன: (அ) விசாரணை செய்யவும், கட்டளைகள் இடவும்; விரும்பத்தகுந்த தரத்தில் குறைவு ஏற்பட்டாலும், நுகர்வோர் நலனுக்கு ஊறு விளைவிக்கும் வகையில் நிர்வாகம் திறமையற்றிருந்தாலும், அந் நிறுவனங்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம்; (ஆ) குறிப்பிடப்பட்ட தொழில்களின் (scheduled industries) முன்னேற்றத்தையும், கட்டுப்பாட்டையும் பற்றி ஆலோசனை கூற மத்திய ஆலோசனைக் குழுவை (Central Advisory Council)

அமைக்கும் அதிகாரம் ; (இ) தனிப்பட்ட தொழில் தொகுதிகளுக்கு, முன்னேற்றக் குழுக்களை (Development Councils) ஏற்படுத்தும் அதிகாரம்.

43. **1956 ஆம் வருடம் ஏப்ரல் மாதம் 30 ஆம் தேதியின் தொழிற் கொள்கைத் தீர்மானம்:** 1948 ஆம் ஆண்டுத் தீர்மானம் நிறைவேறியபின் வந்த எட்டு ஆண்டுகளில் முக்கியமான மாற்றங்களும் முன்னேற்றங்களும் நிகழ்ந்துள்ளன. உதாரணமாக அரசியல் சட்டம் சில அடிப்படை உரிமைகளை உறுதிமொழியுடன் வழங்கி இருக்கிறது. சமூக, பொருளாதார, அரசியல் நீதியைக் கடைப்பிடிக்கும் சமூக அமைப்பிற்கான அரசாங்கத்தின் நெறிசெய் நியதிகள் கொள்கையை அளித்திருக்கிறது. 1954ஆம் ஆண்டு, சோஷலிச சமுதாயத்தைத் தனது இலட்சியமாகப் பாராளுமன்றம் ஏற்றுக் கொண்டது. இதன்படி அரசாங்கம் மட்டுமே முதலீடு செய்யக்கூடிய பெரும் முதலீட்டுத் தொழில்களுடன் அடிப்படை முக்கியத்துவம், போர் முக்கியத்துவம் வாய்ந்த தொழில்கள் அல்லது மக்களுக்குப் பயன்படும் பணிகள் போன்ற தொழில்கள் ஆகிய அனைத்தும் அரசாங்கத் துறையில் இருத்தல் வேண்டும். ஆனால் சில குறைகளின் காரணமாக அரசாங்கம் இவ்வாறு மேற்கொள்ளவேண்டிய தொழில்களில் முக்கியமான சிலவற்றையே எடுத்துக் கொண்டிருக்கிறது.

இப் பிரச்சினையின் எல்லாக் கோணங்களையும் அலசி ஆராய்ந்த பின், திட்டக்குழுவைக் கலந்து ஆலோசித்தபின், தொழில்களை இந்திய அரசாங்கம் மூன்று பிரிவுகளாகப் பிரித்தது. இது ஒவ்வொரு பிரிவிலும் அரசாங்கம் எடுக்கவேண்டிய பங்கைப் பொறுத்து அமைந்தது எத் தொழில்களின் வருங்கால முன்னேற்றம் முழுவதும் அரசாங்கத்தின் கைகளில் இருந்ததோ, அவை முதல் பிரிவில் இருந்த தொழில்களாகும். இரண்டாவது பிரிவில் இருந்த தொழில்கள் நாளடைவில் அரசாங்கத் தொழில்களாக மாறுபவை. ஆகவே அத் தொழில்களை நிறுவுவதில் பொதுவாக அரசாங்கமே அக்கறை எடுத்துக்கொள்ளும் ; ஆயினும் அரசாங்க முயற்சியுடன் தனியார் துறையும் ஒத்துழைக்க வேண்டும். மூன்றும் பிரிவு மற்ற எல்லாத் தொழில்களும் அடங்கியதாய் இருந்தது ; அவைகளின் எதிர்கால முன்னேற்றம் பொதுவாகத் தனியார் துறையின் முயற்சியைப் பொறுத்தது. தனியார் துறையின் தொழில் முயற்சிகள், அரசாங்க, சமூக, பொருளாதாரக் கொள்கையை ஒட்டி அமைதல் வேண்டும்; மேலும் அவை 1951 ஆம் ஆண்டு தொழில் (முன்னேற்றமும் கட்டுப்பாடும்) சட்டம், இன்னும் இது

சம்பந்தமான மற்ற சட்டங்களுக்கும் கட்டுப்பட்டவையே.[1] ஆயினும், பொதுவாக அந்த நிறுவனங்களுக்கு, நாட்டுத் திட்டத்தின் இலக்குகளுக்கும், நோக்கங்களுக்கும் இணங்க, எந்த அளவுக்குச் சுதந்தரம் கொடுத்து வளரவிட முடியுமோ, அந்த அளவிற்குச் சுதந்தரம் அளிக்கவேண்டும் என்பதை அரசாங்கம் உணர்ந்தது. ஒரே தொழிலில், அரசாங்க, தனியார் துறை அலகுகள் இருக்கும்பொழுது அரசாங்கம் அவைகளிடையே பாரபட்சமின்றி நடந்துகொள்ள வேண்டுமென்பது அரசாங்கத்தின் கொள்கையாகும்.

தொழில்களைப் பலவகையாகப் பிரித்ததிலிருந்தே அவைகள் ஒன்றுக்கொன்று எவ்விதத் தொடர்புமின்றி தனித்திருக்க வேண்டுமென்பதில்லை. ஒன்றுக்கொன்று ஓரளவு எல்லை கடந்து அமைவது இருக்கத்தான் செய்யும்; அரசாங்கத் துறை, தனியார் துறை தொழில்களிடையே பெரும் அளவில் இணைப்புகளும் இருக்கும்.

முதல் பிரிவில் (முழுதும் அரசாங்கத்தின்கீழ் இருப்பவை) பின்வரும் தொழில்கள் இருந்தன: போர்க் கருவிகள், பாதுகாப்புச் சம்பந்தமான மற்ற பொருள்கள், அணு சக்தி, இரும்பு-எஃகு, கனரக இரும்பு எஃகு வார்ப்படங்கள், இரும்பு எஃகு உற்பத்திக்கு வேண்டிய கனரக இயந்திரங்கள், சுரங்கத் தொழில், இயந்திரச் சாதனங்கள் உற்பத்தி, இன்னும் மத்திய அரசாங்கத்தால் குறிப்பிடப்படும் அடிப்படைத் தொழில்களுக்கு வேண்டிய இயந்திரங்கள்; கனரக மின்சார அமைப்புகள், பெரிய ஹைடிராலிக், நீராவி சுற்றும் இயந்திரம் (Large hydraulic and steam turbines) உள்பட; நிலக்கரி, பழுப்பு நிலக்கரி, கனிவகை எண்ணெய்கள்; இரும்புத் தாது, மங்கனீசத் தாது, க்ரோம் தாது, ஜிப்சம் தாது, கந்தகத் தாது, தங்கம், வைரம் முதலியவற்றின் சுரங்கத் தொழில்கள்; செம்பு, ஈயம், வெள்ளீயம், துத்தநாகம் (zinc), மோலிப்டீனம் (molybdenum), வோல்பிராம் (wolfram) முதலியவற்றின் சுரங்கத் தொழிலும், செம்மைப்படுத்தும் தொழிலும்; அணு சக்தி (உற்பத்தி உபயோகக் கட்டுப்பாடு) 1953 ஆம் ஆண்டு சட்டத்தின் குறிப்பிடப்பட்ட அட்டவணையில் கண்டுள்ளபடி கனி வகைகள்; ஆகாய விமானங்கள்; ஆகாயப் போக்குவரத்து, இருப்புப்பாதைப் போக்குவரத்து; கப்பல் கட்டும் தொழில்; தொலைபேசி; தொலைபேசி கேபிள் (telephone cables), தந்தி, கம்பியில்லாத் தந்தி (ரேடியோ பெட்டிகளைத் தவிர); மின்சார உற்பத்தியும் பங்கீடும்.

[1] *இச் சட்டம் முதலில் 37 வகை உற்பத்திகளுக்காக (42ஆம் பிரிவைப் பார்க்கவும்) ஏற்பட்டது; பின்னர் இன்னும் ஐந்து பொருள்கள் சேர்க்கப்பட்டன. 1956ஆம் ஆண்டின் அரசியல் சட்டத் திருத்தத்தின்படி, மேலும் 30 வகைகள் சேர்க்கப்பட்டன; அவைகளில் முக்கியமானவை, சிறப்பு எஃகு வகை, பழுப்பு நிலக்கரி, தொலைக் காட்சிப் பெட்டிகள், தொலை: அச்சு இயந்திரம், பருத்தி துணைப் பொருள்கள் முதலியன.*

இரண்டாம் பிரிவில் (அரசாங்கத் துறை, தனியார் துறை ஆகிய வைகளின்கீழ் இருப்பவை) உள்ள தொழில்கள்: மேலே சொல்லப் படாத கனிப் பொருள் வகைகள், 1949 ஆம் ஆண்டின் கனிப்பொருள் வகைச் சலுகைச் சட்டங்களில் (Minerals Concession Rules) விளக்கப் பட்ட 'சிறுகனிப் பொருள்கள் (Minor Minerals) தவிர; முதல் பிரிவில் சேர்க்கப்படாத அலுமினியமும் மற்ற இரும்பு சேராத உலோ கங்களும்; இயந்திரச் சாதனங்கள்; இரும்புக் கலவைகள் (ferro alloys), எஃகுச் சாதனங்கள், மருந்துகள், சாயங்கள், பிளாஸ்டிக்கு கள் ஆகியவற்றின் உற்பத்தியில், இரசாயனத் தொழில்களால் அடிப் படையாகவும் நடுத்தரத்திலும் வேண்டும் உற்பத்திப் பொருள்கள்; ஆண்ட்டிபையாட்டிக்ஸ் மற்ற முக்கிய மருந்துகள்; உரங்கள்; கலவை ரப்பர் (synthetic rubber); நிலக்கரியைக் கார்பனேசேஷன் செய்தல் (Carbonization of Coal); இரசாயனக் கூழ் (Chemical pulp); சாலைப் போக்குவரத்து; கடல் போக்கு வரத்து.

44. அரசாங்கத் தொழிற் கொள்கை பற்றிய மேற்குறிப்பு கள்: அநேக தொழில்களில் புது நிறுவனங்களை ஏற்படுத்தும் பொறுப்பைத் தனக்கே வைத்துக்கொள்ளும் 1956ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30 ஆம் தேதியின் தொழிற் கொள்கைத் தீர்மானத்தைப் பற்றி உலக பாங்கின் தலைவர் திரு யூஜின் ஆர். பிளாக் (Mr. Eugene R. Black), பின்வருமாறு கூறினர்: 'இக் கொள்கை கண்டிப்பான முறையில் பின்பற்றப்பட்டால், பொதுத் துறையில் வளங்களின்மேல் ஏற்கெனவே உள்ள அதிக பளுவிற்குமேல் இன்னும் பளு அதிகம். ஆகும்; இந்த முக்கியத் துறைகளின் முன்னேற்றத்தின் வீதம் தடைப்படும்.' தனியார் துறையைப்பற்றிய அரசாங்க நோக்கைப் பற்றி அவர் பின்வருமாறு கூறினர்: 'இந்தியாவின் பொருளாதார வளர்ச்சியில் இந்திய அரசாங்கந்தான் முக்கியப் பங்கு எடுக்க வேண்டுமென்பதை நான் உணர்கிறேன்; ஆனால் தனியார் துறை யின் திறமைகள் குறைவாக மதிப்பிடப்படுகின்றன எனவும், அதன் நடவடிக்கைகள் அனாவசியமான கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப் படுகின்றன எனவும் நான் கருதுகிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக மூலதனம் குறைவாயும், நிர்வகித்து நடத்தும் திறமை வளங் கள் குறைவாயும் உள்ள ஒரு நாட்டில், அரசாங்க, தனியார் துறை களின் பங்கு, நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் இரு துறைகளும் மிகச் சிறந்த முறையில் பங்கெடுக்குமாறு அமையவேண்டும்; அது இரு துறைகளும் கொள்கையளவில் எந்த அளவு பங்கு எடுக்கும் என ஆராயும் கருத்தை விலக்குதல் வேண்டும்.'[1] இந்தியா உலக பாங்கிலிருந்து கடன்கள் கோருவதால், திரு. பிளாக்கிற்கு, உலக

[1] திரு. யூஜின் பிளாக், 1956 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 5 ஆம் நாள் நிதி அமைச்சர் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களுக்கு எழுதிய கடிதம்.

பாங்கின் தலைவர் என்ற முறையில், பாங்கின் கருத்தை வெளிப்படை யாகக் கூறியதில் தவறு ஒன்றுமில்லை. ஒருவேளை அவர் வார்த்தை களைத் தந்திரமாக கையாளாதிருக்கக் கூடும்; ஆனால் பல இந்தியர் கள் அரசாங்கக் கொள்கையைக் குறைகூறும் கருத்தையேதான் அவரும் கூறினர்.

வருங்காலத்தில் நீண்ட நாட்களுக்கு மேலும் தொழில்களை எடுத்து நேரடியாக நடத்துவதை விட்டு, அரசாங்கம் ஏற்கெனவே எடுத்துக்கொண்டுள்ள பாரம் மிக்க பொறுப்புகளைத் திறமையுடன் நிர்வாகம் செய்வதில் கவனத்தைச் செலுத்தவேண்டும். போக்கு வரத்து, செய்தித் தொடர்பு, நீர்ப்பாசனம், தண்ணீர் மின்சாரத் திட்டங்கள், வீடுகட்டுதல், கல்வி, சுகாதாரப் பணிகள் இவைகளில் அரசாங்கத்திற்கு எல்லையில்லாமல் வேலைகள் இருக்கின்றன. பொதுவாக நிர்வாகத்திலும், குறிப்பாக அரசாங்கம் நடத்தும் தொழில் களிலும், நாணயமும் திறமையும் இல்லை;[1] ஆகவே, அதன் முன்னேற்றத்திற்காக நாம் உழைக்கவேண்டும்.

திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி, திரு. பிளாக்கிற்கு எழுதிய பதிலில், ' அரசாங்கம் நடத்தும் தொழில்களால் எங்களுக்கு ஏற்பட்ட குறைந்த அனுபவத்தில், அரசாங்கத் தொழில்கள் அநேக சமயங்களில் தனியார் தொழிலைவிட அதிகத் திறமை வாய்ந்தவையாக இருக் கின்றன ' எனக் குறிப்பிட்டார். பக்ரா - நங்கல் போன்ற பெரிய திட்டங்களில் பொறுப்பற்ற செலவு, திறமை குறைந்த நிர்வாகம் போன்ற குறைபாடுகளைக் காணும்பொழுது, இதை உண்மையென ஒப்புக்கொள்ள இயலவில்லை. தனியார் கையில் மிக அதிகமாகப் பொருளாதார வளங்கள் குவிக்கப்படுவதை, அரசியல் உடைமை, நிர்வாகத்தின்மூலம் சரி செய்யலாம் எனக் கூறுவதையும் ஒப்புக் கொள்ள முடியவில்லை. அதிகார வர்க்கத்தினர் கையிலும் அரசியல் வாதிகள் கையிலும் அதிகாரங்கள் குவிக்கப்படுவது, தனியார் கையில் குவிக்கப்படுவதைவிடக் குறைவாக, வெறுக்கத் தகுந்தது அன்று.

சட்டமியற்றுவதாலோ மற்ற முறைகளாலோ, தனியார் நிறுவனங் களைக் கட்டுப்படுத்துவதிலும், சரியான வழியில் திருப்பிவிடுவதிலும், தீமைகளை அகற்றுவதிலும், முக்கியத் தீர்மானங்களை அத் தொழில் களே எடுக்கும் முறையைப் பாதிக்காது, அரசாங்கம் நிறையச் செய்ய

[1] இந்த அத்தியாயத்தின் 51ஆம் பிரிவைப் பார்க்கவும்.

இடமிருக்கிறது.[1] உதாரணமாக, ஒழுங்காக அமைக்கப்பட்ட தனியார் தொழில்களில், முதலீடு விரும்பத்தக்க வழிகளில் அமைய, வெளியிடும் முதல் கட்டுப்பாடு, ஏற்றுமதி - இறக்குமதிக் கட்டுப்பாடு, வித்தியாச வரிக் கொள்கை, கடன்களுக்கான ஏற்பாடு, விலைகள் ஏற்றத்தில் திட்டம், இன்னும் மற்ற முறைகளையும் பயனுடன் பின்பற்றலாம்.

விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு, தேசியமயமாக்குதல் என்ற கொள்கை அவசியமானது என அரசாங்கம் அறிவித்துள்ளது. விவசாயத்தைச் சீரமைப்பதிலும், தொழில்மயமாக்க அவசியமான அடித்தளத்தை ஏற்படுத்துவதிலும் வெற்றிகாண, நாட்டின் கிடைக்கக் கூடிய வளங்களையெல்லாம் சேகரிக்க முழு உரிமையும் வேண்டுமென விவாதிக்கப்படுகிறது. மேலும் பெருவாரியாக உபரி வருமானம் கிடைத்துச் சேமிக்கப்படும் பெருவாரித் தொழில்கள், பாங்குகள், இன்ஷுரன்சு, மொத்த ஏற்றுமதி, இறக்குமதி, சில முக்கியப் பொருள்கள், உதாரணமாகத் தானியங்களின் மொத்த வாணிகம் முதலிய முக்கிய தொழில்கள் அரசாங்கத்தின் கையில் இருக்கவேண்டுமெனவும் கூறப்பட்டது. சமூகத்தின் முக்கியப் பொருளாதார நடவடிக்கைகள் அரசாங்கத்தின் மேற்பார்வையில் இருந்தாலன்றி, திட்டமிடப்பட்டுக் குறிப்பிட்ட காலங்களில் செயலாற்றப்படும் நீண்ட காலத் தொடர் திட்டங்களை நடத்த முடியாது.

சோஷலிச, சமத்துவம் வாய்ந்த சமூகத்தை ஏற்படுத்த, அரசாங்கத் துறையை விரைவாக விரிவடையச் செய்தல் வேண்டும். ஏனெனில் அரசாங்கத் துறையை விரிவாக்காவிட்டால், திட்டமிடப்பட்ட பெரிய முன்னேற்றமும், பொருளாதார வளங்களும் ஒரு சில தனியார் கைகளில் குவிக்கப்படும். மேலும், அதன் தியாகங்களைச் சமத்துவமாகப் பங்கிட்டுக் கொள்ளமுடியாமல் போய்விடும். சில முக்கியத் தொழில்களும், பெருவாரியாக முதலீடு தேவைப்படும் தொழில்களும் அரசாங்கத் துறையிலேயே இருக்கவேண்டும். மேற்கண்ட வேறுபாடுகளையும், தீர்மானங்களையும், நியதிகளையும் மனதில்

1 *தனியார் துறையில் இருக்கும் தீமைகளை ஒருவேளை ஓரளவு வெற்றியுடன் திருத்த முடிந்தாலும், அரசாங்கத் துறையில் இருக்கும் தீமைகளை அகற்ற அந்த அளவு பலம் வாய்ந்த சக்திகள் இல்லை.*

*‘கலோன் நகரத்தை* (City of Cologne), *ரைன் நதி* (Rhine) *சுத்தம் செய்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெரியும். ஆனால், அணங்குகளே, எந்தத் தெய்வீக சக்தி இனி ரைன் நதியைச் சுத்தம் செய்யும் எனக் கூறுங்கள்’ என ஓர் ஆங்கிலப் பாடல் கூறுகிறது.*

*இந்திய அரசாங்கத்தைப்பற்றிப் பொதுமக்கள் குறைகூறுவது சக்தி வாய்ந்ததாக இல்லை. ஏனெனில் நாம் இன்னும் குழந்தைப் பருவ ஜனநாயகத்தில் அரக்கனுக்குரிய பலத்துடன் அமைந்த ஒரு கட்சி ஆட்சியில் இருக்கிறோம்; மேலும் அரக்கனைப் போன்றே அது தன் பலத்தை உபயோகிக்கத் தூண்டப்படுகிறது.*

கொண்டு நிறைவேற்றப்படும் தேசீயமயமாக்கும் திட்டங்கள் நியாயமானவையாகவும், விரும்பத்தக்கவையாகவும் இருக்கும். ஆனால் இது எல்லாப் பொருளாதார, சமூகத் தீமைகளுக்கும் ஒரு மருந்து எனக் கருதுதல் கூடாது.[1]

45. **விவசாயத்தின் முக்கியப் பங்கு :** இரண்டாவது திட்டத்தில், தொழிலுக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்தாலும், மக்கள் தொகை உயருவதையும், வருமானம் பெருகுவதையும், கீழான நிலையில் உள்ள உணவு ஊட்டத்தையும் பார்க்கும்பொழுது, விவசாய உற்பத்தியைப் பெருக்கும் முயற்சியைத் தளரவிடக்கூடாது எனத் தோன்றுகிறது. முதற்கருவிப் பொருள்கள் உற்பத்தியில் ஈடுபட்டு வளர்ந்துகொண்டேவரும், தொழிலாளர்களுக்குக் கொடுக்கக் கூடிய உபரி உணவுப் பொருள்கள் அவசியமாகும். விலைவாசி நிலையை உயர்த்தாமல் வைக்கவும், பணவீக்கப் போக்குகளை முறியடிக்கவும், மிகுதியான விவசாய விளைச்சல் சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்தது. நம் தொழில்கள் தொடர்ந்து நடைபெறவும், நமது ஏற்றுமதி வாணிகத்தை முன்னேற்றவும் கச்சாப் பொருள்கள் வேண்டும். திட்டம் சரியான முறையில் சுமுகமாக நிறைவேற்றப்பட, உணவுப் பொருள்கள், முக்கியக் கச்சாப் பொருள்கள் இவைகளைச் சேமித்து வைக்கவேண்டும். விவசாயமும் தொழிலும், ஒன்றையொன்று சார்ந்தவை. ஒன்றுக்கொன்று முழுமையாக்கவல்லது என்ற உண்மையைத் திரும்பக் கூறவேண்டுவதில்லை. தொழிலுக்கு விவசாயம் அவசியம் என்பதைப்போல், விவசாயத்திற்குத் தொழில் அவசியம். தொழில் முன்னேற்றம் விவசாய உற்பத்திக்கான சந்தையை ஏற்படுத்துகிறது; விவசாயத்தின் முக்கியத்தேவைகளான இயந்திரங்கள், உரங்கள் முதலியவற்றை அளிக்கிறது; நிலத்திலிருந்து உபரி மக்கள் தொகையைப் பிரிக்க உதவுவதுமன்றி, மீதமிருப்போரின் பொருளாதார நிலையை உயர்த்தவும் உதவுகிறது.[2]

[1] இங்கிலாந்தில், தொழிற்கட்சி வட்டாரங்களில்கூடத் தேசீயமயமாக்கும் திட்டத்திற்கான உற்சாகம் குறைந்துவிட்டது; ஏனெனில், இத் துறையில் நடைபெற்ற பரிசோதனைகளின் விளைவுகள் இது வரையிலும், எதிர்பார்த்ததுபோல் இல்லை.

[2] சில சமயங்களில், நிலத்தின்மீதுள்ள பாசத்தினால், மக்கள் அதைவிட்டுப் பிரிவதைவிட, அங்கேயே இருந்து பசியால் வாடுவதை விரும்புவார்கள் எனக் கூறப்படுகிறது; ஆகவே தொழில் முன்னேற்றம் கணிசமான அளவில் நிலத்தின்மீது உள்ள நெருக்கடியை நீக்காது. இது சம்பந்தமாக நாம் அடிக்கடிக் கேள்விப்படுவது என்னவென்றால் விவசாயம் ஒரு வாழ்க்கைத்தொழில் மாத்திரம் அன்று; அது ஒரு வாழ்க்கை வழியுமாகும் என்பதாம். எனினும் ஒவ்வொரு தொழிலும் ஒரு வாழ்க்கை வழியே; மக்கள் ஏதாவதொரு தொழிலைப் பழகிவிட்டால் பின் அதிலிருந்து மாற விரும்பமாட்டார்கள். நிலத்தோடு ஒட்டிக்கொள்ளும் மனப்போக்கை மாற்றிவிட முடியும்; உதாரணமாக நகரங்களிலுள்ள தொழிற்சாலைகள் அவைகளுக்கு வேண்டிய தொழிலாளர்களைப் பெரும்பாலும் கிராம விவசாய மக்களிடமிருந்தே பெறுகின்றன.

1956 ஆம் ஆண்டு மே மாதம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முன் வரைவை ஆராயும்பொழுது, நாட்டு முன்னேற்றக் குழு (National Development Council), திட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள விவசாய உற்பத்திக்கான இலக்குகளை உயர்த்த வேண்டுமெனக் கூறியது. திட்டத்தின் தொழில் மயமாக்கும் நோக்கு அதிக விவசாய உற்பத்தியைத் தேவையாக்கும் எனக் கருதினர். இது நிகழாவிடில் விலைவாசி நிலை உயரும். ஆகவே ஒவ்வொரு மாநிலத்தின் விவசாயத் திட்டமும் சரி பார்க்கப்பட்டது; நல்ல விதைகள், உற்பத்தியைப் பெருக்குவது, உரங்களை உபயோகிப்பது, நீர்ப்பாசனம், மண் அரிக்கப் படாமல் பாதுகாப்பது முதலிய திட்டங்கள் புகுத்தப்பட்டு, குறைந்த காலத்தில் நிறைந்த விளைவைப் பெற ஏற்பாடுகள் செய்தனர். இதே போன்ற இணைந்த திட்டங்களை நாடு முழுவதும், சிறப்பாகத் தேசீய விஸ்தரிப்பு, சமுதாய நலத் திட்டங்கள் இருக்கும் இடங்களில் செய லாற்ற வேண்டும். சரிபார்க்கப்பட்டு அமைத்த இலக்குகளின்படி, மொத்த உற்பத்தி 28 சதவீதம்; உணவுத் தானியங்கள் அதிகரிப்பு 25 சதவீதம்; வர்த்தகப் பயிர்களின் உயர்வு 34 சதவீதம் அதிகமாக வேண்டும். இவைகளுக்கு முதலில் திட்டத்தில் குறிக்கப்பட்ட இலக்குகள் முறையே 17·4 சதவீதம் (மொத்த உற்பத்தி), 16 சதவீதம் (உணவு தானியங்கள்,) 21 சதவீதம் (வர்த்தகப் பயிர்கள்). விவசாயத் திற்கு ஏற்கெனவே ஒதுக்கப்பட்ட வளங்களைப் பரவலாக்குவதால், மேற்கொண்டு அதற்கு அதிக் வளங்கள் கொடுக்காமலே இந்த விளைவு களைப் பெறமுடியும் என அக் குழு கருதிற்று. ஆயினும் இக் கருத்து பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை; மேலும் இது அதிக நம்பிக்கை உடையதாக இருக்கிறது.[1]

46. குடும்பக் கட்டுப்பாடு: முதல் திட்ட காலத்தில், பொது மக்களின் கருத்தைக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் பக்கமாகத் திருப்பவும், அதைப்பற்றிய ஆலோசனைகள், வசதிகள் அளிக்கவும் முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. பிறப்பு - நோய் முதலியவை பற்றிய சமுதாயநிலைப் புள்ளிவிவர ஆய்வு, மருத்துவ உயிர்நூல் கல்வி முதலியன ஆரம்பிக்கப்பட்டன. மாநிலங்கள், உள்நாட்டு அதிகாரிகள், விஞ்ஞான நிறுவனங்கள் முதலியன 115 குடும்பத் திட்ட மருத்துவ மனைகளும், 19 ஆராய்ச்சித் திட்டங்களையும் துவக்க, அரசாங்கத்திட்டம் இருந்து உதவி பெற்றன. இரண்டாவது திட்ட காலத்தில் ஒரு மத்தியக் குழுவைக் கீழ்க்கண்ட காரியங்களுக்காக அமைப்பதன் மூலம் இதை மேலும் முன்னேற்றத் திட்டமிடப்பட்டது: (i) குடும்பக் கட்டுப்பாட்டு ஆலோசனைகள், பணிகள் இவைகளை விரி வாக்குதல், (ii) பயிற்சி அளிப்பு நிலையங்களை ஏற்படுத்துதல்,

[1] Second Five Year Plan, pp. 553-4.

(iii) குடும்பக் கட்டுப்பாட்டைப்பற்றிய பிரச்சினைகளை ஆராயவும், கற்கவும் விரிவான திட்டத்தை உருவாக்குதல், (iv) மக்களிடத்தில் இச் செய்தியைப் பரப்பும் முறைகளை ஆராய்தல். (v) நிதியுதவி பெறும் நிறுவனங்களையும் தனியார்களையும் மேற்பார்வை செய்தல், (vi) எல்லா வசதிகளும் நிரம்பிய மத்திய அமைப்பை நிறுவுதல், (vii) முன்னேற்றத்தை அவ்வப்போது மதிப்பீடு செய்தல்.

குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களுக்காக ரூ. 5 கோடி ஒதுக்கப்பட்டது. இரண்டாம் திட்டத்தின் காலவரையில் சுமார் 300 நகர மருத்துவ மனைகளும் (50,000 மக்கள் தொகைக்கு ஒன்று), 2,000 கிராம மருத்துவ மனைகளும் ஏற்படுத்தப்படும்.

மக்கள் தொகையைத் தடுப்பதும், அதை நிலைநிறுத்துவதும் மிக முக்கியமானவை. ஆதலால் குடும்பக் கட்டுப்பாட்டிற்கு அதிக முக்கியத்துவமும் நிதியும் கொடுக்கலாம். இப் பிரச்சினையைக் குறித்து ஒரே மாதிரியான நோக்கை வளர்க்கவேண்டியது அவசியம். எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியான திட்டங்களை நிறைவேற்றுதல் வேண்டும். சமீபத்தில் குடும்பக் கட்டுப்பாட்டிற்காக மத்திய அரசாங்கம் கொடுத்த நிதியுதவியைப் பம்பாய் அரசாங்கம் நிராகரித்துவிட்டது. இவ்வாறு தனி மாநிலங்கள், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களுக்கு அரைகுறை ஆர்வத்தையோ, அல்லது எதிர்ப்பு மனப்பான்மையையோ காட்டினால், இவ்வளவு செலவு செய்தும் இத் திட்டத்தில் கணிசமாக எவ்வித முன்னேற்றத்தையும் காட்டமுடியாது.

**47. ஒதுக்கீடுகளும் முதன்மை ஒதுக்கீடுகளும்:** ஒரு பிராணியின் கருவில் சிலவகைச் செல்கள் (cells) தாங்களாகவே தசை, திசுக்கள், எலும்பு, தோல், இருதயம், நுரையீரல்கள் முதலிய உறுப்புக்களாகச் சரியான வீதத்தில் மாற ஏற்பாடு உள்ளது. ஆனால் பொருளாதாரத் திட்டமிடுதலில், கிடைக்கக்கூடிய சக்திகளையும் வளங்களையும் அவ்வாறு தானாகவே பல முன்னேற்ற இனங்களிடையே பங்கிட்டுக்கொள்ள ஏற்பாடு இல்லை. மூலதனத்தையும், தொழிலாளர்களையும் பல காரியங்களுக்குப் பங்கிடுவது மனிதனின் தீர்ப்பைப் பொறுத்தது ஆகும். மனிதனின் தீர்ப்பு தவறக் கூடியது. மிகவும் நல்ல முறையில் எவ்வாறு பங்கிடுவது என்பதைப்பற்றிக் கருத்து வேற்றுமைகள் இருக்கத்தான் செய்யும். எவ்வளவு கவனத்துடன் வரையப்பட்ட திட்டமாயிருந்தாலும், அதைப்பற்றிக் குறை கூறுவோர் இருப்பர். மேலும் மிக நல்ல முறையில் பங்கீடு செய்வதைப் பிரதேச நலன்களும் குறிப்பிட்ட வகுப்பாரின் நலன்களும் பாதிக்கும். இது நாட்டு நலன் என்னும் கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது சில நியாயமான குறைகளுக்கு வழிகோலும். முதல் ஐந்தாண்டுத்

திட்டத்திற்கும், அதன் முதலீடு, முதன்மை ஒதுக்கீடு முதலியவற்றின் அமைப்பிற்கும் எதிராகக் கூறப்பட்ட முக்கியக் குறை, அது முக்கியமாக விவசாயத்தைப்பற்றியதாய் இருப்பதாயும், நீர்ப்பாசனம், மின்சாரத் திட்டங்களுக்கு முக்கியத்துவம் அளிப்பதாயும் இருக்கிறது என்பதாகும். மேலும் அது ஒரு தொடர்பில்லாத பொதுச் செலவு என்று கூறியதோடு நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தனியார், அரசாங்கத் துறைகளின் எல்லா முயற்சிகளும் திட்டமிடப்பட்டு ஒழுங்காக இணைக்கப்பட்ட ஒரு திட்டமன்று என்றும் கூறினர்.

முதல் திட்டத்தின் இலக்குகள் மிகச் சாதாரணமானவை; போரும் பிரிவினையும் நாட்டின் பொருளாதாரத்தை மிகவும் சிதைத்து விட்டன. கொரியா-போர் காரணமாகப் பணவீக்கப் பிரச்சினையை உடனடியாகச் சமாளிக்க வேண்டியது அவசியமானதாகிவிட்டது. மேலும் உணவுப் பொருள்களிலும், மூலப் பொருள்களிலும் அதிகப் பற்றுக் குறை இருந்தது. இச் சூழ்நிலையில் விவசாயத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தது புரிந்துகொள்ளக் கூடியதாகும். முதல் திட்டத்திற்கு முன் ஆரம்பிக்கப்பட்ட தனிப்பட்ட திட்டங்களை முடிக்க வேண்டும்; அந்த அளவிற்குத் திட்டம் முன்கூட்டியே தீர்மானிக்கப் பட்டுவிட்டது. முதல் திட்டத்தைவிட அதிக ஒழுங்கும் பேரவாவும் கொண்ட இரண்டாம் திட்டத்தில், இரும்பு, எஃகு, நிலக்கரி, இயந்திர சாதனங்கள், மின்சார சாதனங்கள், தொழிலியல் இரசாயனப் பொருள்கள் முதலியவைகளை உற்பத்தி செய்யும் அடிப்படைத் தொழில்களுக்கு உயர்ந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இதற்குக் காரணம், மூலதன ஆக்கத்திற்கு நல்ல அடித்தளம் அமைக்கவும், நாட்டிற்கு முக்கியமாக வேண்டிய இயந்திரத் தொகுதிகளுக்கும் சாதனங்களுக்கும் நமது நாடு மற்ற நாடுகளை எதிர்நோக்காது இருப்பதற்குமாகும். முன் பிரிவுகளின் விவாதங்கள் நமக்குக் காட்டியது போல், பல குறைபாடுகள் அவற்றிற்கு எதிராகக் கூறப்படுகின்றன. போக்குவரத்து விரிவிற்குத் தகுந்த அளவில் ஏற்பாடுகள் செய்யாதது அடிக்கடிக் கூறப்படும் இன்னொரு குறையாகும். இதில்தான் அதன் வெற்றி பெரும்பாலும் அடங்கியிருக்கின்றது.

1956 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் 10 ஆம் நாள், வணிகக் கூட்டுக் கழகங்களின் (Associated Chambers of Commerce) கூட்டத்தில் பேசுகையில் நிதி அமைச்சர் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி, அரசாங்கம் போக்குவரத்துப் பிரச்சினையைப்பற்றிக் கவனிக்க ஆரம்பித்துள்ளது எனக் குறிப்பிட்டார். இச் சந்தர்ப்பத்தில், உலக பாங்கியிலிருந்து எதிர்பார்க்கும் உதவியைப்பற்றியும் குறிப்பிடும்பொழுது, இருப்புப்பாதைகளுக்கும், கப்பல் தொழிலுக்கும் அதிக நிதி ஒதுக்கப்படலாம் என்பதைக் குறிப்பாக உணர்த்தினர். கல்கத்தாத் துறை

முகத்தில் ஒரு ரேவு துறையை (Jetty) அமைப்பதைப்பற்றியும் அவர் குறிப்பிட்டார்.

சென்ற நூற்றுண்டின் மத்தியிலிருந்து எல்லா வகையான இருப்புப்பாதைப் போக்குவரத்துகள்மீதும் அதிகமாகக் கவனம் செலுத்தப்படுகின்றது. ஆயினும் அவைகளின் முன்னேற்றம், போக்குவரத்து வளர்ந்துள்ள அளவிற்கு இல்லை; வெகு சீக்கிரத்தில் இதில் சிறப்பு முயற்சிகள் எடுக்காவிடில், இருப்புப்பாதை வழியிலும், உருள் கலங்களிலும் (rolling stock) அபாயகரமான குறைவு ஏற்படும் என்ற பயம் இருந்தது. இப்பொழுதிருக்கும் போக்குவரத்து வசதிகளை விரிவாக்க முயற்சிகள் எடுக்காவிடில் 1960 - 61ஆம் ஆண்டு இருப்புப்பாதைகள் திறனில் 36 மிலியன் டன் குறைவாக இருக்கும். அதாவது இரண்டாந் திட்டத்தின் இறுதியில் இலக்குகள் நிறைவேற்றப்படும் என்ற அடிப்படையில் இது கணக்கிடப்பட்டது. இருப்புப்பாதைப் போக்குவரத்து நெருக்கடி, ஏற்கெனவே நம் துறைமுகங்களிலிருக்கும் அதிக நெருக்கடியை மேலும் அதிகமாக்குகிறது. துறைமுகங்களிலிருக்கும் நெருக்கடி நமது ஏற்றுமதி வாணிகத்தைப் பாதிப்பதுமட்டுமல்லாமல், அயல்நாட்டு வாணிகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் கால தாமதம் ஏற்படவும் செய்கிறது. இந்தப் போக்குவரத்து நெருக்கடி நமது ஏற்றுமதி வாணிகத்தைப் பழுதுபடுத்துவதைத் தடுக்க, எல்லா வகைப் போக்குவரத்துகளையும் மிக விரைவில் உச்சநிலைக்கு விரிவாக்கவேண்டும். கடற்கரையோரக் கப்பல்களை விரிவாக்குவதன் மூலம், இப்பொழுது இருக்கும் மொத்தத் திறன் குறைபாட்டில் 10 சதவீதத்தைச் சரி செய்யலாம்.[1] வரிகளைக் குறைப்பதன் மூலம் மோட்டார்ப் போக்குவரத்தை ஊக்குவித்தால் கணிசமான அளவிற்கு முன்னேற்றம் உண்டாகும். சாலைகள் மீதும் பாலங்கள்மீதும் அதிக டன் பொருள்களை எடுத்துச் செல்ல அனுமதிக்கலாம். எதிர்காலத்தில் நீண்ட காலத்திற்கு இத் தொழிலைத் தேசீய மயமாக்குவதில்லை எனக் கூறுவதன்மூலம் தனியார் துறை மோட்டார்ப் போக்குவரத்தில் முதலீடு செய்யத் தூண்டப்படலாம்.[2]

**48. திட்டத்தில் நெகிழ்ச்சியின் அவசியம்:** நாம் பார்த்தபடி திட்டத்திற்கு வேண்டிய மொத்தப் பணத்திற்கும், இப்பொழுது

[1] அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் (All India Manufacturer's Association) பிரதிநிதிகள், இருப்புப்பாதை-கடல் விசாரணைக் குழுவுடன் (Rail-Sea Co-ordination Enquiry Committee) 1956 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் மாநாடு நடத்தியபொழுது, இரண்டாந் திட்டத்தில் குறித்துள்ள 4,00,000 மொத்தக் கரையோரக் கப்பல் டன்னுக்குப் பதில், 5,00,000 மொத்த டன் வேண்டும் எனக் கூறினர்.

[2] 'போக்குவரத்து நெருக்கடி' ('The Transport Bottleneck') திரு. ஏ. டி. ஷராப் அவர்களால் (A. D. Shroff) எழுதப்பட்ட கட்டுரை. Times of India, 24 and 25 September, 1956.

கிடைக்கக்கூடிய பணத்தின் மதிப்பீட்டிற்கும் இடையில், ஒரு பெரிய இடைவெளி நிரப்பப்படவேண்டும். ஏற்கெனவே கடும் பணவீக்கம் ஏற்படலாம் என்ற ஆபத்து இருக்கிறது; திட்டத்தில் தற்காலிக மாகக் குறித்திருக்கும் பற்றுக்குறை நிதியாக்கத் தொகை குறைக்கப்பட வேண்டும். உலக பாங்கிடமிருந்தும் மற்ற வெளியிடங்களிலிருந்தும் எவ்வளவு பணம் கிடைக்கும் என்பது இன்னும் நிச்சயமாகத் தெரிய வில்லை. நாட்டிற்குள் கடன் வாங்குவதன் மூலம் இக் குறையை ஓரளவுதான் நிவர்த்தி செய்யமுடியும். மேலும் பொதுமக்களிட மிருந்து அரசாங்கம் கடன் வாங்கும் அளவிற்குத் தனியார் துறைக்குப் பணக்குறைவு ஏற்படும்; தனியார் துறைக்கு முன்னேற்றத் திட்டத்தில் மிக முக்கியப் பங்கு அளித்திருப்பதால் இது முக்கியமான தாகும். மீதமிருப்பதை, வரிவிதிப்பாலும் சிக்கனத்தாலும் நிரப்புவது, திட்டத்தின் அளவைப் பார்க்கும்பொழுது மிகச் சிறியதாகவே இருக்கும். வாழ்க்கையின் இலட்சியம் வாழ்வதாக இருக்கும்பொழுது, இப்பொழுது இருக்கும் சந்ததி, எதிர்காலச் சந்ததிகளுக்காகத் தியாகங்கள் செய்யவேண்டும் என்பதை அதிகமாக எதிர்பார்க்கக் கூடாது. ஓரளவிற்கு, ஒவ்வொரு தலைமுறையும், அது வாழும் காலத்துடன் முடிகின்றது என்ற கருத்தை அனுமதிக்கவேண்டும். இக் கருத்து ஏழ்மையில் வாடும் இந்தியாவைப் போன்ற நாடுகளில் சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்தது. நாம் நிலைநிறுத்த முயன்று வரும் சிறந்த ஜனநாயகத்தில், எதிர்காலச் செழிப்பிற்காகவே திட்டங் கள் தீட்டப்படுகின்றன என்பதை மக்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அவர்கள் இப்பொழுதே திட்டத்தின் அநுகூலங்களை அனுபவிக்க வேண்டும்; வருங்காலச் சந்ததிகளின் நலனுக்காகமட்டும் வேலை செய் வதை அவர்கள் விரும்பவில்லை.

திட்டத்தின் வரவு செலவுகளில் இருக்கும் இடைவெளி, விலைகள் நிலையானவை என்ற எடுகோளை அடிப்படையாகக் கொண்டிருக் கிறது. எனினும் திட்டத்தின் பெரிய முதலீட்டுச் செலவால் விலை நிலையிலும், வாழ்க்கைச் செலவிலும் கணிசமான உயர்வு இருக்கும் என எதிர்பார்க்கலாம். இது வளங்களின்மீது மேலும் அதிகப் பளு வைச் சுமத்தும். முதலில் இருந்த முதலீட்டுத் தொகையான ரூ. 4,800 கோடி ஏற்கெனவே ரூ. 5,300 கோடியாக உயர்த்தப்பட்டு இருக்கிறது.[1]

[1] திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்கள் (Sri. T. T. Krishnamachari) 1956ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30ஆம் நாள் திட்டத்தின் மொத்தச் செலவில் 10 சதவீத அதிகரிப்பதைத் தாம் எதிர்பார்ப்பதாகக் கூறினர். அதற்கு உதாரண மாக ரூர்க்கேலா, துர்காபூர், பிலாய் (Rourkela, Durgapur, Bhilai) முதலிய எஃகு ஆலைத் திட்டங்களில் செலவு உயருவதைக் குறிப்பிட்டார்.

முதல் திட்டத்தின்பொழுது கிடைத்த இரண்டு அடுத்தடுத்த பருவக்காற்று மழைகள், அத் திட்டம் வெற்றியடைய, பெரும் அளவில் உதவி புரிந்தன. இதுபோன்றே இரண்டாந் திட்டத்திலும் நடக்கும் என எதிர்பார்க்கமுடியாது. நாம் பருவ மழைகள் தவறு வதையும், அதன் விளைவாக விவசாய உற்பத்தி குறைவதையும் எதிர் நோக்கி அதற்குத் தயாராக இருக்கவேண்டும். ஆகவே, அக் குறைவு கள் ஏற்படும்பொழுது, உணவுப் பொருள்களையும் கச்சாப் பொருள் களையும் போதுமான அளவு இறக்குமதி செய்வதன்மூலம் தவிர்க்கத் தயாராக இருக்கவேண்டும். உணவுப் பொருள்களைச் சேகரித்தல் பங்கீடு செய்தல் போன்ற வெறுக்கத்தக்க முறைகளைக் கையாள ஆரம்பித்தால், திட்டத்திற்கு மக்களின் ஆதரவு குறைந்துவிடும்.

இந்தியாவின் ஸ்டெர்லிங் இருப்புகள் அபாயகரமான அளவுக்குக் குறைந்துவிட்டன, நாம் ஏற்கெனவே இன்றியமையாத இறக்குமதி களுக்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணியைத் தேடும் பிரச்சினை யில் இருக்கிறோம். திட்டம் தனது பாதையில் இருந்து திரிந்துவிட லாம் என்ற பயமும், மாநிலங்களின் மறு அமைப்புக் காரணமாக ஏற்படும் அமைதிக் குலைவும், நிலையாமையும், திட்டம் வேகமாக முன்னேறுவதைத் தடுத்துவிடுமோ என்ற பயமும் இன்னமும் இருக் கின்றன. கடைசியாக, திட்டத்தின் வெற்றி, கணக்கிட முடியாத அளவிற்கு அயல்நாடுகளிடையே நிலவும் நிலையைப் பொறுத்தது. உலகப்போர் போன்ற ஒரு பெரிய விபத்து ஏற்படின், திட்டம் இருக்கவே முடியாது. 1956 ஆம் ஆண்டு ஏற்பட்ட சூயஸ் கால்வாய்த் தகராறு போன்ற சிறு சம்பவங்களும் திட்டத்தை மிகப் பாதிக்கும்.

இவ்வாறு திட்டத்திற்கு ஏற்படக்கூடிய துன்பங்களையும் நெருக் கடிகளையும் கூறும்பொழுது, திட்டம் நெகிழ்ச்சி உள்ளதாகத்தான் இருக்கவேண்டும் என்பது தெரிகிறது. மேலும் நமக்குக் கிடைத் துள்ள அநுபவத்தைக் கொண்டு திட்டம் தொடர்ந்து சரிபார்க்கப் பட்டு, மாறும் சூழ்நிலைகளுக்குத் தகுந்தாற்போல் மாற்றி அமைக்கப் படுதல் வேண்டும்.

49. **நிர்வாகச் சீர்திருத்தப் பிரச்சினைகள்:** ஃபோர்டு நிறுவனத் தின் பொது நிர்வாக ஆலோசகர், திரு. பால் எச். ஆப்பிள்பீ (Mr. Paul H. Appleby, Ford Foundation Consultant in Public administration), உலகத்தில் மிகவும் முன்னேற்றமடைந்த பன் னிரண்டு அரசாங்கங்களில் இந்திய அரசாங்கத்தையும் ஒன்றாகக் குறிப்பிடுகிறார்.[1] இந்தப் புகழ்ச்சி உரை மிக அர்த்தம் பொதிந்ததாக

[1] Paul H. Appleby, Public Administration in India, p. 8. 61 ஆம் பிரிவையும் காண்க.

இருக்கலாம் அல்லது அர்த்தமற்றதாக இருக்கலாம். நமது நிர்வாகம், யுனைடெட் கிங்டெம் நிர்வாகத்துடன் ஒப்பிடப்பட வேண்டுமானால், நாணயத்திலும், செயலாற்றும் திறனிலும் நமது நிர்வாகம் அதிகமாக முன்னேற வேண்டும் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். இந் நிலையில் நாம் திருப்திப்படுவதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. நமது பொது நிர்வாகத்திலுள்ள முக்கியக் குறைகளைப் போக்க முயலும்பொழுது இது எவ்வளவுக்கு முக்கியமோ, அவ்வளவுக்குக் கடினமானது என்பதையும் நினைவிலிருத்தவேண்டும்; இரண்டாம் திட்டத்தின்கீழ், மத்திய, மாநில அரசாங்கங்களின்மேல் பெரும் பொறுப்புகள் சுமத்தியிருக்கும் இந் நேரத்தில் இது மிக முக்கியத்துவமும் கடினமும் வாய்ந்தது ஆகும். திட்டம் எவ்வளவுதான் முன்னெச்சரிக்கையுடன் வரையப்பட்டிருந்தாலும், அதற்குள்ளே இருக்கும் திறன் அதை நிறைவேறும்படிச் செய்யமுடியாது; ஆனால், ஒரு பொருத்தமான நிர்வாகத்தின் மூலந்தான் திட்டத்தை நிறைவேற்ற முடியும். திட்டம் முன்னேறும்பொழுது நிர்வாகம், திட்டத்தின் நோக்கங்கள் ஆகியவைகளில் சிக்கல்கள் தோன்றும். பயிற்சி பெற்றோர் குறைவாயிருக்கும் குறைக்கு அடுத்தபடியாக, இப்பொழுது எல்லாத் திக்குகளிலும் முன்னேற்றத்தைத் தடுக்கும் குறை, அமைப்பு முறைத் திறன் குறைவு ஆகும். இதை நாம் சமாளிக்கவேண்டும். மேலும், பன்முகப்படுத்தப்பட்டுத் தானே வேலைவாய்ப்பை ஏற்படுத்திக்கொள்ளும் திட்டமும் கூட்டுறவு நடவடிக்கைகளும், திட்டமிடப்பட்ட முன்னேற்றத்தின் வழிகள் என ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் இக் காலத்தில் இக் குறைகள் இன்னும் அதிகமாக உணரப்படுகின்றன. இக் கொள்கையின்கீழ், அமைப்புக்களைத் திறமையுடன் பங்கீடு செய்தல், உற்பத்தியைத் திரட்டுதல், நிதிசேமித்தல், தொழில் முறை வழிகாட்டுதல், மேற்பார்வை போன்ற வேலைகளைச் செய்ய வேண்டும். ஆகவே திறனுள்ள நிர்வாகத்தை ஏற்படுத்துவதே முதலில் செய்யவேண்டிய காரியமாகும்.

இப்பொழுதிருக்கும் நிர்வாக அமைப்பு பிரிட்டிஷார், ஒரு குடியேற்ற நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்ய ஏற்படுத்தியதாகும். அதன் நோக்கம் ஒரு போலீஸ் படையின் நோக்கமே. அதன் குறுகிய நோக்கம், சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்டுவதோடு தனது நிலையைத் தொடர்ந்து வலுப்படுத்திக்கொள்வதும் ஆகும் அதன் முறைகள் தலையிடாமைக் கொள்கையை (laissez faire) அடிப்படையாகக் கொண்டவை. எதிர்ப்பும் அதிருப்தியும் ஏற்படும் என்பதற்காக மக்களின் சமூகப் பழக்க வழக்கங்களில் தலையிடவில்லை.[1]

[1] W. R. Natu, Public Administration and Economic Development p. 1.

அதன் விளைவாக நம் சிவில் அலுவலர்கள், பழைய பிரிட்டிஷ் முறையைப் பின்பற்றுவதால், புதுக் கருத்துக்களைப் பிரயோகிக்கப் பயந்து, எப்பொழுதும் பாதுகாப்பையே நாடுகின்றனர்; ஆகவே நிர்வாகம் நெகிழ்ச்சியற்றதாயும், கற்பனைத் திறன் இல்லாததாயும் இருக்கிறது.[1] நிர்வாகத்தின் நோக்கில் ஓர் அடிப்படை மாற்றம் நிகழவேண்டிய கட்டம் இப்பொழுது வந்திருக்கிறது. அதன் முறைகளிலும் மாற்றம் வேண்டும். திட்டக் குழு இக் காரியத்தைப்பற்றி, இரண்டாம் திட்டத்தை நிறைவேற்றுவது சம்பந்தமாக யோசித்துள்ளது. அவர்களின் கருத்தைச் சுருக்கமாகக் கீழே தருகிறோம்.[2]

50. **நிர்வாகப் பணிகளை இனவாரியாகப் பிரித்தல்:** திட்டக் குழு நிர்வாகப் பணிகளைக் கீழ்க்கண்ட இனங்களாகப் பிரித்திருக்கிறது: (i) நிர்வாகத்தில் நாணயத்தை நிலை நிறுத்துதல், (ii) நிர்வாக, தொழில் முறைப் பிரிவுகளை ஏற்படுத்துதலும், பயன்தரும் பணிகளுக்கு ஊக்கமும் வாய்ப்புகளும் அளித்தல், (iii) செய்யவேண்டிய பணிகளுக்கு ஒப்ப அலுவலர்களின் எண்ணிக்கையை நிர்ணயித்தல், எல்லாத் துறைகளிலும் பெருவாரிப் பயிற்சித் திட்டங்களை அமைத்தல், கிடைக்கக்கூடிய பயிற்சி வளங்களைச் சேமித்தல் (அரசாங்கத் தனியார் நிறுவனங்கள் தொழில் இன்னும் மற்ற நிறுவனங்கள் உள்பட), தொழிற் பயிற்சி, பணிகளில் உள்ளோருக்குப் பயிற்சி, (iv) வேகமான, சிக்கனமான, திறமையான வேலைமுறைகளைக் கண்டுபிடித்தல், தொடர்ச்சியான மேற்பார்வைக்கு ஏற்பாடு செய்தல், அவ்வப்போது முறைகளையும் விளைவுகளையும் பாரபட்சமின்றி மதிப்பீடு செய்தல். (v) தொழில் முறை, நிதி உதவிகளை விவசாயச் சிறு உற்பத்தியாளருக்கு அளித்தல். தேசீய விஸ்தரிப்பு, சமுதாய நலத் திட்டங்கள், கிராமச் சிறுபான்மைத் தொழில்கள்; (vi) அரசாங்கத் துறையிலுள்ள, தொழில் வர்த்தக நிறுவனங்கள், போக்குவரத்துப் பணிகள், ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்கள் முதலியவற்றின் திறமையான நிர்வாக அமைப்பை ஏற்படுத்துதல். (vii) விவசாயத்திலும், சமூகப் பணிகளிலும் செலவிடப்படும் பணத்திற்கு நல்ல விளைவுகளை உச்ச அளவில் பெற, பொது மக்கள் பங்கெடுப்பையும் அவ் வட்டார மக்கள் உழைப்பையும் பெறுதல்; (viii) நிர்வாக, தொழில்முறைப் பயிற்சியுற்றோரை அளிப்பதன் மூலம் பொருளாதாரத்தின் கூட்டுறவுப் பகுதியைப் பலப்படுத்தல்; கூட்டுறவு, நிதிச் சந்தைகள் இன்னும் மற்ற நிறுவனங்களை நிறுவுதல்.

[1] மிக எச்சரிக்கையான இந்த நோக்கிற்கு இன்னொரு காரணம், நிர்வாகத்தில் அமைச்சர்கள் அதிகமாகத் தலையிடுவதுதான்; அலுவலர்கள் கையில் மிகக் குறைந்த அதிகாரமே கொடுக்கப்படுகிறது. தன்னம்பிக்கையும், சொந்தத் திறனும் இவ்வாறு தடை செய்யப்படுகின்றன; ஏனெனில் அவைகள் உடனே கண்டனத்தையும், குறை கண்டுபிடிப்பையும் ஏற்படுத்துகின்றன.

[2] Second Five Year Plan, pp. 126-76.

**51. நாணயமும் திறமையும்:** சமீப ஆண்டுகளில், மத்திய, மாநில அரசாங்கங்களில், லஞ்ச ஊழலைப் போக்கச் சில உறுதியான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. பல மாநிலங்களில், லஞ்ச ஒழிப்புத் துறைகள் ஏற்பட்டு, பல்வேறு அளவுகளில் வெற்றியுடன் செயலாற்றுகின்றன.[1] 1937ஆம் ஆண்டு, வெட்ஜ்வுட் குழு (Wedgwood Committee), நாணயமில்லாததைப்பற்றிப் பேசும்பொழுது 'அது இருப்புப்பாதைப் பணியிலும் மற்ற இந்திய அரசாங்கப் பணிகளிலும் வழக்கமாகக் காணப்படும் ஒரு நோய்' எனக் கூறியுள்ளது.[2] இருப்புப்பாதை இலஞ்ச விசாரணைக்குழு (1953-55) தனது விசாரணையால்தான் சோகமுற்று இருப்பதாக ஒப்புக்கொண்டுள்ளது[3]; ஆம், அது சோகமுறத்தானே வேண்டும்! எனினும், அக் குழு இத் தீமையை அகற்ற அநேக முக்கியமான பரிந்துரைகளை வழங்கியது; இருப்புப்பாதை அமைச்சரகமும் இலஞ்ச ஒழிப்பிற்காக ஓர் அமைப்பை ஏற்படுத்தத் தீர்மானித்தது; இவ் வமைப்பு முக்கியமான வழக்குகளையும், பதிவுபெற்ற அலுவலர்களைப் (Gazetted Officers) பற்றிய வழக்குகளையும் கவனிக்கும். தனி இருப்புப்பாதை அமைப்புகளும் இதைப் போன்ற வழிகளைப் பின்பற்றத் திட்டமிடுகின்றன. பொதுக் கருத்தை நல்ல முறையில் வளர்க்க, இலஞ்சம் வாங்குவோரின் முறைகளை அம்பலமாக்கவேண்டும் என்றும், குடிகளின் கடமைகள், உரிமைகள் இவைகளைப்பற்றியும், லஞ்ச ஊழலில் சிக்கிய பொதுப்பணியாளர் பெற்ற தண்டனையையும் விளம்பரம் செய்யவேண்டும் என்றும் அக் குழு கருதியது.

லஞ்ச ஊழல் என்னும் தீமை மிக அதிகமாய்ப் பரவியிருக்கிறது. இருப்புப்பாதைகளில் மட்டுமன்றி, ஒவ்வொரு துறையிலும் இலஞ்ச வருமானம் ஓர் இயற்கை நியதியாக ஆகிவிட்டது. இருப்புப்பாதைக் குழு கண்டுபிடித்த குறையும், அது ஆலோசனைகளாகக் கூறிய சிகிச்சை முறைகளும், நுணுக்கமான சில மாற்றங்களுடன், அரசாங்கத்தின் ஒவ்வொரு பிரிவிற்கும் பொருத்தமாயிருக்கின்றன.[4] முதல்

[1] *இருப்புப்பாதை இலஞ்ச விசாரணைக் குழு* (The Railway Curruption Enquiry Committee), *(1953-5) இதைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது 'இந்த நிறுவனம் எடுத்துக்கொள்ளும் வழக்குகள் எங்கு நோக்கினும் மிகக் கொஞ்சமாக இருக்கின்றன. அதன் நடவடிக்கைகள் பெரும்பாலும் கீழ் ஊழியர்களைப்பற்றியனவாகவே இருக்கின்றன. அவைகள் மிகச் சிறிய வழக்குகளாகும்' எனக் கூறியிருக்கிறது.* (Report, para 182.)

[2] Quoted in the Railway Corruption Enquiry Committee Report, para 1.

[3] Report para 265.

[4] *திரு. ஆப்பிள்பி* (Mr. Appleby) *அவர்களின் கருத்துப்படி 'நாணயம் உச்ச நிலையில் நிலவும் பன்னிரண்டு அரசாங்கங்களுக்குள் இந்தியாவும் ஒன்று.' அந்தப் பன்னிரண்டு நாடுகளின் பெயர்களும், அவைகளுள் இந்தியா எத்தனையாவது நாடாக வருகிறது என்பதும் தெரியுமுன் நாம் எதையும் நன்கு அறிய முடியாது. இது உண்மையான ஒரு புகழ்ச்சியானால், நமது நிர்வாகத்தில் எங்கும் நிலவி வரும் ஊழலை அறிந்த நாம், இதை ஒப்புக்கொள்ள முடியாது.*

ஐந்தாண்டுத் திட்டம் நிர்வாகத்தில் விழிப்புக்கொண்ட மேற்பார்வை அவசியம் என வற்புறுத்தியது. நிர்வாகத்தில் திறமையும், துறைத் தனங்களின் தலைவர்கள், தங்கள் துறைகள் எவ்வாறு செயலாற்றுகின்றன என்பதை மிகக் கவனமாகக் கண்காணித்தலும் லஞ்சத்தை ஒழிக்கத் தேவை. இலஞ்ச ஊழலுக்கான, நாமறிந்த சந்தர்ப்பங்கள் அனைத்தையும் ஒழிக்கவேண்டும்.

அரசாங்கத்தில் காரியங்களைச் செய்யக் காலதாமதம் செய்வது இலஞ்ச ஊழலுக்கு ஒரு நல்ல வாய்ப்பு. அரசாங்கத்தின் 'சிவப்பு நாடாவைப்' (red tape) பற்றி மக்கள் கூறும் குறைகள் நிர்வாகத்தின் உண்மைகளை அறியாமல் கூறுவதாகும். சில சமயங்களில் அளவுக்கு மீறிய வழிமுறைகளும், தீர்மானங்கள் செய்வதில் காலதாமதமும் இருந்தாலும், வழிமுறைகளைப்பற்றிய சட்டங்கள் நீண்டகால அனுபவத்தின் விளைவுகள் என்பதை மறக்கலாகாது.[1] நிர்வாகத் துறையில் அனுபவமற்றவர்கள் இவ் வழிமுறைகளை நீக்கிவிடலாம் என நினைப்பார்கள். ஆனால் அவ்வித அனுபவமற்ற முயற்சி குழப்பத்தையே விளைவிக்கும். இதைத்தவிர, காரியங்களை நிறைவேற்றுவதில் ஏற்படும் காலதாமதத்தில் பெருமளவிற்கு எவ்வித உண்மைக் காரணமும் கிடையாது. எனவே, அக் காலதாமதத்தை உடனடியாகக் குறைந்த அளவிற்குக் கொண்டுவரவேண்டும். அளவுக்கு மீறிய கட்டுப்பாட்டுடன் கூடிய வழிமுறைகளைத் தவிர்க்கவேண்டும். பொதுப் பணியாளர்களிடம் துரிதமாகக் காரியங்களைச் செய்யும் நோக்கத்தையும், திறமையுடன் ஒன்றாகச் சேர்ந்து வேலைசெய்யும் மனப்பான்மையையும் வளர்க்கவேண்டும்.

இலஞ்ச ஊழல், மறைமுகமாக நடக்கும் ஒரு காரியமாதலால், அதை ஒழிப்பது கடினமாகும். பொதுமக்கள் தங்கள் சொந்த சௌகரியத்தைக் கருதாது அதை எதிர்க்குமாறு அறிவுறுத்தப்படல் வேண்டும்; அவர்கள் அரசாங்கத்திற்கும் இலஞ்சத்தை ஒழிக்க முழு ஒத்துழைப்பை அளிக்கவேண்டும். இத் தீமையை எதிர்ப்பதில் தனி ஆட்களைவிட நிறுவனங்கள் உறுதியுடன் செயலாற்ற முடியும். இச் சந்தர்ப்பத்தில், இருப்புப்பாதைப் பணிகள் சம்பந்தமாக, இலஞ்ச விசாரணைக் குழு, இருப்புப்பாதை ஊழியர்கள் சங்கம் (Railway Employees' Union) தன் அங்கத்தினர்களிடையே நிலவும் ஊழலைப் பற்றிக் கவனிக்கவில்லை எனக் கூறுகிறது. வாணிகச் சங்கங்களும்

[1] 'சிவப்பு நாடா...சாதனைகளைப் புரிய ஓர் ஒழுங்கான வழியாகும்...அரசாங்கம்...மிகப் பெரிய தனியார் நிறுவனங்களில் இருப்பதைவிட, பெரிய, சிக்கலான காரியங்களில் தன்னிச்சைப் போக்கையும், பொறுப்பற்ற தன்மையையும் தடுக்கும் முறையில் செயலாற்றவேண்டும். மேலும் சரியான பொறுப்புடனும், சரிபார்க்கும் பொழுது குற்றங்கள் இல்லாதவாறும் செயலாற்ற வேண்டும்.

(Chambers of Commerce), வர்த்தகக் குழுக்களும் (Trade Associations), வர்த்தகர்கள் இலஞ்ச ஊழலை ஆதரிப்பதைத் தடுக்க எவ்வித முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. இருப்புப்பாதைப் பணியாளர்களின் துன்புறுத்தலினின்று தம் அங்கத்தினர்களைக் காக்கவும் முயலவில்லை.

மத்திய உள்நாட்டுத் துறை அமைச்சரகம் சமீபத்தில் நிர்வாக விழிப்புப் பிரிவு (administration vigilance vivision) ஒன்றை ஏற்படுத்தியுள்ளது. அது பொதுவாக வழிகாட்ட, தனி அமைச்சரகங்களிலும், துறைகளிலும் இருக்கும் விழிப்பு அலுவலர்கள், ஒவ்வொரு நிறுவனத்தையும் வழிமுறையையும் ஆராய்ந்து ஊழல்களுக்கான சந்தர்ப்பங்களை நீக்கவோ அல்லது குறைக்கவோ முயல்வார்கள். பொதுமக்கள் சம்பந்தப்பட்ட காரியங்களில், சுலபமாகத் தெரிந்து கொள்ளக்கூடிய வழிமுறைச் சட்டங்களை அவர்கள் விளம்பரமாக்க வேண்டும்.

சுதந்தரம் அடைந்ததற்குப்பின், பொதுப்பணிகள் மிக விரிவடைந்திருக்கின்றன. அரசாங்கம் யானைக்கால் வியாதி போன்றதொரு வீக்கத்தால் அவதியுறுகிறதோ எனக் கூட நினைக்கலாம். ஆயினும், இப்பொழுதைய பொதுநல நாட்டின் நடவடிக்கைகள் ஏராளமாக அதிகரித்துவிட்டதால், அநேகப் பணிகளில் பணியாளர்கள் குறைவாக இருக்கின்றனர் என்பது உண்மையே. இப்பொழுதிருக்கும் பணியாட்களின் திறமை உயரவேண்டும் எனக் கூறுவதாலேயே ஒவ்வொரு துறையிலும் வேலை திறமையாக நடைபெற அதிகப்பணியாட்கள் வேண்டுமென்று கூறுவது பொய்யாகாது. இச் சமயத்தில் இந்திய ஆட்சிப்பணி (Indian Administrative Service) மத்தியஅரசாங்கத்திலும், மாநிலங்களிலும் அதிகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் படியாகச் செய்திருப்பதை நாம் கவனிக்கவேண்டும். இந்திய ஆட்சிப் பணியின் எண்ணிக்கையை 600-க்கு மேலாக அதிகரிக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இது ஓரளவிற்குப் பதவி உயர்வு மூலமும், ஓரளவு புதிதாகச் சேர்ப்பதனாலும் நிறைவேறும்.

இரண்டாம் திட்டத்தின்கீழ் முன்னேற்றம் வளர, பல திட்டங்களின் செலவு அதிகமாகும். நிதிகள் தவருன முறைகளில் கையாளப்படுவதைத் தவிர்க்கவும், செலவின் முழு மதிப்பைப் பெறவும், ஒவ்வொரு நிறுவனத்திலும் பொருத்தமான செலவுக் கட்டுப்பாட்டுத் திட்டமும் (Cost Control System), உள் திறமைக் கணக்குத் தணிக்கையும் (Internal Efficiency Audit) அவசியம். நாட்டு முன்னேற்றக் குழு (National Development Council) சமீபத்தில், திட்ட நடவடிக்கைக் குழு (Committee on Plan Projects) ஒன்றை ஏற்படுத்தியது

அதன் வேலை, முக்கிய திட்ட அலுவல்களை விசாரணை செய்வதும், தணிக்கையிடுவதும், சிக்கன வழிமுறைகளை வகுப்பதும், திறமைத் தணிக்கையைத் தொடர்ச்சியாகச் செய்யத் தகுந்ததோர் நிர்வாக அமைப்பை வளர்த்தலும் ஆகும். மத்திய அரசாங்கத்திலும், மாநிலங்களிலும் அமைப்பு, வழிமுறைகள் அலகுகளை நிறுவ நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. மேலும், தொழில்துறை வழிகளைக் காட்ட ஒரு நிர்வாக அமைப்பு ஏற்பட்டால் அது விரும்பத்தக்கது; அனுபவக் குவிப்பு (Pool of experience) ஒன்றையும் ஏற்படுத்தி, வேண்டும்போதெல்லாம் அரசாங்கத் துறைகள் அதை உபயோகித்துக்கொள்ள வழி செய்யலாம்.

பொதுப் பணியாளர்கள் திறமையில் உயர்ந்த நிலையை எய்த, முழுப் பொறுப்பையும் தாங்களே ஏற்றுக்கொள்ளும் வாய்ப்பை அவர்களுக்கு அளிக்கவேண்டும். இப்பொழுதிருக்கும் நிர்வாக முறையில், அலுவலர்கள் தங்கள் தன்னம்பிக்கையையும், சுய முயற்சியையும் காட்ட வாய்ப்புகளோ, வாய்ப்புகளுக்கு வழி செய்யும் நோக்கமோ இல்லை. (169 ஆம் பக்கத்தின் 1 வது அடிக்குறிப்பைப் பார்க்கவும்). திறமையும், தன்னம்பிக்கையும் உடையோரை ஊக்குவிக்காதது இக்குறைக்கு ஒரு காரணமாகும். இது சம்பந்தமாகப் புது ஆள் சேர்ப்பு மூலங்களை உபயோகிக்கவும், நிர்வாகத்தினுள் பல்வேறு வகை அனுபவங்களையும், பின்னணிச் சூழலையும் உள்ளவர்களைக் கொண்டுவரவும் முயலுதல் வேண்டும்.

தற்பொழுது உச்சப்படிகளில் இருக்கும் அலுவலர்கள் தான் காரியங்களை ஆரம்பிக்கவும், தீர்மானங்களை மேற்கொள்ளவும் வேண்டும் என்ற போக்கு உள்ளது. கீழ்ப்படியிலுள்ள பணியாளர்கள் செய்யக் கூடிய வேலைகளை மூத்த பொதுப் பணியாளர்கள் செய்வதிலேயே, அவர்களுடைய பெரும்பாலான நேரம் போய்விடுகிறது. அதேபோல், அமைச்சரகங்களும், செயலாண்மைத்துறையும் (Secretariat), தங்களுக்குக் கீழ் உள்ள துறைகளின்மீது செலுத்தும் கட்டுப்பாடு மிக விரிவானது. இக் கட்டுப்பாடு தளர்த்தப்பட்டுப் பல்வேறு துறைகளுக்கும் அதிகச் செயல் சுதந்தரம் கொடுத்தல் வேண்டும். இரண்டாம் திட்டத்தின் நோக்கங்களையும், குறிக்கோளையும் பார்க்கும்பொழுது, சிறு வருவாய் உள்ளவர்களுக்கும், வசதி குறைந்தவர்களுக்கும் தொழிலியல், நிதி, மற்ற உதவிகளையும் கொடுக்கப் பொருத்தமான நிர்வாக முறைகளையும், நிறுவனங்களையும் ஏற்படுத்த முக்கியமான தேவை இருக்கிறது. இக் காரியத்திற்குச் சிறு உற்பத்தியாளர்களைக் கூட்டுறவுச் சங்கங்கள் போன்று அமைக்கப்பட்ட அலகுகளில் ஒன்றாகச் சேர்த்தல் வேண்டும்.

**52. பொதுத் தொழிற்றுணிவு** (Enterprises): இரண்டாந் திட்டத்தில் அரசாங்கத் துறையின் விரிவைப் பார்க்குங்கால், பொதுத் தொழிற்றுணிவுகளின் நிர்வாகத் தேவைகள் சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருக்கின்றன. உற்பத்தி, போக்குவரத்து, செய்தித் தொடர்பு, இரும்பும் எஃகும், வாணிகமும் தொழிலும் முதலிய அமைச்சரகங்களின்கீழ் நிறுவப்படும் தொழிற்றுணிவுகளில் பணியாளர்களை அமர்த்துவதற்காக, சமீபத்தில் ஒரு தொழில் நிர்வாகத் துறையை (Industrial Management Service) ஏற்படுத்துவதென முடிவாயிற்று. இத் துறைக்கு, பொதுப் பணிகளுக்குள் இருந்தும், வெளியிலிருந்தும் ஆட்கள் நியமிக்கப்படுவார்கள். இத் துறை மாநிலங்களின் தொழில் துறைகளுக்கு வேண்டிய உயர்நிலை அலுவலர்களையும் அளிக்கமுடியும். தொழில் நிர்வாகத்தில் (Business Management) பயிற்சி வசதிகளை விரிவாக்கவும் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. உதாரணமாக, அண்மையில் பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி முதலிய நகரங்களில் இளைய அலுவலர்களுக்குத் தொழில் நிர்வாகப் பயிற்சி வகுப்புகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. தொழிற்றுணிவு சம்பந்தப்பட்டவரை, அநேகமாக அரசாங்கமே முதலீடு செய்யும் கூட்டுப் பங்குக் கம்பெனி (Joint Stock Company) அமைப்பு அதிகமாக மேற்கொள்ளப்படுகின்றது. நாட்டுச் சாதனங்கள் உற்பத்தித் தொழிற்சாலை (National Instruments Factory), இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை (Integral Coach Factory), சித்தரஞ்சன் எஞ்சின் தொழிற்சாலை (Chittaranjan Locomotive Factory) முதலியன துறை நிர்வாகத்தின் மாதிரிகளாகும். சிந்திரி உர உற்பத்தித் தொழிற்சாலை, ஹிந்துஸ்தான் தந்திக் கம்பி வடம் செய்யும் தொழிற்சாலை (Hindustan Cables) முதலியன கம்பெனி நிர்வாக அமைப்பில் இருக்கின்றன. தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டமும், (Damodar Valley Project) விமானப் பணிகளும் சட்டப்படி அமைந்த கூட்டுக் குழுக்கள் (Statutory Corporations) ஆகும்.

**53. மாநிலங்களில் திட்டமிடும் அமைப்பு**: திட்டத்தின் வேலைகள், அளவிலும் சிக்கல்களிலும் அதிகமாகிக்கொண்டே செல்வதால், மாநிலங்களில் அது சம்பந்தப்பட்ட அமைப்புக்கள் உறுதியாகவேண்டும்; சில மாநிலங்கள் இதை ஏற்கெனவே செய்துள்ளன. புள்ளியியல், பொருளாதாரப் பணியாளர்களை அதிகமாக்குவதை முக்கியமாகக் கவனிக்கவேண்டும். அவைகள் திட்டத் துறை வேலைகளுடன் நெருங்கி இணைக்கப்படவேண்டும்.

மாவட்டங்களின் நிலையிலும், மாநில நிலையிலும் அதிகாரிகள் அல்லாத தலைவர்கள், திட்ட வரைவிலும், செயலாற்றுவதிலும்

தொடர்பு கொண்டுள்ளனர். மாநில சட்டசபை அங்கத்தினர்களும், பாராளுமன்ற அங்கத்தினர்களும், மாவட்ட முன்னேற்றக் குழுவில் (District Development Committee) பங்கெடுக்கின்றனர். அவர்களில் சிலர் மாநிலத் திட்டக் கழகங்களிலும் (State Planning Boards) பணியாற்றுகின்றனர்.

54. **நாட்டின் திட்டங்களையும் மாநிலங்களின் திட்டங்களையும் ஆண்டுதோறும் சரிபார்த்தல்:** ஐந்தாண்டுத் திட்டங்களைச் செயலாற்றுவதில் நெகிழ்ச்சி இருப்பது அவசியமானதும், பயனுள்ளதுமாகும். அடிப்படைப் பொருளாதார நிலைகளில் மாற்றம் ஏற்படலாம் என்பதைப் பார்க்கும்பொழுதும், உலக நிலைகளைப் பார்க்கும்பொழுதும், உதாரணமாகச் சாதனங்களை இறக்குமதி செய்யும் நிலைகளிலும், அயல்நாட்டுச் செலாவணி மாற்று நிலைகளிலும் ஏற்படும் மாறுதல்களைக் காணும்பொழுது நெகிழ்ச்சியின் தேவையை உணரலாம். ஒவ்வொரு வரவு செலவுத் திட்டத்திற்குப் பின்னும், விளக்கங்களுடன் கூடிய அடுத்த ஆண்டிற்கான திட்டங்களை வெளியிடுவதென்ற தீர்மானம் இரண்டாம் திட்டத்தைச் செயலாற்றுவதில் நெகிழ்ச்சியற்ற தன்மையைப் போக்கவும், அப்பொழுது நிலவும் நிலைகளுக்கேற்ப மாற்றங்கள் செய்யவுமே ஏற்பட்டது.

55. **பொதுமக்களின் பங்கும், ஒத்துழைப்பும்:** ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட திட்டத்தில், வெற்றி நிச்சயமாகக் கிடைக்கவேண்டுமானால், திட்டத்தில், மக்கள் பங்கெடுப்பதும் ஒத்துழைப்பதும் பெருமளவில் இருக்கவேண்டும். வளர்ச்சி குறைந்த பொருளாதாரத்தில் நிறைய மனித சக்தி உபயோகமின்றி இருப்பதால், அவர்கள் தாங்களாகவே கொடுக்கும் உழைப்பும், முயற்சிகளும் நன்கு பயன்படுத்தப்படவேண்டும். திட்ட இலக்குகளைப் பூர்த்தி செய்வதில் அவர்களின் பங்கு கணிசமான அளவு இருக்கவேண்டும். இந் நோக்கத்தை மனத்தில் கொண்டு, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், வட்டார முன்னேற்ற அலுவல்களுக்காக ரூ. 15 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இத் திட்டம் கிராம முன்னேற்றத்திற்கு உற்சாகத்தை ஊட்டுவதற்காக ஏற்படுத்தப்பட்டது. மேலும் கிராம மக்கள் தங்கள் உழைப்பின் மூலமே மருந்துச் சாலைகள் கட்டவும், சாலைகள், கால்வாயின் கீழ்ச் செல்லும் மதகுகள் முதலியவற்றைக் கட்டவும், கிணறுகள் வெட்டவும், சிறு நீர்ப்பாசனத் திட்டங்களை மேற்கொள்ளவும் இத் திட்டம் ஏற்படுத்தப்பட்டது. முதல் திட்டத்தைப் போலவே, இரண்டாம் திட்டத்திலும், இளைஞர்கள் நாட்டின் முன்னேற்றத் திட்டத்தில் பங்கெடுக்கச் சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. இளைஞர் முகாம்களாலும் (Youth Camps), தேசீய மாணவர் படை (National Cadet Corps), மாணவர் துணைப்படை (Auxiliary Cadet Corps), பாரதச் சாரணர்கள்

வழிகாட்டிகள் (Bharat Scouts and Guides) முதலிய நிறுவனங்களாலும், தொழிற் பணிகளாலும் பயனுள்ள வேலைகள் செய்யப்படுகின்றன பல பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் திட்ட மன்றங்கள் (Planning Forums) அமைத்திருக்கின்றனர். அவைகள் ஆசிரியர்களையும் மாணவர்களையும் முன்னேற்றத்திற்கான காரியங்களைப்பற்றிச் சிந்திக்கச் செய்து, புதுக் கருத்துகளைத் தகுந்த அதிகாரிகள் முன் சமர்ப்பிக்கவும் வழிசெய்கின்றன. அரசியல் சார்பற்ற, அதிகார பூர்வமில்லாத பாரத சேவக் சமாஜம் (Bharat Sevak Samaj), முன்னேற்ற வேலைகளுக்கு ஒரு தேசீய மையமாக விளங்க முயல்கிறது. கல்வி, பொதுச் சுகாதாரம், செய்திகளைப் பரப்புதல், கலைத் தொழில்கள் முதலிய திட்டங்களுக்கு ஓய்வு பெற்ற, அனுபவமிக்க பல பொதுப் பணியாளர்களை அது தன்பால் ஈர்த்திருக்கிறது. காந்தீய நோக்கங்களைக் கொண்டு பணிபுரியும் சில நிறுவனங்களையும், உதாரணமாகச் சர்வ சேவா சங்கம் (Sarva Seva Sangh), கஸ்தூரிபாய் காந்தி தேசீய ஞாபகார்த்த டிரஸ்ட் (Kasturibai Gandhi National Memorial Trust), காந்தி சமாரக் நிதி (Gandhi Samarak Nidhi) முதலியவைகளையும் குறிப்பிடவேண்டும். சர்வ சேவா சங்கம் இப்பொழுது ஈடுபட்டிருக்கும் ஒரு முக்கிய அலுவல் பூதான இயக்கமாகும். கஸ்தூரிபாய் டிரஸ்ட், முக்கியமாகப் பெண்கள், குழந்தைகள் நலனுக்கான வேலைகளில் ஈடுபட்டிருக்கிறது. காந்தி சமாரக் நிதி நாட்டின் பல பாகங்களிலும் 300 க்கும் மேலான கிராமச் சீரமைப்பு மையங்களை ஏற்படுத்தி இருக்கிறது.

தல அதிகாரிகளை, மாநில அரசாங்கங்களின் பிரதிநிதிகளாக உபயோகப்படுத்துவதன்மூலம் பொதுமக்களைப் பங்கு கொள்ளச் செய்வதோடு அவர்களுடைய ஒத்துழைப்பையும் பெறலாம். தல அதிகாரிகள், தன்னிச்சைப் பணிச் சங்கங்கள் (Voluntary Organisations), சமூகப் பணியாளர்கள், மருத்துவர், வழக்கறிஞர், ஆசிரியர்கள், தொழில் துறை வல்லுநர் முதலானோரின் சங்கங்கள் ஆகியவைகளின் ஒத்துழைப்பைப் பெறலாம். இவ்வாறு பணி செய்வதன் மூலம் அளிக்கும் பங்கைத் தவிர, சிறு சேமிப்பு இயக்கம், நாட்டின் திட்டத்திற்குத் தன்னாலான உதவியைச் செய்ய ஒவ்வொரு குடிமகனுக்கும் வாய்ப்பை அளிக்கிறது.

56. **இரண்டாம் திட்டத்திற்கு விளம்பரம்** : மாநிலங்கள் ரூ. 6 கோடியும், மத்திய அரசாங்கம் ரூ. 7 கோடியும், இரண்டாந் திட்டத்தின் விளம்பரத்திற்காக ஒதுக்கியிருக்கின்றன. செய்தி, ஒலி பரப்பு அமைச்சின் திட்டங்களையும் மாநில அரசாங்கங்களின் திட்டங்களையும், சிறந்த முறையில் விளம்பரம் செய்ய மிக எச்சரிக்கையுடன் திட்டம் வரையப்பட்டு இணைக்கப்பட்டிருக்கின்றது. திரைப்படக்

காட்சிகளைக் காட்டக்கூடிய வாகனங்கள், கிராமங்களில் சுற்றிவரும் பொருட்காட்சிகள், கிராமங்களில் ரேடியோக்கள், கல்வி சம்பந்தமான திரைக் காட்சிகள், தொலை அச்சுச் சுற்றுகள் (teleprinter circuits), கருத்து நிறைந்த வெளியீடுகள் முதலியன மக்களுக்குத் திட்டத்தைப் பற்றி எடுத்துக்கூறும் வழிகளாக உள்ளன.

57. **மாவட்ட முன்னேற்ற நிர்வாகம்:** பொது நல நாடு என்பதைத் தேசீய நோக்கமாகக் கொண்டபின், நிர்வாகத்தில் முன்னேற்ற அலுவல்களுக்கு நிறைந்த முக்கியத்துவம் வந்துவிட்டது. அதனால், கீழ்க்கண்ட காரணங்களுக்காக மாவட்ட நிர்வாகத்தை மாற்றியமைப்பது அவசியம்: (i) கிராம நிலையில், கிராம மக்களிடமிருந்தே அதிகாரத்தைப் பெறும், முன்னேற்றச் செயலாண்மையை (agency) அமைக்கவேண்டும். (ii) மாவட்டத்திலுள்ள பல முன்னேற்றத் துறைகளை இணைத்து, ஒரு பொது விஸ்தரிப்பு நிறுவனத்தை ஏற்படுத்த வேண்டும். (iii) முன்னேற்றக் காரியங்களைப் பொறுத்தவரை, நாட்டுத் தன்னாட்சி நிறுவனங்களை, மாநில அரசாங்கச் செயலாண்மைகளுடன் இணைக்க வேண்டும். (iv) வட்டாரங்களுக்குள் இணைப்பும், மாவட்ட முன்னேற்றத் திட்டங்களின்மேல் மேற்பார்வையும் வேண்டும். (v) பொது நிர்வாக அமைப்பில் உறுதிப்பாடும் முன்னேற்றமும் வேண்டும்.

58. **கிராமத் திட்டமும், கிராமப் பஞ்சாயத்துகளும்:** கிராம முன்னேற்றம், கிராமத்திலுள்ள எல்லா மக்களையும், மிக மெலிந்த நிலையில் உள்ளோரைக் கூட, உதாரணமாகக் குத்தகை விவசாயிகள், கைவினைஞர்கள், நிலமற்ற தொழிலாளிகள் முதலியோர் உள்பட எல்லோரையும் பொதுத் திட்டத்திற்குக் கொண்டுவரக் கூடிய ஒரு நிறுவனம் இருப்பதைப் பொறுத்திருக்கிறது. இக் காரியத்தில், கிராமப் பஞ்சாயத்துகள், கூட்டுறவுகளுடன் சேர்ந்து ஒரு முக்கியப் பங்கு எடுக்க முடியும் எனத் திட்டக் குழு கருதுகிறது; கிராமப் பஞ்சாயத்துகள், கிராமப்புறங்களில் நல்ல இணைப்புடன் கூடிய ஒரு சமுதாய அமைப்பை ஏற்படுத்தவும், ஒரு புதுவகையான தலைமையை வளர்க்கவுங் கூடும். முன்னேற்றத்தைப் பொறுத்தவரை, கிராமப் பஞ்சாயத்துகளின் வேலைகள் கீழ்வருவன: (i) கிராமத்தில் உற்பத்தித் திட்டங்களை வரைதல், (ii) திட்டங்களை நிறைவேற்ற, தேவையான அளிப்புகளுக்கும், நிதிக்கும் வரவு செலவுத் திட்டத்தைக் கூட்டுறவுகளுடன் சேர்ந்து தயாரித்தல், (iii) அரசாங்க உதவி, கிராமங்களுக்கு அதிகமாகக் கிடைக்கும் வாய்க்கால்களாகப் பணியாற்றுதல், (iv) பொது நிலங்களில், உதாரணமாகத் தரிசு நிலங்கள், காடுகள், குளங்கள் முதலியவற்றில் முன்னேற்றம் செய்தல்; மண் அரிப்பைத் தடுக்க நடவடிக்கைகள் எடுத்தல். (v) கிராமப்

பொதுக் கட்டடங்கள், பொதுக் கிணறுகள், குளங்கள், சாலைகள் முதலியவற்றைக் கட்டுவது அல்லது அமைப்பது, பழுது பார்ப்பது, நல்ல நிலையில் வைத்திருப்பது முதலியன, (vi) எல்லா நடவடிக்கை களிலும் ஒருவருக்கொருவர் உதவும் மனப்பான்மையையும், கூட்டு முயற்சியையும் ஏற்படுத்துதல், (vii) கூட்டுறவுச் சங்கங்களை வளர்த்தல், (viii) சமூகப் பணிக்குத் தானுக வேலை செய்வோரைத் திரட்டுதல், (ix) சிறு சேமிப்பை வளர்த்தல், (x) கால்நடைகளை முன்னேற்றமடையச் செய்தல். தேசீய விஸ்தரிப்பு இயக்கம் வளர, வளர, கிராமப் பஞ்சாயத்துகளின் வேலையும், முன்னேற்றத்தொகுதி களின் திட்டங்களுடன் நெருங்கி இணையவேண்டும்.

59. **மாவட்டத் திட்டங்கள்:** ஒரு மாவட்டத் திட்டம், மாவட்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் திட்டங்களைக் கொண்டிருக் கிறது. அதில் முக்கியமாகக் காணப்படுபவை: (i) சமுதாய நலத் திட்டங்களும், தேசீய விஸ்தரிப்புத் திட்டங்களும், (ii) சமூக நல விஸ் தரிப்புத் திட்டங்கள், (iii) விவசாய உற்பத்தியும், அதைச் சார்ந்த நடவடிக்கைகளும், (iv) கூட்டுறவுகளின் முன்னேற்றம், (v) கிராமப் பஞ்சாயத்துகள், (vi) கிராமச் சிறுபான்மைத் தொழில்கள், (vii) நீர்ப் பாசனம், மின்சார வசதிகள் முதலியவற்றிற்காக மாநிலத் திட்டங்கள் மூலம் வளங்களை நன்கு உபயோகப்படுத்தச் செயல் திட்டங்கள், (viii) தொழிற் கூட்டுறவுகள் மூலமும், சிரமதானம் (shramadan) மூலமும் கட்டும் வேலையுள்ள திட்டங்களுக்கு உதவி புரிதல், (ix) பின் தங்கிய வகுப்பினரின் நலனுக்காகத் திட்டங்கள், (x) கிராம், நகர்ப் புறங்களுக்குச் சமூகப் பணித் திட்டங்கள், (xi) தானுகப் பயன்தரும் சமூகப் பணியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களை உபயோகப்படுத்து தலும், அவைகளுக்கு உதவுதலும், (xii) நிலச் சீர்திருத்தம், (xiii) முன்னேற்றத் திட்டங்களைப்பற்றிச் செய்திகளைப் பரப்புதல்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்போது ஏற்படுத்தப்பட்ட மாவட்ட முன்னேற்ற அமைப்பு அவ்வளவு பயனுள்ளதாக இல்லை. மற்ற காரியங்களுக்கிடையே, முன்னேற்ற வேலைகளுக்கு மாவட்டக் கழகம், நாட்டாண்மைக் கழகம் முதலியவற்றின் ஒத்துழைப்பைக் கணிசமான அளவில் பெற முடியவில்லை. மேலும் பல்வேறு துறை களில், நாட்டுத் தன்னுட்சிக் குழுக்களை இணைக்கும் ஏற்பாடுகள் திருப்திகரமாய் இல்லை. மாநில அரசாங்கங்கள் உடனடியாக மறு அமைப்புகள் செய்து, இப்பொழுது இருக்கும் நிறுவனங்களுக்குப் பதிலாக, முன்னேற்றத் தொகுதிகளுக்கோ அல்லது தாலுக்காக் களுக்கோ மாவட்ட முன்னேற்ற மன்றங்களையும், முன்னேற்றக் குழுக்களையும் அமைக்க வேண்டும். மாவட்ட முன்னேற்ற மன்றத் தில் பின்வரும் பிரதிநிதிகள் இருக்கலாம்: (i) மாநில சட்ட

சபையிலும், பாராளுமன்றத்திலுமுள்ள மாவட்டப் பிரதிநிதிகள், (ii) நகராட்சி மன்றங்கள், கிராம ஆட்சிக் கழகங்கள், இவற்றின் பிரதிநிதிகள், (iii) கூட்டுறவு இயக்கத்தின் பிரதிநிதிகள், (iv) கிராமப் பஞ்சாயத்தின் பிரதிநிதிகள், (v) முக்கிய சமூகப் பணிச் செயலாண்மைகளிலிருந்து சேர்த்துக் கொள்ளப்பட்டவர்கள். மேலும் மாவட்ட ஆட்சித் தலைவர் (Collector), உட்கோட்ட, (Sub-divisional), மாவட்ட அதிகாரிகள். (பல முன்னேற்றத் துறைகளின் பொறுப்பில் இருப்பவர்கள்)

மாவட்ட முன்னேற்ற மன்றத்தின் அலுவல்களாவன: (i) மாநிலத்தின் ஐந்தாண்டுத் திட்டத்தின் வரைக்குட்பட்டு, ஒவ்வொரு வருடத்தின் முன்னேற்றத் திட்டத்தையும் வரையும்பொழுது ஆலோசனை கூறுதல், (ii) முன்னேற்றத்தைச் சரி பார்த்தல், (iii) முன்னேற்றத் திட்டம் துரிதமாக நிறைவேற ஆலோசனைகள் அளித்தல், (iv) பொதுமக்களின் பங்கெடுப்பையும் ஒத்துழைப்பையும் வளர்த்தல் (ஆசிரியர்கள், மாணவர்கள் உள்பட), (v) கூட்டுறவுகள், பஞ்சாயத்துகள் இவற்றின் முன்னேற்றத்திற்கு உதவுதல், (vi) சிறு சேமிப்பு இயக்கத்தை வளர்த்தல், (vii) பஞ்சாயத்துகள் மேல் பொதுவாக மேற்பார்வை செய்தல், (viii) விழாக் காட்சிகள், பொருட்காட்சிகள், கருத்தரங்கு முதலியவைகள் மூலமாக மக்கள் அறிவு பெற வாய்ப்பு அளித்தல், (ix) பஞ்சாயத்து அங்கத்தினர்களுக்குக் கூட்டுறவுப் பயிற்சி அளித்தல்.

இதுபோன்ற அலுவல்களை முன்னேற்றக் குழுக்களுக்கும் அளிக்கவேண்டும்; அக் குழுக்களின் அங்கத்தினர்கள், முன்னேற்றத் துறைகளிலிருக்கும் அதிகாரிகள் ஆவர்; மேலும் முக்கிய சமூகப் பணிச் செயலாண்மைகளிலிருந்து சேர்த்துக்கொள்ளப்பட்ட அங்கத்தினர்களும், கிராமப் பஞ்சாயத்துகளின் பிரதிநிதிகளும், நகர்ப்புற, கிராமப்புறக் கழகங்களின் பிரதிநிதிகளும், கூட்டுறவு இயக்கத்தின் பிரதிநிதிகளும் அந் நிலப்பகுதியிலிருந்து மாநில சட்டசபையிலும் பாராளுமன்றத்திலும் இருக்கும் அங்கத்தினர்களும் அதில் இருப்பர்.

60. **பணியாளர் தேவைகளும், பயிற்சித் திட்டங்களும்:** முன்னேற்றம் வேண்டிய அளவில் விரைந்து செல்ல, முன்னேற்றத்தின் ஒவ்வொரு நிலையிலும் தேவைப்படும் பொருத்தமுள்ள பணியாளர்கள் இருக்கவேண்டுவது அவசியம். கீழ்வரும் விளக்கம் முதல் திட்ட காலத்தில் எவ்வகைப் பணியாளர்கள் குறைவாக இருந்தனர் என்பதைக் காட்டுகிறது:

**பொறியியல் பணியாளர்கள்:** இரண்டாம் திட்டத்தில், பொறியாளர், மேற்பார்வையாளர் முதலியோரை உற்பத்தி செய்யவேண்டி

தொழில்முறைக் கல்வி வசதிகளைப் பெருக்க ரூ. 50 கோடி செலவு செய்வதென முடிவு செய்யப்பட்டது. அதன் விளைவாக, பொறியியலில் பயிற்சி அளிக்கும் நிறுவனங்கள் 128-லிருந்து 155-க்கு அதிகரிக்கும் எனவும், வருடந்தோறும் வெளிவரும் பொறியியல் பட்டதாரிகளின் எண்ணிக்கை 1955 ஆம் ஆண்டு 3,600-லிருந்து, 1960ஆம் ஆண்டு 4,500 க்கு அதிகமாகும் எனவும், 'டிப்ளமோ' (diploma) உடையோரின் எண்ணிக்கை 4,900-லிருந்து 6,500 க்கு அதிகரிக்கும் எனவும் எதிர்பார்க்கப்பட்டது. ஆயினும் இது போதாது; இன்னும் ஏறக்குறைய 2,300 பொறியியல் பட்டதாரிகளும், 6,000 பட்டம் பெருத பயிற்சி உள்ளவர்களும் தேவை.[1]

**கைவினைஞர்கள் :** கைவினைஞர்களுக்குப் பயிற்சி அளிப்பது திட்டத்தின் முக்கியக் கருத்துக்களில் ஒன்ருகும். இத்தகைய பயிற்சி அளிக்கும் நிறுவனங்கள், தொழில் அமைச்சால் நாடெங்கும் பராமரிக்கப்பட்டு வருகின்றன. பயிற்சி, வேலைப்பணி அமைப்புக் குழு (Training and Employment Service Organisation Committee), இப்பயிற்சியை மேலும் உபயோகமானதாக்கக் கீழ்க்கண்ட பரிந்துரைகளை வழங்கி இருக்கிறது: (i) தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதைத் தொழில்களே ஆரம்பிக்க வேண்டும்; ஆனுல் அரசாங்கம் போதிய அளவு அடிப்படைப் பயிற்சி வசதிகளை அளித்துக் கொண்டிருக்க வேண்டும். (ii) மத்திய அரசாங்கத்தின் கைகளிலிருந்து பயிற்சி மையங்களை மாநிலங்களுக்கு மாற்றவேண்டும். அப்பொழுதுதான் அவைகள் இரண்டிற்கும் இடையே பொருத்தம் ஏற்படும். (iii) தனியார் தொழில்கள் புது வேலையாட்களுக்குப் பயிற்சி அளிப்பதைச் சட்ட பூர்வமாகக் கட்டாயப்படுத்தவேண்டும். (iv) இப்பிரச்சினை சம்பந்தப்பட்ட எல்லாப் புள்ளி விவரங்களையும் மத்திய அரசாங்கம் சேகரிக்கவேண்டும்.

**கால்நடைத்துறைப் பணியாளர்கள் :** கால்நடைத்துறைப் பட்டதாரிகள் சுமார் 6,000 பேர் தேவைப்படுகின்றனர். இத்தேவையைப் பூர்த்தி செய்ய, இரு நேரக் கல்வி புகட்டவும் (double shifts), கல்வி நிறுவனங்களில் மாணவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கவும்,

[1] *60 புதிய டிப்ளமாக் கல்லூரிகளையும், 18 புதிய பட்டக் கல்லூரிகளையும் துவக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 1957ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், அகில இந்தியத் தொழில் முறைக் கல்வி மன்றம் (All India Council for Technical Education), 88 புதிய தொழில் முறை நிறுவனங்களை (5 பொறியியல் கல்லூரிகள், 22 பாலிடெக்னிக்குகள் 61 இளைய தொழில் முறைப் பள்ளிகள்) துவக்க அனுமதி கொடுத்திருக்கிறது; ஏற்கெனவே இருக்கும் 19 பொறியியல் கல்லூரிகளையும், 49 பாலிடெக்னிக்குகளையும் விரிவாக்கவும் அனுமதி கொடுத்திருக்கிறது. இந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால், 1960—61-ல், ஒவ்வோர் ஆண்டும் 7,500 பொறியியல் பட்டதாரிகளும், 15,000 டிப்ளமா வைத்திருப்போரும் வெளிவருவார்கள்.*

அவசரத்தை முன்னிட்டுக் குறுகிய காலப் பாடதிட்டங்களுடன் 4 புதுக் கல்லூரிகளையும், 10 பள்ளிகளையும் நிறுவும் முயற்சிகள் செய்கின்றனர்.

**காடுகள் :** டேரா டூனிலும் (Dehra Dun), கோயம்புத்தூரிலும் (Coimbatore), காட்டுக் கல்லூரிகளின் விரிவு முற்றுப்பெற்றுவிட்டது; கீழ்ப் பணியாளர்களின் பயிற்சிப் பள்ளிகளை ஆரம்பிப்பதும் நிறைவேறிவிட்டது.

**மண் அரிப்பைத் தடுத்தல் :** மத்திய மண் அரிப்புத் தடுப்புக் கழகம் ஏற்படுத்தி இருக்கும் பல நிலையங்களிலும், தாமோதர்ப் பள்ளத் தாக்குக் கூட்டுச் சங்கத்தால் ஹசாரிபாக்கில் (Hazaribagh) நிறுவப்பட்டுள்ள நிலையத்திலும் மண் அரிப்பைத் தடுக்கும் முறைகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது.

**கூட்டுறவு :** இப்பொழுது, பல நிலைகளில் சுமார் 25,000 கூட்டுறவாளர்கள் தேவைப்படுகின்றனர். நடுநிலைகளில் கூட்டுறவாளர்களின் பற்றாக்குறையை மிகக் கவனமாக நீக்கவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் அங்கத்தினர்களுக்குக் கூட்டுறவுக் கொள்கைகளிலும், முறைகளிலும் பயிற்சி அளிக்க, சுற்றிவரும் பயிற்சி நிலையங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன.

**விவசாயமும் அதைச் சார்ந்த பணியாளர்களும் :** பொறியியலைத் தவிர, மற்ற துறைகளிலும் பயிற்சி வசதிகளை அதிகரிக்கக் கவனம் செலுத்தப்படுகிறது. இரண்டாவது திட்டகாலத்தில் விவசாயப் பட்டதாரிகளின் தேவை சுமார் 6,500 ஆக இருந்தது. அதாவது இப்பொழுது இருக்கும் பயிற்சி வசதிகளின் அடிப்படையில் கிடைக்கக் கூடிய எண்ணிக்கையைவிட 1,000 பேர்கள் அதிகமாகத் தேவைப் பட்டனர். இத் தேவையைப் பூர்த்தி செய்ய இப்பொழுதிருக்கும் கல்லூரிகளில் மாணவர்கள் எண்ணிக்கையை அதிகரிக்கவும், புதுக் கல்லூரிகளை நிறுவவும் முயற்சிகள் செய்யப்படுகின்றன. அடிப்படை விவசாய, விஸ்தரிப்புப் பயிற்சி அளிக்கும் நிறுவனங்கள் அதிகமாக்கப்படுகின்றன. இதன் மூலம் தேசீய விஸ்தரிப்பு, சமுதாய நல முன்னேற்றத் திட்டங்கள் முதலியவற்றில் 38,000 கிராம ஊழியர் தேவையைப் பூர்த்தி செய்யலாம். இன்னும் 21 தொகுதி ஊழியர்கள் (Group level Workers) பயிற்சி நிலையங்களை, பயிற்சி விஸ்தரிப்பு மையங்களில் ஏற்படுத்தி, இப்பொழுது தேவைப்படும் 11,400 தொகுதி ஊழியர்களைத் தயார் செய்யத் தீர்மானம் செய்திருக்கின்றனர்.

**கிராம, சிறுபான்மைத் தொழில்கள் :** கிராம, சிறுபான்மைத் தொழில்களில், அகில இந்தியக் கழகமும், மாநில அரசாங்கங்களும் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் அநேக திட்டங்களைத் தயாரித்து வைத்திருக்கின்றன. முன்னேற்றமடைந்த முறைகளில், நெசவாளருக்குப் பயிற்சி அளிக்க, பயிற்சி நிலையங்கள் திறக்கப்பட இருக்கின்றன. கீழ்வரும் திட்டங்கள் ஆரம்பிக்கப்பட இருக்கின்றன : (i) உள்நாட்டு வண்ணச் சாயங்களில் ஆராய்ச்சி மையங்களை ஏற்படுத்துதல், (ii) அகில இந்தியக் காதி, கிராமத் தொழில்கள் கழகத்தின்கீழ் உற்பத்தியை அமைக்க 30,000 பேர்களுக்குப் பயிற்சி அளிக்கப் பயிற்சி மையங்களை நிறுவுதல், (iii) பல்வேறு கிராமத் தொழில்களில் தீவிரப் பயிற்சி அளிக்க நான்கு மத்திய நிறுவனங்களையும், இருபது பிராந்திய வித்தியாலயங்களையும் நிறுவுதல், (iv) அம்பர் சர்க்கா (Ambar Charkha) பயிற்சி, ஆராய்ச்சி வசதிகள், (v) மத்தியக் கைத்தொழில் வளர்ச்சி நிலையம், (vi) மாநிலங்களில் பயிற்சியும், கண்கூடான சான்று விளக்கமும் தரும் நிலையங்கள், (vii) சில மாநிலங்களில் பாலிடெக்னிக்குகள் (polytechnics), (viii) பணி நிறுவனங்கள், சுற்றி வரும் மாதிரித் தொழிற்சாலைகளை நிறுவுதல், (ix) பட்டுத் தொழிலுக்கான பயிற்சி நிலையங்கள், பட்டுத் தொழில் ஆராய்ச்சி நிலையங்களின் விஸ்தரிப்பு, (x) பயிற்சிப் பள்ளிகளும், கயிற்றுத் தொழிலுக்காகக் கேரளாவில் மத்திய ஆராய்ச்சி நிலையமும்.

**சமூகப் பணிகள் :** (i) **மருத்துவம் :** இரண்டாம் திட்ட காலத்தில் மொத்தம் தேவைப்பட்ட மருத்துவப் பட்டதாரிகள் 22,000 ஆவர். இப்பொழுது ஒவ்வொரு வருடமும் வெளிவரும் மருத்துவர்கள் எண்ணிக்கை 2,500 ஆகும். கீழ்க்கண்ட நடவடிக்கைகள் இக்குறையை நீக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது : இப்பொழுதிருக்கும் 28 கல்லூரிகளில் மாணவர்களின் எண்ணிக்கையை அதிகமாக்குவதும், 6 புதுக் கல்லூரிகளை நிறுவுவதும் ; இப்பொழுதிருக்கும் 4 பல் மருத்துவக் கல்லூரிகளை விரிவாக்குவதும், 2 புதுப் பல் மருத்துவக் கல்லூரிகளை நிறுவுவதும் ; செவிலியர் (nurses), மருத்துவச்சிகள் (midwives), சுகாதார மேற்பார்வையாளர்கள் முதலியோர் பயிற்சி வசதிகளை அதிகரித்தல். (ii) **கல்வி :** திட்டமிடப்பட்டபடி, தேவையாகும் 5,00,000 பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்கு மேலாகவே பயிற்சி அளிக்க வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆதாரப் பயிற்சிக் கல்லூரிகள் 33லிருந்து 71க்கு அதிகமாக்கப்படும். ஆதாரப் பயிற்சிப் பள்ளிகள் 449-லிருந்து 729க்கு உயரும் ; ஆகவே இரண்டாம் திட்டத்தின் முடிவில், ஆதாரப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களின் தேவை முழுதும் பூர்த்தியாகும். பழங்குடி (tribe) மாணவர்களுக்கு, இம்பாலிலும் (Imphal), இன்னும் மற்ற இடங்களிலும்

வாழ்க்கைத் தொழிலிலும், தொழில்முறைப் பாடங்களிலும் பயிற்சி அளிக்கச் சிறப்புப் பள்ளிகள் துவக்கப்படும்.

61. **இந்திய நிர்வாகத்தைப் பற்றி ஆப்பிள்பியின் கருத்து:** திரு. பால் H. ஆப்பிள்பி (Mr. Paul H. Appleby) (49 ஆம் பகுதியைப் பார்க்க), இந்திய அரசாங்கத்தின் அழைப்பின்பேரில் இந்தியாவிற்குத் தொடர்ச்சியாக மும்முறை வந்துள்ளார்[1]. அவர் நம் நாட்டின் நிர்வாகப் பிரச்சினைகளை ஆராய்ந்து, தம் ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கீழ்க்கண்ட இரு சிறு சுவடிகளாக வெளியிட்டார்: (1) இந்தியாவில் பொது நிர்வாகம்: மதிப்பீட்டின் அறிக்கை (1953) (Public Administration in India: Report of a Survey, 1953), (2) இந்தியாவின் நிர்வாக அமைப்பை, குறிப்பாக அரசாங்கத்தின் தொழில், வாணிக நிறுவனங்களைச் சரிபார்த்தல் (1956)[2] (Re-examination of India's Administrative System with Special Reference to Administration of Goverament's Industrial and Commercial Enterprises, 1956). அவருடைய கருத்துக்களை நம்மால் ஒப்புக் கொள்ள முடியாதபோதுங்கூட, அவைகள் சிந்தனையைத் தட்டி எழுப்பக்கூடியவையாக இருக்கின்றன. இரு பிரசுரங்களிலுமிருந்து எடுக்கப்பட்ட கீழ்வரும் சில கருத்துகள் கவனிக்கத்தக்கவை.

திரு. ஆப்பிள்பியின் கருத்து, இந்திய நிர்வாக அமைப்பில் வேண்டிய ஒரு பெரிய சீர்திருத்தம், 'நிர்வாகம் முழுவதும் சூழ்நிலைக்குத் தக்கவாறு பொருத்தமான காரியங்களைச் செய்தல் வேண்டும்' என்பதாம். திரு. ஆப்பிள்பி மேலும் கூறுவது என்னவெனில், பொதுவாக எல்லோராலும் கருதப்படுவதற்கு மாருக, அதிகாரத்தை மாற்றி அளிக்கும்பொழுது, அதன் விளைவாகச் சரிபார்க்கும் முறைகளில் வளர்ச்சி ஏற்படல் வேண்டும். கொடுக்கப்பட்ட அதிகாரத்தின்மேல் கட்டுப்பாடு வேண்டும். அவ்வாறு அதிகாரத்தை மாற்றிக்கொடுப்பது பொறுப்பிலிருந்து நீங்குவது ஆகாது; பொறுப்பு அதிகமாவதையே குறிக்கும்.' (ச., பக்கம். 16.)

திரு. ஆப்பிள்பி வற்புறுத்தும் இன்னொரு கருத்து, நாடெங்கும் நிர்வாகத்தில் தீர்மானங்கள் செய்ய ஏற்படும் அளவற்ற காலதாமதமாகும். மேலும் பல சரிபார்க்கும் அதிகாரங்களைப் படைத்த செயலாண்மைகள் பயன்படுத்தும் முறைகளின் சிறுமையையும் பயனற்ற தன்மையையும் குறிப்பிடுகிருர். மேலும் அச் செயலாண்மைகள்

[1] இரு வருடங்களுக்கு ஒரு முறையாக வந்துள்ளார். அவர் முதலில் வந்தது 1953ஆம் ஆண்டிலாகும். 49ஆம் பிரிவையும் காண்க.

[2] இனிமேல் இவைகள் முறையே 'ம' என்ற எழுத்தாலும் 'ச' என்ற எழுத்தாலும் குறிப்பிடப்படும்.

அம் முறைகளை மேற்கொள்ளும்போது, முன்மாதிரிகளைப்பற்றியோ அவைகளுக்கு ஆகும் பணச்செலவைப்பற்றியோ கவலைப்படுவதில்லை. 'சரிபார்க்கும் முறைகள் எல்லாமே சிறுமை, மலிவு, பகட்டுத் தன்மை நிறைந்தவையாக இருக்கின்றன.' கீழ்வருபவை திரு. ஆப்பிள்பி அவர்கள் இச் சந்தர்ப்பத்தில் கூறிய (பெரும்பாலும் அவருடைய வார்த்தைகளிலேயே) கருத்துக்களாகும்.

'ஐந்தாண்டுத் திட்டத்தில், கணிசமான அளவுள்ள ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணி, எஃகு, நிதிகள் முதலியவற்றை ஒதுக்கீடு செய்தாயிற்று. ஆயினும் எந்த அமைச்சின்கீழ் இத் திட்டம் செயலாற்றப்பட வேண்டுமோ, அந்த அமைச்சு, முதலில் தேவைப்படும் பணியாளர்களுக்கும், அவர்களுக்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அளிக்கவேண்டிய சம்பளத்திற்காகவும், நிதி அமைச்சிடமும் சில சமயங்களில் உள்நாட்டு அமைச்சிடமும் அநுமதி பெறவேண்டும். அயல் நாட்டுச்செலாவணியை உபயோகிப்பதற்காக அது அனுமதி பெறவேண்டும். மேலும் வேறு எந்த அமைச்சுக்காவது அத் திட்டத்தில் ஏதாவதொரு சிறு காரணத்திற்காகப் போட்டி மனப்பான்மை இருக்குமானல், அல்லது அத் திட்டத்தைக் கெடுக்கப் பலம் இருக்குமானல் அந்த அமைச்சின் சம்மதத்தையும் பெறவேண்டும். இந்தப் பல்வேறு அனுமதிகளும் முதலில் அனுமதி வ்ழங்கப்பட்ட மொத்தத் திட்டத்திற்காக அல்ல; திட்டத்திற்கு வேண்டிய ஒவ்வொரு செயலுக்கும் இவ்வாறு அனுமதி பெறவேண்டும். சரிபார்க்கும் வழி முறைகளும் சிறுமை நிறைந்தவையாயும், செயலாற்றுதலைத் தடுப்பவையாயும் இருக்கின்றன' (ச., பக்கம் 17). 'கொள்கையளவில் திட்டங்களின் வகை, அளவு முதலியவற்றை ஒப்புக்கொண்டு தேவையான அளவு பணத்தையும் கொடுத்தபின், காரியத்தை நிறைவேற்றத் திட்டமான தீர்மானங்கள் செய்யும் பொழுது, அத் தீர்மானங்கள் மிக அதிகப் பேர்களாலும், மிக அதிகமான அரசாங்க உறுப்புக்களாலும் மிக அதிக விளக்கங்களுடன், மிக அதிகமாகத் திருப்பித் திருப்பிப் பார்க்கப்பட்டு, மிக அதிகம் பயனில்லா வழிகளில் சரி பார்க்கப்படுகின்றன (ச., பக்கம் 17). 'ஒரு நாடு போரில் ஈடுபட்டிருந்தால் எந் நிலையில் இருக்குமோ, அவ்வாறு இப்பொழுது இந்தியா ஓர் அவசர நிலையில் இருக்கிறது. இந்த அவசர காலத்தில் அதன் வெற்றி, தீர்மானங்களை விரைவாகச் செய்வதிலும், காரியங்களைத் துரிதமாக ஆற்றுவதிலுந்தான் இருக்கிறது. புதுத் தொழிற்றுணிவுகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் இத் தருணம், மிக முக்கியத்துவம் வாய்ந்த அவசர நிலையாகும். போர்க்காலத்தைப் போலவே, அவசர காலத்திலும் ஜனநாயக அடிப்படைக்கேற்ப, காரியங்களைத் துரிதப்படுத்துவதில் உச்ச சக்தி வாய்ந்த, வழிமுறைகளைக் கடைப்பிடிக்கவேண்டும்.' (ச., பக்கம் 6) 'பழைய முறைகளையே கடைப்

பிடிக்கும் வழக்கம், கீழ்ஊழியர்களிடையே பயனற்ற, துணிவில்லாத போக்கை வளர்க்கிறது. அரசியலில் தலைமை வகிப்போர் முக்கியமாகப் புரட்சி நிலையில் புது வெற்றிகளை அடைய, பழைய வழிகளை விட்டுப் புதுவழிகளைக் கையாள மற்றவர்களைத் தூண்டுவது அவசியமாகும். (ச., பக்கம் 17-18)

தொழிலில் முழுப் பயிற்சி பெற்ற பணியாளர்கள், தங்களைவிடக் குறைந்த பயிற்சியுள்ளவர்கள் செய்யக்கூடிய காரியங்களைச் செய்து நேரத்தை வீணாக்கும்பொழுது, குடிமக்களுக்குச் சேர வேண்டிய பணிகள் அவர்களுக்குக் கிடைக்காமற் போகின்றன. ஏனெனில் இவர்கள் தங்களுக்குக் கீழ் உள்ள தொழிற் பயிற்சி பெற்றவர்களை உபயோகிக்க விருப்பமற்றவர்களாக இருக்கின்றனர்...போதுமான அளவில் உணரப்படாத, அதிகாரங்களை மாற்றிக் கொடுக்கவேண்டிய பொதுஅவசியத்தில் இது ஓர் அம்சமாகும். (ச., பக்கம் 15)

திரு. ஆப்பிள்பி அவர்கள் நிதி அமைச்சையும், அரசாங்கத் தணிக்கைத் தலைவரையும் (Comptroller and Auditor-General) மிக வாகக் குறைகூறுகிறார். நிதி அமைச்சு, முதலிலேயே ஒரு குறிப்பிட்ட திட்டத்திற்கு அரசாங்கத்தின் குறைந்த நிதியிலிருந்து எவ்வளவு கொடுக்கப்படலாம் என்பதைப் பொதுவாகத் தீர்மானித்த பின், அத் திட்டத்தின் பல பகுதிகளுக்கு நிதி நிர்ணயிப்பதில் அதற்கு ஓர் அதிகாரமும் இல்லை. (ச., பக்கம் 19.) ஒரு நல்ல வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிப்பதற்குப் பதிலாக, செல வினங்களைக் கட்டுப்படுத்துவது மிக அதிகமாக உபயோகப்படுத்தப் படுகிறது. இந்தப் புகழ்பெற்ற வரவு செலவுத் திட்டத்தைப் பாராளு மன்றத்திற்குச் சமர்ப்பித்து அதை நிறைவேற்றிய பின்னர், உண்மை வரவு செலவுத் திட்டத்தைத் தயாரிப்பது ஒரு வழியாகும். (ச., பக்கம் 21.)[1] கணக்குத் தணிக்கை செய்வது (auditing) ஒரு முக்கியமான காரியமானாலும், அது ஒரு மந்தமான காரியம்; அதனால், அதிக முக்கியத்துவம் வாய்ந்த பல காரியங்களை நிர்வாகத்திற்குத் தெரிவிக்க முடிவதில்லை என்பது திரு. ஆப்பிள்பியின் கருத்து (ம., பக்கம் 10); அதற்கு அளிக்கப்படாத காரியங்களில் அது தலையிடுவதை அனு மதிக்கக்கூடாது. நோக்கங்களின் தகுதியை ஆராய்வதற்கும் பொது வாக நிர்வாகத்தின் செயல்களை மதிப்பீடு செய்வதற்கும், அரசாங்கத் தணிக்கைத் தலைவருக்கு என்ன சிறப்புத் தகுதி இருக்கிறது எனத் திரு. ஆப்பிள்பி வினவுகிறார். அரசாங்கத் தணிக்கைத் தலைவரின்

[1] *இந்த அமைப்பில் செயலாண்மைகள், செயல்படுத்த முடியாத பல திட்டங் களைச் சமர்ப்பிக்கும்படிச் செய்யப்படுகின்றன. இது தவறான செலவு மதிப்பீடுகளையும்* (poor cost estimates), *தவறான வரவு செலவுத் திட்ட மாதிரியையும் ஏற்படுத்து கிறது; மேலும் செலவின் மதிப்பீடு தொடர்பற்று, அளவு கடந்த செலவைக் காட்டு கிறது. (ச., பக்கம். 22)*

அறிக்கைகள் பொதுவாக நிர்வாகத்தைப்பற்றி மட்டுமல்லாது, பல திட்டங்களின் மதிப்பீட்டைப்பற்றியும் அதிகார பூர்வமாகப் பேசுவதாகக் கருதப்படுவது ஒழுங்கற்றதாகும். (ச., பக்கம் 43.) இந்த அறிக்கைகளுக்குப் பாராளுமன்றம் அதிக முக்கியத்துவம் அளிப்பதால், பொதுப்பணியாளர்கள் எல்லா நிலைகளிலும் தீர்மானங்கள் செய்யும் பொறுப்பை ஏற்கப்பயப்படுகிருர்கள். அதனுல் தீர்மானங்கள் செய்யப் பிறர் கருத்தை அறிவது, ஆலோசனைக் கூட்டங்கள் கூட்டுவது போன்ற வழிமுறைகள் ஏற்படுகின்றன. இவ் வகையில், எல்லாத் தீர்மானங்களிலும் எல்லாருக்கும் பங்கு உண்டு. ஆனுல் காரியங்கள் குறைந்த அளவில் நிறைவேறுகின்றன. அப்படிச் செய்யப்படும் காரியமும் மிக மெதுவாகச் செய்யப்படுகின்றது. (ச., பக்கம் 42.)

அரசாங்கத் தணிக்கைத் தலைவரும், பாராளுமன்ற அங்கத்தினர்களும் மிகச் சிறிய காரியங்களில்கூடத் தலையிடுகின்றனர் என்பதை, அல்லது அவைகள் சிறப்புக் காரியங்களாக இருப்பதால், அவைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்பதை நாம் ஒப்புக்கொள்கிருேம். அதே சமயத்தில் கண்டிப்பு மிகுந்த தணிக்கையின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்த முடியாது. தவருன வழிகளையும், அத்துமீறிய செலவையும் கட்டுப்படுத்த, தணிக்கைத் தலைவர், பாராளுமன்றத்தினர் ஆகியோருடைய இடையரு விழிப்பு மிக அவசியமானது.

திட்டக் குழுவைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது, திரு. ஆப்பிள்பி அது நேரிடையாக நிர்வாகத்தைச் சரிபார்த்துக் கட்டுப்படுத்த முயல்வதை மறுத்துக் கூறுகிருர். அது செயல்களை நெருங்கிக் கவனித்து, மதிப்பீடு செய்யும் தனது அலுவலுடன் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும் எனக் கருதுகிருர். (ச., பக்கம் 31). திரு. ஆப்பிள்பி, சுட்டிக் காட்டியுள்ளபடி, திட்டத்தின்கீழுள்ள அலுவல்கள் விரிவாகவும், திருப்திகரமாகவும் நிறைவேறுவதற்கு முட்டுக்கட்டையாக உள்ள ஓர் இடுக்கண், நமது அரசியல் சட்டத்தின் அமைப்பாகும். அரசியல் சட்டத்தின்கீழ் மத்திய அரசாங்கத்திற்கு அடிப்படையான நிர்வாக அதிகாரங்கள் கிடையா. இதன் விளைவாக, நாட்டு நலனில் முக்கியத்துவம் வாய்ந்த பல துறைகளில், மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கங்களைத் தூண்டுவதிலும், நிர்வாகத்தை இணைக்க முயல்வதிலும், ஆலோசனைக் கூட்டங்கள் கூட்டுவதிலும், திட்டங்களைப் பரிசீலனை செய்வதிலும், கருத்துக்களை வெளியிடுவதிலும் திருப்தி அடையவேண்டியதாய் இருக்கிறது. மாநிலங்களைக் கண்டிப்புடன் கணக்குக் கேட்கவும் இயலவில்லை. அரசியல் எந்த அளவில்

பன்முகப்படுத்தப்பட்டிருக்கிறது எனில், எதிர்காலத்தில் இந்தியா, தனித்த ஒரு நாடாகச் செயலாற்றுவதையே அச்சுறுத்துகிறது.

அரசாங்கத் தொழில், வாணிகத் தொழிற்றுணிவுகளின் நிர்வாகத்தில் பெருமளவு சுதந்தரம் கொடுப்பதைத் திரு. ஆப்பிள்பீ ஆதரிக்கிறார். அரசாங்கம் மிக முக்கியமான காரியங்களில் மட்டுமே தலையிடவேண்டும். எனினும் ஒரு ஜனநாயகத்தில் அடிப்படைக் கட்டுப்பாடுகள் விதிக்கும் அதிகாரம் அரசாங்கத்திடமே இருக்கும். இயக்குநர்க் கழகங்களில் தனி மனிதர்களைச் சேர்ப்பதைத் திரு. ஆப்பிள்பி விரும்பவில்லை. அவர்கள் ஆலோசகர்களாகத்தான் உபயோகிக்கப்படவேண்டும். எனினும் பொதுப்பணியாளர்களுக்குப் பொதுவாக வர்த்தக அனுபவமோ அறிவோ இல்லாததால், அக் கழகங்களில் அலுவலர்கள் அல்லாத நிபுணர்களை எப்பொழுதும் வைத்திருப்பது அவசியம்.[1]

ஆட்சிப் பணியிலுள்ள அலுவலர்களைப்பற்றியும், அவர்களின் பணிகள், தகுதிகள், நோக்கு, வேலைக்கு அமர்த்தும் முறை, கைம்மாறு (remuneration) முதலியவைகளைப்பற்றியும் திரு. ஆப்பிள்பி அவர்கள் அநேக குறைகள் கூறியுள்ளார். 'இங்குப் பணியாளர் நிர்வாகம் மிக அதிகமாக நிலமான்யமுறைப் பழைமையையும், மிக அதிகமாகக் கோட்பாட்டு அளவினதாயும், அறிவு செறிந்ததாயும், அதே சமயத்தில் மிகக் குறைந்த அளவில் நிர்வாக நடவடிக்கையையும், மனிதத் தொடர்புகள் அமைப்பையும் கொண்டதாயிருக்கிறது; இப்பொழுதிருக்கும் பணியாளர்களின் உரிமைகள் அளவுக்கு மீறிப் பாதுகாக்கப்படுகின்றன,' என அவர் கூறுகிறார்....அவர் மேலும் கூறுவதாவது: 'ஏற்கெனவே பணியிலிருக்கும் கீழ் ஊழியர்களின் திறனை வளர்ப்பதில் மிகக் குறைந்த கவனஞ் செலுத்தப்படுகிறது.' மேலும் சம்பள நிலையிலும், வேலைச் சுமையிலும் ஒருமைப்பாடு மிகக் குறைவு. சில துறைகளில் பணியாளர்கள் தேவைக்கு மீறியும், இன்னும் சில துறைகளில் பணியாளர்கள் தேவைக்குக் குறைந்தும் இருக்கின்றனர். பொதுப் பணியில் நுழைவதற்குத் தேவையான தகுதிகளைப்பற்றிய கருத்துகளும், பொதுப் பணியாளரைப் பொறுக்கும் ஆணைக் கழகத்தின் (Public Service Commission) வழிமுறைகளும், தகுதி வாய்ந்த பலரை நுழைய விடாமல் தடுக்கின்றன. தகுதி வாய்ந்தவர்களின் பட்டியலை வைத்திருப்பது, அவர்களை விரைவில் வேலையில் அமர்த்த உதவும் என அவர் கருதினார். இப்பொழுது இருக்கும் நிலையில் ஒவ்வொரு முறையும் வேலைக்கு ஆள் தேவைப்படும்பொழுது

[1] பேராசிரியர் டி. ஜி. கார்வே அவர்கள் திரு. ஆப்பிள்பி அவர்களின் வேலையைப்பற்றி எழுதியுள்ள கட்டுரையைக் காண்க: The Times of India, 1956ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம், 19ஆம் நாள்.

விளம்பரம் செய்தல், தேர்வு வைத்தல் முதலிய எல்லாக் கடினமான, நேரத்தைச் செலவிடும் காரியங்களையும் செய்ய வேண்டியதாயிருக்கிறது (ச., பக்கங்கள் 23-4). தகுந்த பணியாளர்கள் கிடைப்பதற்கும், அவர்களது திறனை உச்ச அளவிற்கு உயர்த்தவும் போதிய அளவு ஊதியம் கொடுக்கவேண்டுமென்பது அநேகமாக உணரப் படுவதில்லை. சமத்துவம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு விரைந்து செல்வது, தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளும் குற்றமாகும் (ம., பக்கம் 29).

62. **திட்ட மதிப்பீடுகள்:** பல திட்டங்களின் முன்னேற்றத்தைக் கணிக்கத் தனிப்பட்ட செயலாண்மையை ஏற்படுத்துவது, திட்டவெற்றியின் ஒரு முக்கிய அம்சமாகும். திட்டத்தைத் துவக்கும் பொறுப்பில் இருப்போர் இயற்கையாகச் செய்ய முயலும் காரியங்களை, உதாரணமாக அதிருப்தி அளிக்கும் உண்மைகளை மறைப்பது, முன்னேற்றமே இல்லாதபொழுதும் முன்னேற்றம் இருப்பதுபோல் காட்டுவது, மதிப்பீட்டிலோ செயலாற்றுவதிலோ நேரும் தவறுகளால் ஏற்படும் தடுமாற்றங்களை மறைப்பது முதலியன திறமையுடன் தவிர்க்கப்படல் வேண்டும். இச் சந்தர்ப்பத்தில் பம்பாய், கட்டட இலாக்கா ஓய்வுபெற்ற மேற்பார்வைப் பொறியாளர், ராவ் பகதூர் என். எஸ். ஜோஷி, (Rao Bahadur N. S. Joshi, Retired Superintending Engineer, Bombay P. W. D.) அவர்களும், தார்வார், கர்நாடகக் கல்லூரி டாக்டர் பி. ஆர். தேக்னே அவர்களும் (Dr. B. R. Dhekney, Karnatak College, Dharwar), 'முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நீர்ப்பாசனமும் விவசாயமும்: ஒரு மதிப்பீடு' என்ற தலைப்பின் கீழ் வெளியிட்டுள்ள ஒரு பிரசுரத்தைக் குறிப்பிடலாம். இப் புத்தகத்தில் குறைந்த செலவு மதிப்பீட்டிற்கும், உயர்வாக மதிப்பிடப்பட்ட உற்பத்திக்கும் அநேக உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.[1]

நாடெங்கும் நடைபெறும் காரியத்தைத்தான் இந்த உதாரணங்கள் காட்டுகின்றனவோ என எண்ணும்பொழுது, அது வேதனைக்

[1] *உதாரணமாக, பம்பாய் மாநிலத்திலுள்ள கடபிரபா இடக்கரைக் கால்வாயை* (Ghataprabha Left Bank Canal) *எடுத்துக்கொண்டால், 1954 - 5-ல் மொத்தம் நீர்ப்பாசனம் செய்யப்பட்ட ஏக்கர்கள் 12,023; ஆனால் மதிப்பீடு 40,000. 1955 - 6-ல் நீர்ப்பாசனம் செய்யப்பட்ட ஏக்கர்கள் 13,366; ஆனால் மதிப்பீடு 45,000 ஏக்கர்கள். கீழ்த்தபி பள்ளத்தாக்குத் திட்டத்தின்* (Tower Lapi Valley Scheme) *உதாரணம் இன்னும் அதிகமாகக் கவரத்தக்கதாக இருக்கிறது. 1954 - 5-ல் நீர்ப்பாசனம் செய்யப்பட்ட ஏக்கர்கள் 668; ஆனால் மதிப்பீடு 2,61,000 ஏக்கர்கள்; 1955 - 6-ல் நீர்ப்பாசனம் செய்யப்பட்ட ஏக்கர்கள் 5,725; ஆனால் மதிப்பீடு 3,91,000 ஏக்கர்கள். தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தின்கீழ்* (Damodar Valley Scheme), *1955 - 6-ல் நீர்ப்பாசனம் செய்யப்பட்ட ஏக்கர்கள் 11,371; ஆனால் மதிப்பீடு 5,95,000 ஏக்கர்கள்.*

குரியதாக இருக்கின்றது; செலவைப்பற்றியும், விளைவுகளைப்பற்றியும் முதலில் போடப்படும் 'மதிப்பீடு நம்பத்தகுந்ததாய் இருக்க முக்கியக் கவனம் எடுத்துக்கொள்ளவேண்டும். விளைவுகளைக் கவனித்து மதிப்பீடு செய்யவும், தோல்விகளையோ, தவறுகளையோ மறைக்காமல் அவ்வப்போது சரியான அறிக்கைகளைச் சமர்ப்பிக்கவும் ஒரு திறமையுள்ள நிர்வாக அமைப்பை ஏற்படுத்துவ்துதும் அவசியமாகும்.[1]

[1] புள்ளியியல் துறையாளர், தங்கள் கணக்கீடுகள் 'தவறு வரை' (margin of error)களுக்கு உட்பட்டது என அடிக்கடிக் குறிப்பிடுகின்றனர். ஆனல் உண்மைகளை வேண்டுமென்றே மாறுபடுத்திக் கூறுவோர் 'ஏமாற்று வரை (margin of eye-wash) களையோ' அல்லது மாறுபாட்டின் அளவையோ குறிப்பிடும் பழக்கம் கிடையாது.

# அனுபந்தம் 1

## துணை வரவு செலவுத் திட்டம், நவம்பர் 1956

1956ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், 30ஆம் நாள், நிதி அமைச்சர் ஒரு துணை வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்தார். அதில் ஒரு முழு வருடத்தில் ரூ. 16 கோடி வருமானம் வரும்படியாக, அதிக வரிவிதிப்புகளும், சுங்கவரி அதிகரிப்பும் இருந்தன. கீழ்வரும் திட்டங்கள் வெளியிடப்பட்டன :

நேர்முக வரிவிதிப்பு : முதலீட்டு ஆதாய வரிவிதிப்பில் மாற்றம் இல்லை. ஆனல், சில விதிவிலக்குகள் அகற்றப்பட்டன. முதலீட்டு ஆதாயத்தின் வரி வீதம் வரி செலுத்துவோனின் மற்ற வரிக்குட்பட்ட வருமானத்தின்மீதான வருமான வரியின் வீதம் அவ் வருடத்தில் அவன் ஈட்டும் முதலீட்டு ஆதாயத்தில், ஒன்றின் கீழ் மூன்று பாகத்தால் அதிகரிக்கப்படும்.

செலுத்திய முதலில் (paid-up Capital) ஆறு சதவீதத்திற்கு மேலாக இலாப ஈவு (dividend) கொடுக்கும் கம்பெனிகள் மீதான மேல் வரி (Super tax) அதிகமாகும்.

கம்பெனிகளுக்கு உரிய தேய்மான ஒதுக்கீடுகளிலும், முன்னேற்றக் கழிவுகளிலும், ஓரளவுத் தொகை அரசாங்கத்திடமோ அல்லது ரிசர்வ் பாங்கிடமோ, ஜூன் 30ஆந் தேதிக்குமுன் வைப்புச் செய்யப்பட வேண்டும்; இல்லையானல், அவை வருமானக் கணக்கில் சேர்ந்து விடும். இது வரியில்லாத காப்புகள் வீணுகச் சிதறிவிடாமல், தொழில் முன்னேற்றத்திற்கு உதவவேயாகும்.

இப்பொழுது கிடைக்கும் இலாபம் முன்பு கிடைத்த இலாபம் ஆகியவைகளின் ஒரு வீதமாக நிர்ணயம் செய்யப்படும் இவ் வைப்புகளுக்கு வட்டி உண்டு. கம்பெனிகள் கேட்டுக்கொண்டால், இவ் வைப்புகள் திருப்பி அளிக்கப்படும். ஆனல் இத்தொகை திட்டத்தின்

முன்னேற்றத்திற்கு உதவும் என அரசாங்கத்திற்குத் தெரிய வேண்டும். ஓரளவிற்கு உட்பட்ட பங்குதாரர்கள் உள்ள கம்பெனிகளின் குறைந்தபட்ச இலாப ஈவுப் பங்கீடானது 60 சதவீதத்திலிருந்து 50 சதவீதத்திற்குக் குறைக்கப்படும்.

**சுங்க வரிகள் :** திராட்சைச் சாறு, சாராய வகை உட்பட அநேக போகப் பொருள்கள்மீது இறக்குமதி வரிகள் 25 சதவீதத்திலிருந்து 50 சதவீதத்திற்கு அதிகமாயிற்று. இதன்மூலம் ஆண்டிற்கு ரூ. 70 இலட்சம் கிடைத்தது.

மோட்டார் சைக்கிள்கள், ஸ்கூட்டர்கள், கடிகாரங்கள், கைக்கடிகாரங்கள் முதலியவற்றின்மீது இறக்குமதிவரி அதிகரித்தது. அதன் மூலம் ஆண்டிற்கு ரூ. 50 இலட்சம் கிடைத்தது.

நிலக்கரி, தார், சாயங்கள் முதலிய தொகுதி இனங்கள் சிலவகை இயந்திரங்கள்மீது ஏற்கெனவே இருக்கும் வரிகள் குறைவாய் இருப்பின் உள்நாட்டு உற்பத்தி முன்னேற்றமடைந்திருந்தால் வரி விதிப்பு அதிகமாகும். சில பொருள்களுக்கு இப்பொழுது இருக்கும் சலுகைகள் நீக்கப்படும். இதனால் ஒவ்வோர் ஆண்டும் ரூ. 180 இலட்சம் கிடைக்கும் என மதிப்பீடு செய்திருக்கின்றனர். செயற்கைப் பட்டு நூல் மீதான இறக்குமதி வரி அதிகமாகும். இதனால் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 160 இலட்சம் கிடைக்கும்.

**மத்திய ஆயத் தீர்வைகள் :** மேற்கூறியதைப் போலவே உள்நாட்டுச் செயற்கைப்பட்டு நூலின்மீது அதிக வரி விதிப்பதன் மூலம் கிடைக்கும் தொகை ஆண்டுதோறும் ரூ. 70 இலட்சம் ஆகும். நூலிழைப் பருத்தி, நூலிழைப் பருத்தி நூல் ஆகியவற்றின்மீது, ஒரு பவுண்டிற்கு இரண்டு அணா; இது மிகக் கீழான ஆயத் தீர்வையாகும்.

உற்பத்தி செய்ய அதிகச் செலவாகும் மோட்டார் கார்கள் (இந்தியாவில் செய்யப்பட்டவை) மீது ரூ. 3,000 ஆயத் தீர்வை விதிக்கப்படும்; இதன்மூலம் ஆண்டொன்றுக்கு ரூ. 80 இலட்சம் கிடைக்கும். சிறிய கார்களும், சுமை தூக்கிச் செல்லும் மோட்டார் வண்டிகளும் (trucks) இதனால் பாதிக்கப்படவில்லை.

வாணிக உண்டியல்கள்மீதான முத்திரைவரி கணிசமாக உயரும். இதிலிருந்து கிடைக்கும் அதிக வருமானம் மாகாணங்களுக்குச் சேரும்.

# அனுபந்தம் 2

## நிதிக்குழுவின் தற்காலிகத் தீர்ப்பு, 1956

வரி வரவுகளை மத்திய, மாநில அரசாங்கங்களிடையே பிரிப்பது பற்றி விசாரணை செய்ய, இந்திய அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்ட நிதிக்குழு, தனது தற்காலிகப் பரிந்துரைகளை, 1956 ஆம் ஆண்டின் இறுதியில் வெளிப்படுத்தியது. 1957-8 ஆம் ஆண்டுக்குரிய இப் பரிந்துரைகளை அரசாங்கம் ஒப்புக்கொண்டது.

மாநகராட்சி வரியைத் தவிர, மற்ற வருமானங்கள் மீதான வரிகளின் வரவுகளில் 55 சதவீதம் மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப் படல் வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. (யூனியன் நிலப்பகுதி களுக்கு உடைமையாக்கத்தக்க வரவுகளையும், யூனியன் ஆதாயங்களுக் காகக் கொடுக்கப்படும் வரிகளையும் தவிர), குழுவின் திட்டப்படி பம்பாய் மாநிலம் மிக உயர்ந்த சதவீதத்தைப் பெறுகிறது; அதாவது பகிர்ந்தளிக்கக் கூடிய வருமானவரிக் குவிப்பிலிருந்து 18·91 சதவீதம்; உத்தரப் பிரதேசம் 15·59 சதவீதம் பெறுவதால் இரண்டாவதாக வரு கிறது; மேற்கு வங்காளம் 11·48 சதவீதம் பெற்று மூன்றுவதாக வருகிறது; ஜம்முவும் காஷ்மீரும் மிகக் குறைந்த சதவீதமான 1·01ஐப் பெறுகின்றன. மற்ற மாநிலங்கள் கீழ்வரும் சதவீதங்களைப் பெறு கின்றன. ஆந்திரப் பிரதேசம் 8·01; அஸ்ஸாம் 2·23; பீகார் 9 31; கேரளா 3·6; மத்தியப் பிரதேசம் 5·09; சென்னை 7·95; மைசூர் 5·93; ஒரிஸ்ஸா 3·46; பஞ்சாப் 3·96; இராஜஸ்தான் 3·47. யூனியன் நிலப் பகுதிகளுக்கு வரவுகளில் உடைமையாக வேண்டியது ஒரு சதவீதமாக எடுத்துக்கொள்ளலாம். விவசாய நிலங்களைத் தவிர, மற்ற சொத் துக்களின் மீதான சொத்துவரியைப் பங்கிடுவதுபற்றி, அக் குழு கூறும்பொழுது, வருமான வரியைப் பங்கிட்டு அளிக்கும் அதே கொள்கையைத்தான் இங்கும் பின்பற்றவேண்டும் எனக் கூறியது.

தீப்பெட்டி, புகையிலை, காய்கறி உற்பத்திப் பொருள்கள் இவைகள் மீதான யூனியன் ஆயத் தீர்வைகளின் நிகர வரவுகளில் நாற்பது சதவீதம் மாநிலங்களுக்கிடையே பிரித்து அளிக்கப்பட வேண்டியவை. இப் பங்கீட்டு அளிப்பில் உத்தரப் பிரதேசம் மிக அதிக சதவீதமான 18 சதவீதத்தைப் பெறுகிறது. அதைப் பின்பற்றி மற்றைய மாநிலங்கள் பின் வரும் சதவீதங்களைப் பெறுகின்றன: பம்பாய் 13·59 சதவீதம்; பீகார் 11·04 சதவீதம்; ஆந்திரப் பிரதேசம் 8·92 சதவீதம்; அஸ்ஸாம் 2·58 சதவீதம்; கேரளா 3·86 சதவீதம்; மத்தியப் பிரதேசம் 6·17 சதவீதம்; சென்னை 8·54 சதவீதம்; மைசூர் 5·45 சதவீதம்; ஒரிஸ்ஸா 4·17 சதவீதம்; பஞ்சாப் 4·6 சதவீதம்;

இராஜஸ்தான் 4·34 சதவீதம்; மேற்கு வங்காளம் 7·49 சதவீதம்; ஜம்முவும் காஷ்மீரும் 1·25 சதவீதம்.

மேற்கு வங்காளம், சணல், சணல் உற்பத்திப் பொருள்கள் மீதான ஏற்றுமதித் தீர்வையின் பங்கிற்குப் பதிலாக ரூ. 152·69 இலட்சம் நிதியுதவித் தொகையாகப் பெறுகிறது. மற்ற மாநிலங்கள் கீழ் வரும் தொகைகளைப் பெறுகின்றன: அஸ்ஸாம் ரூ. 75·00 இலட்சம். பீகார் ரூ. 72·31 இலட்சம்; ஒரிஸ்ஸா ரூ. 15·00 இலட்சம்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலனை வளர்க்கச் செயல்படுத்தப் படும் முன்னேற்றத் திட்டங்களின் செலவிற்காக, மாநிலங்களுக்குக் கீழ்வரும் தொகைகளை நிதியுதவிகளாக, ஒன்ருக்கப்பட்ட இந்திய நிதியிலிருந்து (Consolidated Fund of India) கொடுக்கலாம் என அக் குழு பரிந்துரைத்தது (ரூபாய்கள் இலட்சத்தில்): ஆந்திரா 24, அஸ் ஸாம் 100, பீகார் 80, பம்பாய் 130, கேரளா 41, மத்தியப் பிரதேசம் 251, சென்னை 5, மைசூர் 46, ஒரிஸ்ஸா 107, பஞ்சாப் 163, இராஜஸ் தான் 115, மேற்கு வங்காளம் 83, ஜம்முவும் காஷ்மீரும் 175.

அக் குழு தற்காலீகப் பரிந்துரைகளை அமைக்கும்பொழுது, பல் வேறு மாநிலங்களும் அவைகள் இருக்கும் நிலையிலேயே இருக்க எவ் வளவு முடியுமோ, அவ்வளவு முயன்றன. மாநிலங்களின் மறு அமைப் பினுல் பாதிக்கப்படாத மாநிலங்களுக்கு, வருமான வரி, ஆயத் தீர்வை கள் இவைகளின் சதவீதப் பங்குகள் முதல் நிதிக் குழு பரிந்துரைத்தது போலவே மாற்றமின்றி இருக்கும். ஆனுல் ஜம்மு, காஷ்மீர் மாநிலத்தை இத் திட்டத்தில் சேர்த்ததனுல் ஏற்படும் சிறு மாற்றங்கள் மாத்திரம் இருக்கும்.

1956 ஆம் ஆண்டின் மாநிலங்களின் மறு அமைப்புச் சட்டத் தாலும், 1956 ஆம் ஆண்டின் பீகார், மேற்கு வங்காளம் (நிலப் பகுதிகள் மாற்று) சட்டத்தாலும் பாதிக்கப்பட்ட மாநிலங்களுக்கு, வருமான வரியிலும், ஆயத் தீர்வையிலும் சதவீதங்களை அக் குழு மாற்றியமைத்தது. இம் மாறுதல் 1956 ஆம் ஆண்டின் பீகார், மேற்கு வங்காளம் (நிலப்பகுதிகள் மாற்று) சட்டத்தின்கீழ் ஜனுதிபதியால் பிறப்பிக்கப்பட்ட உத்தரவோடு இணைந்திருக்கிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் நலனுக்காக மாநிலங்களுக்கு நிதி யுதவிகள் அளிக்க, முன்னைய C பிரிவு மாநிலங்கள் தங்கள் வருமானத் துண்டைச் சரிசெய்ய மத்திய வருமானத்திலிருந்து எந்த அளவு உதவி பெற்றன என்பதை அக் குழு பரிசீலனை செய்தது. அதன் நோக்கம், அந்த C பிரிவு மாநிலங்கள் இப்பொழுது எந்த மாநிலங்களுடன்

இணைக்கப்பட்டிருக்கின்றனவோ அந்த மாநிலங்களின் வருமானத் துண்டைச் சரிக்கட்டுவதுதான்.

தன் முடிவான பரிந்துரைகளைப் பாதிக்காதவாறு அக் குழு ஆரம்பக் கல்வி விரிவிற்காக அளிக்கப்படும் நிதியுதவிகளைப் பொது நிதியுதவிகளாகக் கருதியது; அல்லது அக் குழு ஏற்கெனவே இருக்கும் நிதியுதவிகளை அப்படியே தொடர்ந்து இருக்குமாறு செய்தது. ஆனால், 1956 ஆம் ஆண்டின் மாநில மறு அமைப்புச் சட்டம், 1956 ஆம் ஆண்டின் பீகார், மேற்கு வங்காளம் (நிலப்பகுதிகள் மாற்று) சட்டத்தில் 21-வது பிரிவின்கீழ்ப் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு, இவை களால் ஏற்படும் மாற்றங்கள் மட்டும் அதில் இருந்தன.

## அனுபந்தம் 3

### உயிர் காப்புறுதியைத் (Life Insurance) தேசியமயமாக்குதல்

உயிர் காப்புறுதியைத் தேசியமயமாக்குவதற்கான முதல் நடவடிக்கை, 1956 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19 ஆம் நாளின் உயிர் காப்புறுதி (அவசர ஏற்பாடுகள்) உடனடிச் சட்டமாகும் (Life Insurance [Emergency Provisions] Ordinance). இந்த உடனடிச் சட்டத்தின்கீழ் அரசாங்கம், இந்திய, அயல்நாட்டுக் காப்பாளர்களின் (insurers) உயிர் காப்புறுதி நிர்வாகத்தை எடுத்துக்கொண்டது. உயிர் காப்புறுதிக் கார்ப்பரேஷன் அமைக்கப்படவில்லை யாதலால், இவ்வாறு அரசாங்கம் எடுத்துக்கொள்ளுவதை மேற்பார்வை செய்யப் பொறுப்பாளர்களை (custodians) நியமித்தது. 1956 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், உயிர் காப்புறுதிக் கார்ப்பரேஷன் மசோதா (Life Insurance Corporation Bill) லோக் சபாவில் கொண்டுவரப்பட்டது; 1956 ஆம் ஆண்டு மே மாதம் அது நிறைவேறி, 1956 ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதி செயலுக்கு வந்தது. அஞ்சல் அலுவலக உயிர் காப்புறுதி நிதி, அரசாங்க ஊழியர்களுக்கான கட்டாய உயிர் காப்புறுதித் திட்டங்களைத் தவிர, மற்ற எல்லா வகை உயிர் காப்புறுதி அலுவல்களையும் இக் கார்ப்பரேஷன் மேற்கொள்கிறது; அது மூல தனக் கடன் மீட்சி வர்த்தகம் நிச்சய ஆண்டுத் தொகை வர்த்தகம் (annuity certain business), இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் மறு காப்பு வர்த்தகம் (reinsurance business) முதலியவற்றையும் மேற்கொள்கிறது. இக் கார்ப்பரேஷனுக்கு ரூ. 5 கோடி துவக்க முதலீடாக அரசாங்கத்தினால் அளிக்கப்பட்டது; அது மற்ற எல்லாக் கம்பெனிகளின் சொத்துக்களையும் கொடுக்க வேண்டிய பொறுப்புகளையும் எடுத்துக் கொண்டது. பொதுமக்களின் நலனைப் பாதிக்கும்

காரியங்களில் அரசாங்கம் வழி காட்டினாலும், இக் கார்ப்பரேஷன் வியாபார அடிப்படையில் செயலாற்ற வேண்டுமென்பதே நோக்கம்.

உண்மையில் இக் கார்ப்பரேஷன் 1956 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதி, கீழ்க் காணும் அமைப்புடன் துவக்கப்பட்டது.




இக் கார்ப்பரேஷனில் 2 நிர்வாக இயக்குநர்களும் (directors), 2 செயல்படுத்தும் இயக்குநர்களும், 14 மற்ற இயக்குநர்களும் உள்ளனர். இவர்கள் யாவரும் மத்திய அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டவர்கள். முதலீடு, கொள்கை பற்றிய எல்லாக் காரியங்களும் கார்ப்பரேஷனாலேயே தீர்மானிக்கப்படுகின்றன; முதலீடுகள் செய்வது பற்றி, முதலீட்டுக் குழுவின் (investment committee) ஆலோசனைகளை அறிந்தபின் தீர்மானிக்கப்படுகின்றது.

பங்குதாரர்களின் பழைய ஒதுக்கீடுகளின் அடிப்படையில், அவர்களின் சரியீட்டுத் தொகைகளுக்கு வழி செய்யப்பட்டது. சரியீட்டுத் தொகைகளைப்பற்றி ஏற்படும் தகராறுகளைத் தீர்க்க ஒரு தலைவரையும் (பெரு நீதிமன்றம் அல்லது உயர் நீதிமன்றத்தின் நீதிபதி அல்லது முன்னாள் நீதிபதி), மூன்று அங்கத்தினர்களையும் கொண்ட ஒரு நடுவர் நீதிமன்றம் (tribunal) உள்ளது. இவர்கள் அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டவர்கள்.

1955 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் 31ஆம் நாள், உயிர்காப்பு வர்த்தகத்தைச் செய்யும் கம்பெனிகள் 112 இருந்தன; உயிர்காப்பு இன்னும் மற்ற வர்த்தகங்களையும் செய்யும் கம்பெனிகள் 53 இருந்தன. அவைகளின் மொத்தச் சொத்துகள் ரூ. 301·33 கோடியாகும்; இதில் 45 சதவீதம் மத்திய மாநில அரசாங்கப் பத்திரங்களில் இருந்தது.

# அனுபந்தம் 4

## அயல்நாட்டு மூலதனம்

1. **சரித்திரப் பின்னணி:** தற்போதைய இந்தியாவின் தொழில், வர்த்தக முன்னேற்றம் பிரிட்டிஷ் தொழிற்றுணிவின் விளைவாகும். பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் அது அரசாங்கப் பரிவையும், ஆதரவையும் முழுமையாகப் பெற்றது. 1923ஆம் ஆண்டு இந்தியா 'காப்புக் கொள்கையைப்' (policy of protection) பின்பற்றியது; அப்பொழுது, அயல்நாட்டுத் தொழில் துணிவோர் சுங்கச் சுவர்கள் தங்களைக் காக்க, நமது நாட்டில் வேரூன்றி விடுவார்களோ என்ற பயம் எழுந்தது. இந்த அச்சம் முழுதும் பொய்த்துவிடவில்லை என்பது, இந்தியாவில் பதிவு செய்யப்பட்டுத் தோன்றிய வரையறுக்கப்பட்ட (limited) நிறுவனங்களின் எண்ணிக்கை அதிகமாக உயர்ந்ததிலிருந்து தெரிகிறது. அவைகளில் பல பெயரளவிற்கு இந்திய நிறுவனங்களாயிருந்தன. இதற்கு முக்கியமான உதாரணங்களாக, லீவர் சகோதரர்கள் (இந்தியா) வரையறுக்கப்பட்டது (Lever Brothers [India] Ltd.,), கால்டக்ஸ் (இந்தியா) வரையறுக்கப்பட்டது (Caltex [India] Ltd.,), டன்லப் ரப்பர் கம்பெனி (இந்தியா) வரையறுக்கப்பட்டது (Dunlop Rubber Co., [India] Ltd.,), இம்பீரியல் இரசாயனத் தொழிற்சாலை (இந்தியா) வரையறுக்கப்பட்டது (Imperial Chemical Industries [India] Ltd.,), முதலியவற்றைக் குறிப்பிடலாம். பல பொருளாதாரத் தொழிற்றுணிவுகளில், உதாரணமாக, பாங்குகள், கப்பல் தொழில், உயிர்காப்பு, ரப்பர், தேயிலை, காப்பித் தோட்டங்கள், சணல் உற்பத்திகள் முதலியவற்றில், அந்நிய மூலதனத்தின் முக்கியக் கட்டுப்பாடு உள்ளது. சுதந்தரத்திற்கு முன் அந்நிய மூலதனத்திற்கு எதிராகக் கூறப்பட்ட குறைபாடுகளாவன: (i) இலாபத் தொகைகள் நிறைய வெளிநாடுகளுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. (ii) அயல்நாட்டு நிறுவனங்கள் தங்கள் நாட்டு இயக்குநர்களையே கொண்டிருக்க விரும்பின. (iii) பொருளாதார, அரசியல் துறைகளில் இந்தியாவிலிருக்கும் அந்நிய நாட்டு மூலதனம், இந்தியாவின் நலனுக்கு எதிராக வேலை செய்தது.

இக் குறைகளை நீக்க, அந்நிய மூலதனத்தின்மீது கீழ்வருவன போன்ற கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன: (i) அயல்நாட்டுக் கம்பெனிகள், ரூபாய் மூலதனத்துடன் இந்தியாவிலேயே அமைக்கப்பட்டு, பதிவு செய்யப்படல் வேண்டும். அப்பொழுது இந்தியர்களும் அதில் பங்கு எடுக்கமுடியும்; ஐரோப்பிய வர்த்தகர்களுக்கும் இந்தியாவின் தேசீய நலனுக்கு உதவ எண்ணம் வரும். (ii) பாங்குகளில் ஒரு பகுதி இந்தியர்கள் முதலீடு செய்வதற்காகவே ஒதுக்கப்பட

வேண்டும்; இப்பொழுது அந் நிறுவனத்தின்மீது இந்தியர்களின் கட்டுப்பாடு இருக்கும். (iii) இயக்குநர்களில் ஒரு சதவீதம் இந்தியர்களாக இருக்கவேண்டும். (iv) வேலே கற்கும் இந்தியருக்குப் பயிற்சி அளிக்க எல்லா வசதிகளேயும் கொடுக்கவேண்டும்; கீழ்ப்படியாதவர்களுக்குத் தகுந்த தண்டனேயும் கொடுக்கவேண்டும்.

அயல்நாட்டு மூலதனத்தைப்பற்றி அனுசரிக்கப்படவேண்டிய கொள்கை, அரசிறை வருமானக் குழுவாலும் (1921-4) (Fiscal Commission), 1924ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட அயல்நாட்டு மூலதனக் குழுவாலும் (External Capital Committee) பரிசீலனே செய்யப்பட்டது. இவ் விரு குழுக்களும் அந்நிய மூலதனத்தின்மீது கட்டுப்பாடுகள் விதிப்பை ஆதரித்தன. ஆயினும் அவை விரும்பிய கட்டுப்பாடுகள், இந்திய தேசீயத் தலேவர்கள் விரும்பிய அளவைவிடக் குறைவாகவே இருந்தன. ஆயினும் இக் கட்டுப்பாடுகள் (கடினமாயிருந்தாலும் சரி, தளர்த்தப்பட்டவையாக இருந்தாலும் சரி) செயல்படுத்தப்படவேயில்லே. அதற்கு மாருக, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம், அந்நிய மூலதனத்திற்கு எதிரானது எனச் சொல்லக்கூடிய எந்த ஏற்பாட்டையும் செய்யமுடியாத நிலேயை உருவாக்கிவிட்டது.

2. **சுதந்தரத்திற்குப் பின்:** சுதந்தரத்திற்குப் பின், அயல்நாட்டு முதலீட்டுக்குச் சாதகமாக இந்தியக் கருத்து உருவாகத் தொடங்கியது. இதற்கான காரணங்களில் முதல் காரணம் அப்பொழுது இந்தியா அந்நிய நாட்டுப் பொருளாதார ஆதிக்கத்தினின்று விடுபட்டிருந்தது. மேலும் தன் ஐந்தாண்டுத் திட்டங்களே நிறைவேற்ற இந்தியாவிற்கு அயல்நாட்டு மூல தனமும், தொழில்முறை அனுபவமும் வேண்டியனவாக இருந்தன. 1948ஆம் ஆண்டின் தொழிற் கொள்கைத் தீர்மானம், அந்நிய மூலதனமும், தொழிற்றுணிவும், நமது தொழில் முன்னேற்றத்தில், சிறப்பாகத் தொழில் முறையிலும், அறிவிலும் பங்கெடுப்பது, அம் முன்னேற்றத்தை விரைவு பெறச் செய்யும் எனக் கூறியது. ஆயினும், அவ்வாறு பங்கெடுக்கும் பொழுது, அதற்கான நிபந்தனேகளே, நாட்டின் நலனே மனதில் கொண்டு மிகக் கவனமாகச் செய்தல் வேண்டும். தொழில் உடைமையிலும், தொழிற் கட்டுப்பாட்டிலும், பெரிய பங்கு இந்தியர்கள் கைகளிலேயே இருக்கவேண்டுமென்பது ஒரு முக்கிய விதியாகும். சிறப்பு நிகழ்ச்சிகளில் நாட்டின் நலனேக் கருதிச் செயலாற்ற அதிகாரம் இருக்கும். எல்லாத் துறைகளிலும், வருங்காலத்தில் அந்நிய நிபுணர்களுக்குப் பதிலாக இந்திய நிபுணர்களே நியமிக்க இந்தியப் பணியாளர்களுக்குத் தகுந்த பயிற்சி அளிப்பது வலியுறுத்தப்படும்.

அனுபவ பூர்வமாக விரைவில் ஓர் உண்மை வெளியாயிற்று. இந்த அறிக்கையின் கட்டுப்பாடுகள் நிறைந்த தொனி, அயல்நாட்டு மூலதனத்தை முதலீடாகப் பெறுவது எவ்வளவு கடினமான காரியம் என்பதை மறந்துவிட்டது. ஆகவே, 1949ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6ஆம் நாள், பிரதம மந்திரி பாராளுமன்றத்தில் கீழ்க்கண்ட உறுதிப்பாடுகளுடன் ஓர் அறிக்கையை வெளியிட்டார்: (i) இப்பொழுது இருக்கும் அயல்நாட்டுத் தொழில் நிறுவனங்கள்மீது, இந்திய நிறுவனங்கள்மீது விதிக்கப்படாத எந்தக் கட்டுப்பாடும் விதிக்கப்படுவதில்லை. (ii) உண்மையானதோர் உற்பத்தித் திட்டம் வேண்டும். (iii) அவ்வாறான முதலீடு, உள்நாட்டு முதலீடு குறைவுபடும் துறைகளிலும், தொழில் முறை அனுபவம் கிடைக்காமல் இருக்கும் துறைகளிலும் வரவேண்டும். (iv) இறக்குமதிகளைக் குறைப்பதன்மூலமோ, ஏற்றுமதிகளை அதிகரிப்பதன்மூலமோ, அம்முதலீடு அயல்நாட்டு வாணிகச் செலாவணியை மீதப்படுத்த வேண்டும். (v) அத் திட்டம் உற்பத்தித் திறனை அதிகரிக்க வேண்டும். (vi) உயர்ந்த தொழில்முறை, நிர்வாகப் பதவிகளுக்காக, இந்திய ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

அடுத்த பக்கத்தில் வரும் அட்டவணை, இந்தியாவிற்கு எவ்வளவு சிறிய அளவில் அந்நிய மூலதனம் கிடைத்திருக்கிறது என்பதைக் காட்டுகிறது:[1]

முதல் ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டதில், அயல்நாட்டு உதவி ஒரு முக்கியப் பங்கு எடுத்திருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தொழில் முறைக் கூட்டுறவு உதவித் திட்டத்தின் (U. S. Technical Co-operation Assistance Scheme) கீழ் ரூ. 29 கோடி நிதியுதவியைக் கொண்டு, மலேரியாக் கட்டுப்பாட்டிற்கான சாதனங்கள், குழாய்க் கிணறுகள் வெட்டுதல், இருப்புப் பாதைகளின் உருள் கலங்கள், சமுதாய நல முன்னேற்றத் திட்டத்திற்கான சாதனங்கள் முதலியவற்றை வாங்கினர். பன்னாட்டுப் பாங்கிலிருந்து (International Bank) பெற்ற கடன் ரூ. 6·2 கோடி, பொகாரோ-கோனர் (Bokaro-Konar) திட்டத்திற்கு வேண்டிய சாதனங்களை வாங்குவதில் உபயோகமாயிற்று. கனடா அரசாங்கத்தின் நிதியுதவிகள் மயூராக்சி திட்டத்திற்கான (Mayurakshi project) மின்சார சாதனங்களை வாங்குவதற்காகவும், மற்ற காரியங்களுக்காகவும் உபயோகப்படுத்தப்பட்டன.

[1] G. H. Nosluoc, 'We can use foreign capital and Still stay Free'. (Times of India, 26 January 1956.)

| தேசங்கள் | வருடம் | அயல்நாட்டு முதலீடு | | மக்கள் தொகை (மிலியன்) | தலா முதலீடு (டாலர்கள்) |
|---|---|---|---|---|---|
| | | $ மிலியன் | ரூ. கோடி | | |
| ஆஸ்திரேலியா ... ... ... | 1955 | 387 | 184 | 8 | 45 |
| கனடா ... ... ... | 1955 | 6,000 | 2,850 | 14 | 400 |
| பிரேசில் ... ... ... | 1954 | 1,050 | 499 | 53 | 19 |
| மெக்ஸிகோ ... ... ... | 1954 | 523 | 248 | 27 | 19 |
| மேற்கு ஜெர்மனி ... ... | 1954 | 278 | 132 | 50 | 6 |
| யுனைடெட் கிங்டெம் ... ... | 1954 | 1,245 | 591 | 50 | 25 |
| வெனிசூலா ... ... ... | 1954 | 981 | 463 | 5 | 196 |
| இந்தியா ... ... ... | 1953 | 65 | 31 | 360 | 0·18 |

**3. இந்தியாவின் அயல்நாட்டுக் கடன்கள் :** 1953 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம், 31 ஆம் நாள், இந்தியாவின் நீண்டகால அயல்நாட்டுக் கடன்கள் ரூ. 1,036 கோடியாக இருந்தது. இத் தொகையில் ரூ. 583 கோடி அரசாங்கத் துறைக்கும், ரூ. 453 கோடி தனியார் துறைக்குமாக இருந்தன.

தனியார் துறைக் கடன்கள் இருவகை முதலீடுகளைக் கொண்டிருந்தன. ஒன்று 'போர்ட் போலியோ' (port folio) வகை. இதில் முதலீடு, அது கொடுக்கும் வருமானத்திற்காகச் செய்யப்படுகிறது; இன்னொரு வகை, 'நேர்முக' (direct) முதலீடு ஆகும். இதில் உடைமை உள்ளோனுக்குக் கட்டுப்பாடு, நிர்வாக அதிகாரங்களும் கிடைக்கும். இவ்வாறுன 'போர்ட் போலியோ'க் கடன்கள் ரூ. 70 கோடியும் 'நேர்முக' முதலீடுகள் ரூ. 349 கோடியும் இருந்தன.

தனியார் துறையில் முதலீடு செய்யப்பட்ட மொத்தத் தொகை ரூ. 453 கோடி, சம மதிப்பு (equity value) அடிப்படையில் நோக்கும் பொழுது வியாபாரத் துறையில் ரூ. 419 கோடியாக இருக்கிறது. இதில் 82 சதவீதம், பிரிட்டிஷ் முதலீட்டைக் குறிக்கிறது (ரூ. 347 கோடி). இதில் 86 சதவீதம் நேர்முக முதலீடுகளாகும் (ரூ. 297 கோடி). இதில் அடுத்தபடியாக வரும் பெரிய முதலீட்டு நாடு அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகும். அதன் மொத்த முதலீடு ரூ. 31 கோடி. இம் முதலீட்டில் பெரும் பகுதி, உற்பத்தி, வாணிக நிறுவனங்களில் நேர்முக முதலீடு ஆகும். இதில் முக்கிய அங்கம் வகிக்கும் மற்ற நாடுகளாவன : பாகிஸ்தான், மலேயா, சிலோன், ஸ்விட்ஸர்லாந்து, கனடா, பர்மா முதலியன. இந் நாடுகளின் மொத்த முதலீடு ரூ. 17 கோடி. மீதமிருக்கும் ரூ. 34 கோடி முதலீடு வைப்புகளாக இருக்கும் குறுங்காலக் கடன்கள், கடன்கள் (loans,) முன் பணம், கம்பெனிகளுக்கிடையேயும், கிளைகளுக்கிடையேயும் நிலுவை பாக்கிகள், செலாவணிப் பத்திரங்கள் முதலியவற்றில் இருந்தன.

அடுத்த பக்கத்தில்வரும் அட்டவணை இரு விஷயங்களைக் காட்டுகிறது : (i) அயல்நாட்டு நேர்முக முதலீட்டினுல் நடத்தப்படும் தொழில்கள். (உதாரணமாக அயல்நாட்டு நிறுவனங்களின் இந்தியக் கிளைகள் அல்லது இந்தியக் கூட்டுப்பங்குக் கம்பெனிகள் (ii) போர்ட் போலியோ (port folio) முதலீட்டு வாணிகம்.[1]

[1] Survey of India's Foreign Liabilities and Assets (Reserve Bank of India, 1955) p. 39. எண்கள் ரூபாயைக் கோடியில் குறிப்பிடுகின்றன.

| வாணிகம் | கிளைகள் | நேர்முக முதலீடு | போர்ட் போலியோ முதலீடு | மொத்தம் |
|---|---|---|---|---|
| உற்பத்தி செய்தல்— | | | | |
| சணல், கயிற்றுப் பொருள்கள் ... ... | 9·67 | 1·93 | 3·69 | 15·29 |
| மின்சாரப் பொருள்கள் ... ... ... | 4·36 | 6·89 | 0·75 | 12·00 |
| கனிப்பொருள் எண்ணெய்கள், உற்பத்திகள்... | 9·52 | 0·05 | 0·12 | 9·69 |
| சிகரெட், புகையிலை ... ... ... | — | 25·33 | 0·31 | 25·64 |
| வாணிகம்— | | | | |
| கனிப்பொருள் எண்ணெய்கள், உற்பத்திகள்... | 65·35 | 1·82 | 0·23 | 67·40 |
| உபயோகங்கள் ... ... ... | 35·15 | — | 2 15 | 37·30 |
| போக்குவரத்து ... ... ... | 8·58 | 2·30 | 2·36 | 13·24 |
| பொருளாதார முதலீடு ... ... ... | 0·19 | 8·90 | 7·03 | 16·12 |
| தோட்டங்கள்— | | | | |
| தேயிலை ... ... ... | 63·30 | 0·79 | 6·74 | 70·83 |
| மற்றவை ... ... ... | 2·14 | 15·57 | 7·61 | 25·32 |
| | | | | 292·83 |

1952 ஆம் ஆண்டு, பம்பாயில் இரு எண்ணெய் சுத்தம் செய்யும் ஆலைகளை நிறுவ, இந்திய அரசாங்கத்தினால் இரு உடன்படிக்கைகள் கையெழுத்திடப்பட்டன; ஒன்று, 'நியூயார்க் ஸ்டான்டர்டு வேகுவம் ஆயில் கம்பெனி'யுடனும் (Standard vacuum oil Company of New York), இன்னொன்று, பர்மா ஷெல் தொகுதி ஆயில் கம்பெனி களுடனும் (Burmah Shell Group of oil Companies); அவைகளின் மொத்தத் திறன் முறையே 1·2 மிலியன் டன்னும், 2 மிலியன் டன்னுமாகும். அவைகளின் மதிப்பிடப்பட்ட செலவு முறையே ரூ. 17 கோடி, ரூ. 33 கோடி ஆகும். சில காலத்திற்குப் பின் விசாகப் பட்டினத்தில் ஓர் எண்ணெய் சுத்தம் செய்யும் தொழிற்சாலையை நிறுவ, கால்டக்ஸ் (இந்தியா) லிமிடெட் கம்பெனியுடன் ஓர் ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. அதனுடைய துவக்க ஆண்டுத் திறன் (Initial Annual Capacity) 6,75,000 டன் சுத்தம் செய்யப்படாத எண்ணெயாகும். ஆகவே இம் மூன்று எண்ணெய் சுத்தம் செய்யும் ஆலைகளின் மொத்தத் திறனும் 3 மிலியன் டன்னாகும். இவை களில் மொத்த அந்நிய முதலீடு ரூ. 62·5 கோடியாகும்.

பெருவாரி அந்நிய முதலீட்டிற்கு இன்னும் மூன்று உதாரணங் கள் கொடுக்கலாம் : (i) ரூர்க்கேலாவிலுள்ள (Rourkela) இரும்புத் தொழிற்சாலை; இது மேற்கு ஜெர்மனி நிறுவனமான குருப்ஸ், டிமாக்கு (Krupps and Demag) நிறுவனத்தின் கூட்டுறவுடன் நடை பெறுகிறது. (ii) பீலாயிலுள்ள இரும்புத் தொழிற்சாலை; இது ரஷ்ய அரசாங்கக் கூட்டுறவுடன் நடைபெறுகிறது. (iii) துர்காப்பூரி லுள்ள இரும்புத் தொழிற்சாலை; இது ஒரு பிரிட்டிஷ் இரும்புக்கூட்டுக் கழகத்தின் ஒத்துழைப்புடன் நடைபெறுகிறது.

அரசாங்கத்தின் நீண்டகாலக் கடன்கள் அடுத்த பக்கத்தில் வருமாறு : (ரூபாய் இலட்சத்தில் தரப்பட்டிருக்கிறது.)[1]

பன்னாட்டு நாணய நிதிக்கும், மறு அமைப்புக்கும் முன்னேற்றத் திற்குமான பன்னாட்டுப் பாங்குக்கும் இந்திய அரசாங்கம் கொடுத் திருக்கும் பத்திரங்களின் மொத்த மதிப்பு ரூ. 212·60 கோடி ; ஓய்வுத் தொகைக் கடன் ரூ. 180·96 கோடி ; இவை இரண்டும் சேர்ந்தால், மொத்தக் கடனில் $\frac{3}{5}$ பாகமாகும்; இவைகளுக்கு வட்டி இல்லை. மற்றக் கடன்கள் ஐக்கிய அமெரிக்க நாடுகளிலிருந்தும், மறு அமைப்புக்கும்

[1] Survey of India's Foreign Liabilities and Assets (Reserve Bank of India, 1955) p. 40.

## அரசாங்கத்தின் நீண்டகாலக் கடன்கள்

| மூலம் | கடன்கள் | பத்திரங்கள்: அயல் நாட்டில் செலுத்தப்பட உள்ளவை | பத்திரங்கள்: பிரதிநிதி, ஏஜெண்டு அல்லது பாதுகாப்பாக உள்ளவை | பத்திரங்கள்: வட்டியில்லாதவையும் செலாவணித் தன்மையற்றனவும் | மற்றவை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| ஆஸ்திரேலியா ... | ... | ... | 10 | ... | ... | 10 |
| பர்மா ... | ... | ... | 101 | ... | ... | 101 |
| கனடா ... | ... | ... | 19 | ... | ... | 19 |
| சிலோன் ... | ... | ... | 238 | ... | ... | 238 |
| மேற்கு ஜெர்மனி ... | ... | ... | ... | ... | 307 | 307 |
| ஜப்பான் ... | ... | ... | 1 | ... | 193 | 194 |
| மலேயா ... | ... | ... | 20 | ... | ... | 20 |
| நியூஸீலந்து ... | ... | ... | 13 | ... | ... | 13 |
| பாகிஸ்தான் ... | ... | 2,835 | 82 | ... | ... | 2,917 |
| ஸ்விட்ஸர்லந்து ... | ... | ... | 15 | ... | 4 | 19 |
| யு. கே. ... | 2,633 | 26 | 371 | ... | 18,443[1] | 21,473 |
| யு. எஸ். ஏ. ... | 9,032 | ... | 78 | ... | ... | 9,110 |
| பன்னாட்டு நாணய நிதி ... | ... | ... | ... | 21,260 | ... | 21,260 |
| மறு அமைப்புக்கும், முன்னேற்றத்திற்குமான பன்னாட்டுப் பாங்கு ... | 2,160 | ... | ... | ... | ... | 2,160 |
| மற்றவை ... | ... | ... | 339 | ... | 65 | 404 |
| மொத்தம் ... | 13,825 | 2,861 | 1,287 | 21,260 | 19,012 | 58,245 |

1 இதில் ரூ. 180·96 கோடி ஓய்வுத் தொகைக் கடன் முதலீட்டு மதிப்பைக் குறிக்கிறது.

முன்னேற்றத்திற்குமான பன்னாட்டுப் பாங்கிலிருந்தும் வாங்கியவை (ரூ. 111·92 கோடி). மேலும் அயல்நாடுகளின் கைகளில் இருக்கும் நமது மத்திய, மாநில அரசாங்கங்களின் பத்திரங்கள் ரூ. 41·48 கோடி. இங்கும் யு. கே. (U. K.)தான் மிகப் பெரிய அளவில் கடன் கொடுத்துள்ள நாடாக இருக்கிறது. ஐக்கிய அமெரிக்க நாடுகளும், பாகிஸ்தானும் முக்கியத்துவத்தில் அடுத்தபடியாக வருகின்றன.

4. **இந்தியாவின் நீண்டகால அயல்நாட்டுச் சொத்துகள் :** 1953 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 31ஆம் நாள், இந்தியாவின் நீண்டகால அயல்நாட்டுச் சொத்துகள் ரூ. 1,175 கோடியாக இருந்தன; இதில் ரூ. 1,112 கோடி அரசாங்கத் துறையிலும், மீதி ரூ. 63 கோடி தனியார் துறையிலும் இருந்தன. அரசாங்கத் துறையிலிருந்த முக்கிய இனங்கள் கீழ் வருமாறு :

| | |
|---|---|
| அரசாங்கப் பத்திரங்கள் | ... ரூ. 347 கோடி |
| பாகிஸ்தானிலிருந்தும், பர்மாவிலிருந்தும் வரவேண்டிய கடன்கள் | ... ரூ. 300 கோடி |
| பன்னாட்டு நாணய நிதியிலும், மறுஅமைப்புக்கும் முன்னேற்றத்திற்குமான பன்னாட்டுப் பாங்கிலும் உள்ள வைப்புகளும், பங்களவுகளும், அவைகளுக்குச் செலுத்திய கட்டணங்களும் | ... ரூ. 229 கோடி |
| அரசாங்கத் துறையில்லாத மற்றத் துறைகளில் கீழ்வருபவை இருந்தன: | |
| அரசாங்கப் பத்திரங்கள் | ... ரூ. 26 கோடி |
| கூட்டுப் பங்குக்கம்பெனிகளின் பங்குகளும், கடன் பத்திரங்களும் | ... ரூ. 11 கோடி |
| நிலையான சொத்து | ... ரூ. 12 கோடி |
| கடன்களும், முன் பணமும் | ... ரூ. 7 கோடி |

கடன்களைப் போலவே, நமது நாட்டின் அயல்நாட்டுச் சொத்துகளில் பெரும்பகுதி யு. கே.யிலும், பாகிஸ்தானிலும் இருக்கிறது. ஆயினும் மொத்த சொத்துகளில் வியாபார முதலீடு 1 சதவீதமே இருக்கிறது என்பதைக் கவனிக்கவேண்டும். ஆனால், கடன்களில் 40 சதவீதம் வியாபார முதலீடாகும்.

அயல்நாட்டு நிதியின் முக்கிய மூலங்கள் நிறுவனங்களிலிருந்தும், அரசாங்கத்திலிருந்தும் கிடைப்பதுண்மையே; ஆயினும், நியாயமான

இருவருக்கும் இலாபமுள்ள முறையில், அயல் நாட்டு முதலாளிகள் நம் நாட்டு நிறுவனங்களில் பங்கு எடுத்து நிதி உதவி அளிப்பது சாத்தியமாகும். அரசாங்கம், அத்தகைய அந்நியர் பங்கெடுப்பதன் அவசியத்தைப் பற்றிக் கூறுவதோடு அதைத் தனியார் வியாபார நிறுவனங்கள் எவ்வாறு ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதைப் பற்றியும் கூறி இடையீடு செய்கிறது. இவ்விதமாக அரசாங்கத்தின் இடையீடு மிக அதிகமாகவும், முன்னேற்றத்தைத் தடைசெய்வதாகவும் உள்ளது எனக் குறைகள் கூறப்படுகின்றன. இரு பக்கங்களும் திருப்திகரமான முறையில் ஒரு முடிவிற்கு வர, அவைகளுக்கு அதிக சுதந்தரம் இருக்க வேண்டும். ஒரு சராசரி இந்திய வர்த்தகன் தன் நலன்களை நன்கு உணர்ந்தவனுவான். அவனுக்கு அயல் நாட்டவருடன் பேரம் பேசி இலாபம் பெற முழுத்திறமை உண்டு. அரசாங்கக் கட்டுப்பாட்டின் நீண்ட வழி முறைகள் தேவையற்ற கால தாமதத்தை உண்டாக்குகின்றன. அரசாங்க விதிகளின் இரும்புச் சட்டத்திற்குள் நடமாடும் அரசாங்க அலுவலர்களுக்குச் சிக்கல் நிறைந்த பேரங்கள் மேற்கொள்ளும்பொழுது இருக்கவேண்டிய நெகிழ்ச்சி இல்லை. அதன் விளைவாக நாட்டின் நலனுக்கான அநேக திட்டங்கள் தோல்வி அடைந்துவிடுகின்றன. இப்பொழுது அயல் நாட்டுத் தனியார் முதலீட்டைத் தடைசெய்யும், எல்லாக் கொள்கைகளையும் வழிமுறைகளையும் சரி பார்க்க அரசாங்கம் விழைந்திருக்கிறது.

1956 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், 6 ஆம் நாள், பிரிட்டிஷ் பொருளாதாரத் துறையினர், நிதியாளர் தூதுவர் குழுவின் அங்கத்தினரான திரு. ஜே. மக்கார்ட்னி அவர்கள் (Mr. J. Macartney) கோயம்புத்தூரில் பேசும்பொழுது, 'அயல் நாட்டு மூலதனம் முன்னைப் போல் பெரிய இலாபத்தை எதிர்பார்ப்பதில்லை' எனக் குறிப்பிட்டார். நியாயமான இலாபத்தை எதிர்பார்க்கும் அளவுக்கு அது முன்னேறி விட்டது. அது பயப்படுவதெல்லாம், 'கோபமூட்டும் கட்டுப்பாடுகளுக்கும்,' 'தேசீயமயமாக்கும் அரசியல் கருத்துகளுக்கும்', 'தண்டனையாக விதிக்கப்படும் வரி'களுக்குமே. இந்த அச்சங்களையெல்லாம் எந்த அளவுக்கு நீக்க முடியும் என அரசாங்கம் சிந்திக்க வேண்டும். வரி விதிப்பைப் பொறுத்த மட்டில், இந்தியாவில் முதலீடு செய்யும் அயல் நாட்டினருக்கு ஏற்படும் ஒரு துன்பம், அவர்கள் இரு நாடுகளிலும் வருமான வரி செலுத்த வேண்டும் என்பதாகும். அவர்கள் இந்தியாவில் உச்ச வீதத்தில் வருமான வரி செலுத்துவதோடு அவர்களுடைய நாட்டிலும் செலுத்தவேண்டியதாயிருக்கிறது. அண்மையில் இக் குறையைப் போக்கச் சில ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். ஜெர்மனி, யு. கே. முதலிய நாடுகளிலிருந்து முதலீடு செய்பவர்களுக்குச் சில ஏற்பாடுகள் உள்ளன. இவைகளின் மூலமாக, இரு

நாடுகளின் வருமான வரி வீதங்களில் உள்ள வேறுபாட்டு அளவிற்கு நிவாரணம் கிடைத்துள்ளது.

இப்பொழுதுள்ள அரசாங்கக் கொள்கையின்கீழ், அயல்நாட்டு மூலதனம், உண்மையான உற்பத்தித் திட்டம் உள்ள தொழில்களில் மட்டுமே பங்கெடுக்கலாம். மேலும் இவ்வாறு மூலதனம் பெறுவதற்குப் பதிலாக, இயந்திரங்களை இறக்குமதி செய்வதை அரசாங்கம் விரும்புகிறது. இது சில சமயங்களில் இடுக்கண்களை உண்டாக்குகிறது. இதன் விளைவு யாதெனில், முதலீடு செய்வோனுடைய நாட்டிலிருந்தே இயந்திரங்களை வாங்கவேண்டும். அதே இயந்திரங்கள் மற்ற நாடுகளில் மலிவாகக் கிடைத்தாலும்கூட நாம் அவைகளை வாங்கமுடியாது. இரண்டாவதாக அயல்நாட்டிலிருந்து முதலீடு செய்வோருக்கு, முக்கியமாக அயல்நாட்டு நிதியளிக்கும் நிறுவனங்களுக்கு, நமக்குத் தேவையான இயந்திரங்களை அளிப்பது கடினமாகும். ஆகவே மற்ற அம்சங்களையெல்லாம் நாம் விரும்பும் பொழுது அக் காரியங்களில், இந்த நிபந்தனையை வற்புறுத்தலாகாது.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் மொத்த நிதித் தேவையில் 15 சதவீதம் அயல் நாட்டு மூலதனத்தின் வழியாகக் கிடைக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. திட்டத்திற்கு அயல் நாட்டு மூலதனத்தின் முக்கியத்துவம் அடிப்படையானதாகும். அது ஏதோ ஓர் அவசியமற்ற பகுதியன்று. முன்னேற்றத் திட்டத்தின் அநேக பகுதிகள் வெற்றிகரமாக நிறைவேற அந்நிய மூலதனம் அவசியமாகும். அதனால் கிடைக்கும் அயல்நாட்டுச் செலாவணியும் அவசியமாகும். 1956 ஆம் ஆண்டு, அரசாங்கம் கணிசமான அளவில் கடனுக்காக உலக பாங்கை நெருங்கியது. திட்டம் செயல்படுத்தப்படும்பொழுது உண்டாகும் தேவைகளை நிறைவேற்றப் பல தவணைகளில் இக் கடன் உபயோகமாகும். அதன் பின் உலக பாங்கின் தலைவர், நிதி அமைச்சருக்கு எழுதிய கடிதத்தில், இந்தியத் தொழில் கொள்கையைப்பற்றித் தம் கருத்துகளைத் தெரிவித்தார். ஆனால் இக் கருத்துக்கள் தேவையற்றவை என்றும் இடையீடு செய்பவையென்றும் சிலர் கருதினர்.[1] ஆகவே நிதியுதவி அளிக்கும்பொழுது உலக பாங்கு கவனிக்கவேண்டிய முக்கியக் கொள்கையைப்பற்றி ஒரு குறுகிய விளக்கம் கூறலாம்.

கடன் நடவடிக்கைகளைப் பொறுத்தவரை பாங்கு உறுதியான வியாபார நோக்கைக் கொண்டிருக்கவேண்டும். கடன்களுக்கு அனுமதி அளிக்கும்பொழுது, கடன் வாங்குபவர்கள் அதைக் கொடுக்கத் தவருது இருக்க எல்லா முன்னெச்சரிக்கையும் எடுத்துக்கொள்ள

[1] கடைசி அத்தியாயம் பிரிவு 44 ஐக் காண்க.

வேண்டும். உலக பாங்கு கடன் வழங்கும்பொழுது நாடுகளின் அரசியல் தகுதியைவிட, பொருளாதாரத் தகுதிகளையே நோக்க வேண்டும். அந் நாடுகளின் தனிப்பட்ட கருத்துகளோ, வெளி நாட்டுக் கொள்கைகளோ, அந் நாடுகளின் பொருளாதார அல்லது அரசியல் உறுதியைப் பாதித்தாலன்றி, அவைகளைக் கவனித்தலாகாது. பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்தில் பாங்கு நட்புறவும், பரந்த மனப்பான்மையும் சிறப்பான ஊக்கமும் கொண்டிருக்கவேண்டும். அந் நாடுகளை நெருக்கடி நிலைக்கு உட்படுத்துதலும் கூடாது. பல நாடுகளுக்கும் கடன் வழங்குவதை முன்னல் இருந்ததைவிட நல்ல முறையில், பாரபட்சமின்றிச் செய்வதே பாங்கின் தொழில் நோக்கமாக இருத்தல் வேண்டும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில், அந்நிய முதலீட்டுக்குரிய சூழ் நிலைகள், இரண்டு உலகப் போர்களின் காரணமாகப் புரட்சிகரமான மாறுதல்களை அடைந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் முதல் பாகத்திலும் யுனைடெட் கிங்டெம் ஒரு பெரிய கடன் கொடுக்கும் நாடாக இருந்தது. அதன் பேரரசு, பிரிட்டிஷ் நாட்டு முதலாளிகள் கீழடங்கிய நாடுகளின் வளனைத் தங்கள் நலனுக்காக உபயோகிக்கச் சாதகமாயிருந்தது. சந்தர்ப்ப வசமாக எப்பொழுதாவது அக் கீழடங்கிய நாடுகளும் பயன்பெற்றன. ஆனல் இரு உலகப் போர்களும் இங்கிலாந்தையும். ஐக்கிய அமெரிக்க நாடுகளைத்தவிர, போரில் ஈடுபட்ட மற்ற நாடுகளையும் வறுமைக் குள்ளாக்கின. இந் நாடுகளில் இரண்டாம் உலகப் போரின் முடிவில் அயல் நாட்டு முதலீட்டுக்கு மூலதனமே இல்லை. கிடைக்கும் முழு மூலதனமும், மறு அமைப்புக்காகத் தேவைப்பட்டது. அதே நேரத் தில், பின்தங்கிய கடன் வாங்கும் நாடுகளில், அந்நிய மூலதனம் தங்கள் வளனையெல்லாம் கட்டுப்பாடு அற்ற முறையில் இதுவரை பயன்படுத்தி வந்ததைக் குறித்து ஓர் அரசியல் கிளர்ச்சி தோன் றிற்று. அந்நிய மூலதனத்தின் உபயோகத்தை அவைகள் உணர்ந் தாலும், அம் மூலதனம், எவ்வாறு எந்த நிபந்தனைகளின்மேல் முதலீடு செய்யப்படுதல் வேண்டும் எனக் கூறும் உரிமையை விரும் பின; இதில் முதல் நோக்கம் என்னவெனில் தன் மக்களின் நலனும் பொருளாதார முன்னேற்றமுமாகும். வளர்ச்சி குறைந்த நாடுகள் இவ்வாருக, முதலீடு செய்வதற்கும், வளனை உபயோகிப்பதற்கும் கவர்ச்சியற்ற விதமாகக் காட்சியளித்தன.

தூர நாடுகளிலிருக்கும் தனிப்பட்ட முதலீடு செய்வோருக்கு, இப்பொழுதுள்ள நிலையில் மற்ற நாடுகளில் முதலீடு செய்வதிலுள்ள இடுக்கண்களைச் சரியாக உணரமுடிவதில்லை. இதை உலக நிறுவனங் களான மறு அமைப்புக்கும் முன்னேற்றத்திற்குமான பன்னாட்டு

பாங்கு போன்றவை நன்கு செய்யமுடியும். ஆனால், அத்தகைய நிறுவனங்கள், பொருளும் புகழும் படைத்த அமெரிக்க ஐக்கிய நாடுகளால் ஆதிக்கம் செலுத்தப்படுகின்றன; அந் நிறுவனங்களின் பொருளாதாரக் கொள்கைகள், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சார்புடைய அரசியல் கொள்கைகளின் அடிப்படையில் எழுந்தவை என்ற ஐயமும் உள்ளது. இப்பொழுது பல நாடுகளிடையே கடன் கொடுப்பதானது, ஓர் அரசாங்கத்திற்கும் மற்றோர் அரசாங்கத்திற்குமிடையே நடைபெறும் ஒரு காரியமாக ஆகிவிட்டது. தற்பொழுது மிக அதிகமாகக் கடன் கொடுப்பது ஐக்கிய அமெரிக்க நாடுகளாகும். அரசியல் கருத்துகளும், இராணுவ நோக்கங்களும் இங்கு முக்கியமாக இருக்கின்றன.[1] அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் அரசியலில் தோழமை கொண்ட நாடுகளுக்கும், சோவியத் ரஷ்யாவுடன் நட்புறவு இல்லா நாடுகளுக்கும், அமெரிக்கக் கஜானாவிலிருந்து பொருளுதவிகளும் கடன்களும் குவிந்த வண்ணம் இருக்கின்றன. ஆனால், இந்தியாவைப் போன்ற சார்பற்ற, நடுநிலைமை வகிக்கும் நாடுகளுக்கு அவை பெரும் அளவில் கிடைப்பதில்லை. அண்மையில் சோவியத் ரஷ்யாவிற்கும், அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் இடையே போட்டி மனப்பான்மை ஏற்பட்டுள்ளது. ஒவ்வொரு நாடும், நடுநிலைமை வகிக்கும் நாடுகளுக்குப் பொருளுதவியையும், தொழிலுதவியையும் அளிப்பதன்மூலம் அவைகளின் நல்லுறவைப் பெற முயலுகின்றது. இக் காரியத்தில் இவ் விரு நாடுகளும் சமமாக இல்லை; அமெரிக்க ஐக்கிய நாடுகள் இவையிரண்டிலும் வலிமை மிக்கதாய் இருக்கிறது. ஆகவே, இந்தியா தன் ஐந்தாண்டுத் திட்டங்களுக்குத் தொடர்ச்சியாக, கணிசமான அளவில் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்து உதவி எதிர்பார்க்க வாய்ப்புகள் உள்ளன.[2]

[1] ஆயினும் இந்தியாவைப் போன்ற எளிமை மிகுந்த நாடுகளுக்குச் செல்வம் மிகுந்த ஐக்கிய அமெரிக்க நாடுகள் செய்யும் நிதியுதவி ஒரு மக்கட்பணி என்பதில் ஐயமில்லை; இதை மறுப்பது பண்பாடற்ற தன்மையாகும்.

[2] 1956ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம், நேரு - ஐசன்ஹோவர் பேச்சுக்களுக்குப் பின், இவ் வாய்ப்புகள் அதிகரித்துள்ளன; முன்னைவிட இப்பொழுது இரு நாடுகளும் மற்றைய நாட்டின் கொள்கைகளையும் நோக்குகளையும் நன்றாக அறிந்திருக்கின்றன.

# அனுபந்தம் 5

## மாநிலங்களின் மறு அமைப்பு

1956 ஆம் ஆண்டு நவம்பர் 1 மாதம் முதல் தேதியன்று செயலுக்கு வந்த மாநிலங்களின் மறு அமைப்புச் சட்டத்தினுல் (States Reorganisation Act) கீழ்க்கண்ட மாநிலங்கள் அமைக்கப்பட்டன:

| மாநிலங்கள் | பரப்பளவு (சதுரமைல் களில்) | மக்கள் தொகை[1] |
|---|---|---|
| 'ஏ' பிரிவு | | |
| ஆந்திரப் பிரதேசம் ... | 105,962 | 31,260,133 |
| அஸ்ஸாம் ... | 85,012 | 9,043,707 |
| பீகார் ... | 67,164 | 38,779,562 |
| பம்பாய் ... | 190,919 | 48,265,221 |
| கேரளா ... | 15,035 | 13,549,118 |
| மத்தியப் பிரதேசம் ... | 171,201 | 26,071,637 |
| சென்னை ... | 50,110 | 29,974,936 |
| மைசூர் ... | 74,347 | 19,401,193 |
| ஒரிஸ்ஸா ... | 60,136 | 14,645,946 |
| பஞ்சாப் ... | 47,456 | 16,134,890 |
| இராஜஸ்தான் ... | 132,078 | 15,970,774 |
| உத்தரப் பிரதேசம் ... | 113,409 | 63,215,742 |
| மேற்கு வங்காளம் ... | 33,958 | 26,306,602 |
| மொத்தம் ... | 1,146,787 | 352,619,461 |
| 'பி' பிரிவு | | |
| ஜம்முவும் காஷ்மீரும் ... | 92,780 | 4,021,616[2] |
| 'சி' பிரிவு | | |
| அந்தமான் நிக்கோபார் தீவுகள். | 3,215 | 30,971 |
| டெல்லி ... | 578 | 1,744,072 |
| ஹிமாசலப் பிரதேசம் ... | 10,904 | 1,109,466 |
| லக்கடிவ், மினிகாய், அமிந்திவித் தீவுகள் ... | 10 | 21,035 |
| மணிப்பூர் ... | 8,628 | 577,635 |
| பாண்டிச்சேரி, மாஹி, காரைக்கால், ஏனும் முதலியன ... | 196 | 317,259 |
| திரிபுரா ... | 4,032 | 639,029 |
| மொத்தம் ... | 27,563 | 4,439,467 |
| ஆக மொத்தம் ... | 1,267,130 | 361,080,544 |

1 1951 ஆம் ஆண்டுப் புள்ளி விவரங்கள்.

2 1941 ஆம் ஆண்டுப் புள்ளி விவரங்கள் (பழங்குடிமக்கள் வாழும் இடங்களைத் தவிர).

மேற்கு வங்காளம் - பீகார் எல்லைக்கோடு, 1956 ஆம் ஆண்டின் பீகார் மேற்கு வங்காளம் (நிலப்பரப்பை மாற்றுதல்) சட்டத்தால் தீர்மானிக்கப்பட்டது.

## அனுபந்தம் 6

### தசாம்ச நாணயவகை (Decimal Coinage)

1955ஆம் ஆண்டின் இந்திய நாணய வகைத் திருத்தச் சட்டம் (The Indian Coinage [Amendment] Act 1955) தசாம்ச நாணய முறையைத் துவக்க உதவியாயிருந்தது; அதன் பின், 1957ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி, தசாம்ச நாணய வகையைத் துவக்கும் அறிக்கையை அரசாங்கம் வெளியிட்டது. அதன் பின் வரும் மாற்றம் நிதானமாக ஐந்து ஆண்டுக் காலத்தில் பரவலாக நிகழும். இக் காலத்தில் பழைய நாணயங்கள் சிறிது சிறிதாகப் புழக்கத்திலிருந்து நிறுத்தப்பட்டுப் புது நாணயங்கள் புழக்கத்திற்குக் கொண்டுவரப்படும்.

2 அணு, 1 அணு, ½ அணு, ஒரு பைசா நாணயங்கள் சிறிது சிறிதாக மறைந்துவிடும். இவைகளுக்குத் தசாம்ச முறையில் சமமான மதிப்புள்ள நாணயங்கள் கிடையா. இவைகளுக்குப் பதிலாக முறையே 10, 5, 2, 1 நயே பைசா நாணயங்கள் வந்துள்ளன. உண்மையில், 1957ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி இந் நாணயங்கள் செலாவணிக்கு வந்தன. இதற்குப் பின் உயர்ந்த மதிப்புள்ள 25 நயே பைசே, 50 நயே பைசே, ரூபாய் (100 நயே பைசே) நாணயங்களையும் வெளியிட அரசாங்கம் தீர்மானித்துள்ளது. அதுவரை இப்பொழுதிருக்கும் கால் ரூபாய், அரை ரூபாய், ரூபாய் நாணயங்கள் முதலியன, மதிப்பில் எவ்வித மாற்றமுமின்றிச் செலாவணியில் இருக்கும்.

ஆகவே, பல்வேறு மதிப்புள்ள நாணயங்கள் கீழ்க்கண்டவாறு இருக்கும் :

| | |
|---|---|
| 1 நயே பைசே | 25 நயே பைசே (4 அணுக்கள்) |
| 2 நயே பைசே | 50 நயே பைசே (8 அணுக்கள்) |
| 5 நயே பைசே | 100 நயே பைசே (1 ரூபாய்) |
| 10 நயே பைசே | |

1957ஆம் வருடம் ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து சாதாரண வியாபார நடவடிக்கைகளில் இருவகை நாணயங்களும் ஒரே சமயத்தில் செலாவணியில் இருக்கும்; இந் நிலைமை பழைய நாணயங்கள் செலாவணியிலிருந்து முழுவதும் நிறுத்தப்படும்வரை நீடிக்கும். ஆயினும் 1957ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி அரசாங்கக் கணக்குகள் புதிய முறைக்கு மாறிவிட்டன.

இவ்வாறுன தசாம்ச நாணய முறையைத் துவக்குவது, எல்லா அளவைகளிலும் மெட்ரிக் முறையைப் புகுத்துவதன் முதற்படியாகும்.

# அட்டவணை

# GLOSSARY

## கலைச் சொற்கள்

### (ஆங்கிலம் - தமிழ்)

All India Medical Institute — அகில இந்திய மருத்துவக் கூடம்
Cash Certificates — ரொக்க உறுதிச் சீட்டுகள்
Central Board of Revenue — மத்திய வருமானக் குழு
Conduits — மின் கம்பிகளின் காப்புக் குழாய்கள்
Dividends — இலாப ஈவுகள்
Equity value — சம மதிப்பு
Indian Agricultural Research Institute — இந்திய விவசாய ஆராய்ச்சிக் கூடம்
Indian Bureau of Mines — இந்தியச் சுரங்கங்களின் அலுவலகங்கள்
Inter-State Taxation Council — மாநிலங்களுக்கு இடையேயான வரிக் குழு
Revenue - gap grants — வருமானத் துண்டு நிதியுதவிகள்
Tax evasion — வரித் தவிர்ப்பு
Transmission net work — மின்சாரத்தை ஊடனுப்பும் வலை
Wheel tax — சக்கர வரி

### (தமிழ் - ஆங்கிலம்)

அகில இந்திய மருத்துவக் கூடம் — All India Medical Institute
இந்தியச் சுரங்கங்களின் அலுவலகங்கள் — Indian Bureau of Mines
இந்திய விவசாய ஆராய்ச்சிக் கூடம் — Indian Agricultural Research Institute

| | |
|---|---|
| இலாப ஈவுகள் | — Dividends |
| சக்கர வரி | — Wheel tax |
| சம மதிப்பு | — Equity value |
| மத்திய வருமானக் குழு | — Central Board of Revenue |
| மாநிலங்களுக்கு இடையேயான வரிக் குழு | — Inter-State Taxation Council |
| மின் கம்பிகளின் காப்புக் குழாய்கள் | — Conduits |
| மின்சாரத்தை ஊடனுப்பும் வலை | — Transmission net work |
| ரொக்க உறுதிச் சீட்டுகள் | — Cash Certificates |
| வரித் தவிர்ப்பு | — Tax evasion |
| வருமானத் துண்டு நிதியுதவிகள் | — Revenue - gap grants |

